# குமரி முதல் வார்சா வரை

(பழந்தமிழ்ச் சுவடிகளைத் தேடி ஒருபயணம்)

டாக்டர் ஜி. ஜான் சாமுவேல்
இயக்குநர்
ஆசியவியல் ஆய்வு நிறுவனம்
சென்னை - 600 041

விற்பனை உரிமை
ஆசியவியல் ஆய்வு நிறுவனம்
சென்னை - 600 041

பழந்தமிழ்ப் பண்பாட்டுக் காவலர்

பொள்ளாச்சி தந்த தமிழ் வள்ளல்

அருட்செல்வர்

டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கட்கு

இந்நூல் என் அன்புக் காணிக்கை

# முன்னுரை

மண்ணுலகை விட்டு மனிதர்கள் மறையும்போது அந்த இழப்பு வாழும் மனிதர்களை எப்படியெல்லாம் வாட்டி வதைக்கின்றது என்பதை நான் அனுபவபூர்வமாகப் பலமுறை உணர்ந்ததுண்டு. இத்தகைய இழப்புக்கள் ஏற்படுத்திய ஆழமான காயங்களோடும் கொடிய மன வேதனைகளோடும் மறைந்துபோன நல்ல உள்ளங்களை எண்ணி எண்ணி வாழும் உள்ளங்கள் எப்படியெல்லாம் பரிதவிக்கின்றன என்பதையும் நான் அடிக்கடி எண்ணிப் பார்த்ததுண்டு.

தனிமனிதர்களை நடுநடுங்கவைக்கும் இதுபோன்ற பேரிழப்புக்களை ஒரு மொழிக்குழுவினர் (Linguistic Community) எப்படிச் சந்திக்கின்றனர்--அவற்றை எப்படித் தாங்கிக் கொள்கின்றனர் என்ற என்து சிந்தனையின் ஒரு பகுதியாகவே தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய எனது தேட்ட முயற்சிகளும் மீட்புப்பணிகளும் அமைந்துள்ளன என்பேன்.

இந்தத் தமிழ்த்தாய் தான் பெற்றெடுத்த எத்தனையோ இலக்கியப் பிள்ளைகளைக் காலத்தின் கோரத் தாண்டவத்திற்கும், இயற்கையின் சீற்றத்திற்கும் செந்தழலின் வெம்மைக்கும், பெருகி ஓடிய நதிகளின் நீர்ப்பெருக்கிற்கும் தாரைவார்த்துக் கொடுத்துக் கையற்று அழுது புலம்பி நின்றுள்ளாள் என்பதை நான் பலமுறை ஈரம் சுமந்த விழிகளோடு நினைத்துப் பார்த்ததுண்டு.

இம் மண்ணில் வாழ்ந்த மனிதர்களின் மூடநம்பிக்கைகளாலும் கவனக்குறைவாலும் அவள் இழந்து நின்ற கலைச்செல்வங்கள் தான் எத்தனை எத்தனை! சமயப் பூசல்களின்போது மனிதக் கொடுமைக்காக அவள் பலிகொடுத்த இலக்கியக் குழந்தைகள் தான் எத்தனை எத்தனை! மாற்றார் படையெடுப்பின்போதும் வேற்றார் சூழ்ச்சியின்போதும் அவள் இழந்து நின்ற செந்தமிழ்ப் படைப்புக்கள் தான் எத்தனை எத்தனை! சாவின் கொடிய கரங்களில் சிக்கி உலகின் பல்வேறு நாடுகளின் மூலை முடுக்குகளிலெல்லாம் இன்றும் படிப்படியாகச் செத்துக் கொண்டிருக்கும் தமிழ் இலக்கிய மதலைகள் தான் எத்தனை எத்தனை! இவற்றைத் தேடும் எனது முயற்சியை அடித்தளமாகக் கொண்டு மலர்ந்ததே இந்நூல் என்பேன்.

இழந்து போனதைத் தேடுவது பற்றிக் கிறிஸ்தவத் திருமறை அழுத்தமாக மீண்டும் மீண்டும் பேசும் செய்திகளைச் சிறுவயதில் நான் பலமுறை ஆழமாக மனப்பதிவு செய்து வைத்ததுண்டு. காணாமற்போன மகன் - காணாமற்போன ஆடு - காணாமற்போன காசு என்று பல கதைகளைத் தெளிவாகச் சொல்லி இந்த அழகான இறையியல் அடிக்கருத்தை (theme) கிறிஸ்து பெருமான் விளக்க முயன்றதைச் சிறுவயதில் பலமுறை நான் அசைபோட்டதை இப்போது எண்ணிப்பார்க்கிறேன்.

தேடுதல் (Quest) என்பது பல்வேறு உலகச் செந்நெறி இலக்கியங்கள், சமயங்கள் ஆகியவற்றின் அடிக்கருத்தாக, இயக்கு சக்தியாக அமைவதை நான் பலமுறை ஆழ்ந்து சிந்தித்ததுண்டு. ஏதோ ஒன்றைத் தேடிச் செல்வதாகவே பயனுள்ள மனிதனின் வாழ்க்கைப்பயணமும், பண்பட்ட மனிதனின் ஆன்மீகப் பயணமும் அமைகின்றன. எனது தேடும் பயணம் பெரும்பாலும் தமிழ்மொழி, இலக்கியம்,

பண்பாடு ஆகியவற்றைச் சார்ந்ததாகவே இருந்துவந்துள்ளதை நான் உணர்கிறேன். அழிந்து போன கலாச்சாரப் பாரம்பரியங்களைத் தேடுவதோடு மட்டுமின்றி அழியவிருக்கும் கலைக் கருவூலங்களை அழிவிலிருந்து பாதுகாக்கும் மீட்புப் பணியும் எனது தேடுதலின் ஒரு பகுதியாக இருக்கவேண்டும் என்று நான் விரும்பியதுண்டு. இந்தத் தேட்டத்தின் ஒரு பகுதியாகவே வார்சா நோக்கிய எனது பயணம் அமைந்துள்ளது என்பேன்.

தமிழ் ஓலைச்சுவடிகளைத் தேடி நான் மேற்கொள்ளும் பயணத்திற்கு நம்பிக்கைஒளி சிந்தி வழிகாட்டிய சான்றோர்களை நான் எண்ணிப்பார்க்கிறேன். தமிழ்த்தாத்தா டாக்டர் உ.வே. சாமிநாதையர், திரு. சி.வை. தாமோதரம் பிள்ளை, திரு. தியாகராச செட்டியார் போன்றோரை உள்ளடக்கிய இப்பட்டியல் நீண்டு கொண்டே போகின்றது.

நான் மேற்கொண்டுள்ள இத்தேட்டப் பயணத்தில் நான் தளர்ச்சியடையாது புதுத்தெம்புடன் நடைபோடத் துணைநிற்பவர்கள் பலர். அவர்களுள் ஜப்பானியத் தமிழறிஞர் நண்பர் டாக்டர் .ஷு உறிகோசகா குறிப்பிடத்தக்கவர். எனது ஆராய்ச்சிக் கனவுகளைச் செயல்வடிவம் பெறச் செய்வதில் இவ்வறிஞரின் பங்களிப்பினைச் சொற்களால் சிறைபடுத்திவிட முடியாது என்பதை மட்டுமே என்னால் இப்போது கூறமுடிகின்றது. இப்பணியில் நாளும் ஊக்கம் தந்து ஆர்வமூட்டி வரும் டாக்டர் கபிலா வாத்சியாயன், நீதிபதி வி.ஆர். கிருஷ்ணஐயர், டாக்டர் வா. செ. குழந்தைசாமி ஆகியோருக்கும் என் அடிமனத்திலிருந்து ஊற்றெடுத்து வரும் நன்றிப் பெருக்கினைக் காணிக்கையாகப் படைக்கும் கடப்பாடுடையேன்.

எனது பயணம் ஒரு தனிமனிதப் பயணமாக அரும்பி, ஒரு நிறுவனமாக மலர்ந்து, உலகந்தழுவிய ஒரு மாபெரும் இயக்கமாகப் பரிணமிப்பதை நான் இப்போது உணர்கிறேன். இப்பயணத்தை நான் தனியாக மேற்கொள்ளவில்லை; ஒத்த சிந்தனையுள்ள ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் அனைத்து ஆய்வாளர்கள், பணியாளர்கள் ஆகியோரின் துணையோடு தான் இதை மேற்கொள்கிறேன் என்ற உணர்வு நெஞ்சுக்கு உண்மையிலேயே வலிமை சேர்க்கின்றது என்பேன். என்னோடு பயணிக்கும் பல நல்ல உள்ளங்கள் என் முயற்சிகளுக்குத் துணை நின்ற பாங்கினை இந்நூலில் ஆங்காங்கே குறிப்பிட்டுள்ளேன்.

எனது அரிய அனுபவங்களைத் தாங்கிவரும் இந்நூலைச் சிந்தனைச் செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்களுக்குக் காணிக்கையாக்கி உள்ளம் பூரிப்படைகிறேன். அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள் எனது ஆய்வு முயற்சிகளுக்குத் தந்துள்ள ஊக்க உரைகள், உதவிகள் ஆகியவற்றை நான் என்றும் மறக்கவியலாது. ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் சிறகுகள் வலிமைபெற்று இந்நிறுவனம் வான்மீது உயரப்பறக்க முயன்றபோது அதற்குத் துணைக்கரம் நீட்டி உதவிய நல்ல மனிதர்களுள் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள் மிகவும் குறிப்பிடத்தக்கவர். இவரைப் போன்ற நல்லமனம் படைத்த பெரியோர்கள் இம்மண்ணில் வாழ்வதால் தான் "மெல்லத் தமிழினி சாகும்" என்று பிறநாட்டான் பேசுவதாகப் பாரதி சுட்டும் நிலை தமிழுக்கு இன்னும் ஏற்படவில்லை என்பேன்.

எனது பயணத்தை நான் நூலாக வடிக்க முயன்றபோது உடனிருந்து உதவிய என் மனைவி திருமதி. இந்திரா சாமுவேலுக்கு நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன். இந்நூலின் பிரதியைப் படித்துக் கருத்துக்கள் நல்கிய

ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் சுவடியியல் ஆய்வுப்புலத் தலைவர் டாக்டர் ஆ. தசரதன், பேராசிரியர் டாக்டர் பூ. சுப்பிரமணியன் ஆகியோருக்கு நன்றி தெரிவிப்பதில் மகிழ்ச்சியடைகிறேன். இந்நூலின் அச்சுப்படிகளைத் திருத்தி உதவிய நிறுவன அலுவலர்கள் திரு. சண்முகவேலாயுதம், திரு. ஐயப்பன், செல்வி. விருதசாரணி ஆகியோருக்கு என் நன்றியினைத் தெரிவிப்பதில் நெஞ்சம் பூரிப்படைகிறேன். இந்நூலின் செய்திகளை நான் கூற எழுதி உதவிய நிறுவன அலுவலர் திருமதி. கிரிஜா, அச்சிட்டு உதவிய லேசர்பாம் அச்சகத்தார், முகப்பு ஓவியம் வரைந்த திரு. நடராசன் ஆகியோரை வாழ்த்தி அமைகிறேன்.

சென்னை<br>20.1.94. } **டாக்டர் ஜி. ஜான் சாமுவேல்**

# உள்ளே.....

பக்கம்



-----❀-----

## 1. குமரியில் அரும்பிய எண்ணம்

சின்னஞ்சிறு வயது முதல் இந்த நாட்டின் தேசியப் பாரம்பரியங்களின் மீதும், கலை இலக்கியச் செல்வங்களின் மீதும் அளவுகடந்த வேட்கையும், பற்றும், பரிவும் வைத்திருந்தவன் நான். நமது நாடு, நமது மொழி, நமது பண்பாடு, நமது கலை இலக்கியச் சாதனைகள் ஆகியன எந்தவகையிலும் பிறநாடுகளின் பண்பாட்டுக்கூறுகளுக்கும் மொழி இலக்கியச் சாதனைகளுக்கும் குறைந்தன அல்ல என்ற எண்ணம் சிறு வயது முதற்கொண்டே எனது இரத்தத்தில் இரண்டறக் கலந்திருந்ததை உணர்கிறேன். இந்த எண்ணம் எப்படி என்னுள் ஆழமாகப் பதிந்து என்னை ஆட்டிப் படைக்கின்றது; எப்போது இது என்னுள் புகுந்தது என்பனவற்றைப் பற்றியெல்லாம் பலமுறை தீவிரமாக நான் சிந்தித்ததுண்டு. அப்போதெல்லாம் இதுபற்றி எந்த விளக்கமோ, அமைதியோ எனக்குக் கிடைக்கவில்லை. கலாச்சார உயர்வு பற்றிய எண்ணம் என் உள்ளத்தில் பெருமித உணர்வை இளமைப்பருவத்தில் பலமுறை ஏற்படுத்தியபோதிலும் அது சில நிலைகளில் என்னைத் தனிமைப்படுத்தியதுண்டு. நான் வாழ்ந்த சமுதாயத்துடனும், சுற்றுப்புறச் சூழல்களுடனும் நான் அயன்மையுணர்வு கொண்டு என்னைத் தனியாகத் துண்டித்துக்கொண்டு தனிமை இரக்கத்தில் பலமுறை மூழ்கிப்போகவும் அது காரணமாக அமைந்தது.

நான் பிறந்து வளர்ந்த நெய்யூர் குமரி மாவட்ட ஊர்களில் மேலைநாட்டுப் பாதிப்புக்கு அதிகமாக இடங்கொடுத்த ஓர் ஊராகத் திகழ்ந்தது. கிறிஸ்தவத்தைப் பரப்பவந்த இங்கிலாந்து நாட்டுப் பாதிரிமார்கள் குமரிமாவட்டத்தில் மயிலாடி, நாகர்கோவில், நெய்யூர் போன்ற ஊர்களைத் தங்களின் தலைமை மையங்களாகக் கொண்டனர். சிறு வயதில் நெய்யூரின் வீதிகளில் நான் உலவும்போது அவை எனக்கு இங்கிலாந்து நாட்டின் ஒரு மூலையிலுள்ள வீதிகளில் உலவுவதுபோன்ற பிரமையினை ஏற்படுத்தின. கிறிஸ்மஸ்தெரு, பால்தெரு, ஹாக்கர் தெரு போன்ற மேலை நாட்டுப் பெயர்களைச் சுமந்துநின்ற இத்தெருக்களில் ஸ்காட்லாந்து நாட்டுப் பாதிரிகள், மருத்துவர்கள் ஆகியோரின் குடும்பங்கள் இணைந்து வலம்வந்துகொண்டிருந்தன. எங்கும் ஆங்கிலம்-எதிலும் ஆங்கிலம்; ஒரே ஐரோப்பிய மோகம்; எதிலும் மேற்கத்தியக் கலாச்சாரத் தாக்கம். இந்திய மதங்கள் அந்த ஊரைவிட்டு வேருடன் பிடுங்கியெடுக்கப்பட்டு மேலைநாட்டு ஆதிக்கத்தில் நீராடிய கிறிஸ்தவம் அங்கு ஆற்றலுடன் கோலோச்சியது.

இந்த நாட்டில் பிறந்த மதங்களெல்லாம் அஞ்ஞானங்கள் என்று இங்குள்ளோரால் விமரிசிக்கப்பட்டன; இந்த நாட்டில் பிறப்பெடுத்த தெய்வங்களெல்லாம் பேய்களாக இவ்வூர் மக்களின் அடிமனத்திரைகளில் சித்திரிக்கப்பட்டிருந்தன; இந்த நாட்டுச் சிந்தனைகளெல்லாம் மூடநம்பிக்கைகளாக இவர்களால் விவரிக்கப்பட்டிருந்தன; இந்த நாட்டு மொழி, பண்பாடு, இலக்கியம் என்பனவெல்லாம் இம்மக்களின் நினைவுத் திரையில் எங்கோ ஒரு மூலையில் சீரழிந்த, சிறப்பிழந்த ஓவியங்களாக முடங்கிவிட்டன. ஆங்கிலம் பேசத்தெரிந்தவன் மட்டுமே அறிஞன்; மேலைநாட்டுப் பழக்க வழக்கங்களை மேற்கொண்டவன் மட்டுமே நனி நாகரிகன் என்பன இந்த ஊர் மக்களின் மதிப்பீடு. இந்த மதிப்பீடுகளின் மத்தியில் நான் பெரும்பாலும் அயன்மை யுணர்வுடன் தனிமைப்பட்டே நின்றேன்.

தொடக்கநிலைப் பள்ளியில் பயிலும்போது எங்கள் வீட்டிலுள்ள பழைய எழுத்தாணி ஒன்று என் கண்ணில் தென்பட்டதை நினைத்துப்பார்க்கிறேன். அது என்ன என்று ஆவலுடன் என் தந்தையிடம் வினவினேன். அவர் அதுபற்றி ஒரு பெரிய விரிவுரையினையே நிகழ்த்தியது என் நெஞ்சைவிட்டு இன்னும் அகலவில்லை. நாகரிகத்தில் அதிகம் முன்னேறாத நிலையில் நம்மவர்கள் இந்த எழுத்தாணியை வைத்துப்பனை ஓலையில் எழுதினர். பின் காகிதம் வந்ததும் பறவைகளின் தூவியில் மைகொண்டு எழுதினர். காலப்போக்கில் நாம் பயன்படுத்தும் பலவகைப் பேனாக்கள் பெரு வழக்கில் வந்துவிட்டன என்று என் தந்தையார் விளக்கம் தந்தார். என் தந்தைக்கும் நமது பண்பாட்டுப் பாரம்பரியங்கள் மீது நல்ல மதிப்பிருந்தது. எனினும் ஐரோப்பியப் பண்பாடு இந்தியப் பண்பாட்டைவிட உயர்ந்தது என்ற கணிப்பு அவருக்குண்டு.

எனது மனம் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் எழுத்தாணி-ஓலைச்சுவடிகள் மூலமாக இந்நாட்டில் நடைபெற்ற அறிவியல் கலைப்புரட்சிகளை ஆழமாகச் சிந்திக்கத் தொடங்கியது. கல்வெட்டுக்கு உதவும் சிற்றுளியின் மற்றொரு சிறிய வடிவமாகவே எழுத்தாணி எனக்குக் காட்சிதந்தது. கல்லைத் தோண்டி கருத்துக்களையும், செய்திகளையும் அதில் வடிப்பது போன்று பனையோலையில் எழுத்தாணியால் கீறிக்கீறி எழுதியிருந்த சில பகுதிகளை எங்கள் பக்கத்து வீட்டிலிருந்த ஓலைச்சுவடியை முதன் முதலாக நான் தரிசித்தபோது காணநேரிட்டது. எவ்வளவு அழகாக ஓலையைப் பதனிட்டு ஓவியம் ஒத்த எழுத்துக்களை அதில் பொறித்துள்ளனர் என்று வியந்தேன்.

எங்கள் ஊரில் ஒரு சோதிடர் இருந்தார். அவர் ஓலைச்சுவடிகளைப் படித்துப் படித்துத் தன்னை நாடி வருவோருக்குச் சோதிடம் கூறுவதைச் சிறுவயதில் நான் பார்த்து வியந்திருக்கிறேன். அவர் சோதிடச் செய்திகளைப் பாட்டாக

இராகத்துடன் பாடுவதைக் கேட்டுக்கொண்டே நின்றிருக்கிறேன். சிலசமயம் எழுத்தாணியால் அவர் ஓலையில் எழுதுவார். பேனாவில் எழுதும்போது எழுத்திற்கேற்ப கை அசையும். ஆனால் இந்தச் சோதிடரின் கை நின்ற இடத்திலேயே நிற்கும். ஓலையைப்பிடித்துள்ள கைதான்ஓலையோடு எழுத்திற்கேற்ப மேலும் கீழும் அசையும். இது என்னைப் பலமுறை வியப்பில் ஆழ்த்தியதுண்டு. ஆனால் எங்கள் ஊரில் சிலர் எழுத்தாணியை அசைத்து அசைத்து ஓலையைப்பிடித்தகை அசையாமல் இருக்க எழுதுவதையும் நான் பார்த்துள்ளேன். எனவே ஓலையில் எழுதுவோர் இருவேறு முறைகளைக் கடைப்பிடித்ததைச் சிறுவயதிலிருந்தே நான் கண்டு தெளிந்துகொள்ளமுடிந்தது. வட இந்தியப்பகுதிகளில் மையால் ஓலையில் எழுதும் வழக்கம் இருந்ததையும் பின்னர் நான் அறிந்துகொண்டேன்.

என் தந்தையாரிடம் ஓலைச்சுவடிகள் பற்றிப் பலமுறை கேட்டபோதெல்லாம் அவை ஒருவகைப் பாமரமுறையில் அமைந்த நாகரிக வளாச்சியடையாத நிலையில் ஏற்பட்ட கருத்துப்பரிமாற்ற முயற்சிகள் என்றே விளக்கினார். இவ்விளக்கம் எனக்கு நிறைவு தரவில்லை. காகிதம் அறிமுகப்படுத்துவதற்கு முன்னர் பனையோலை, மரப்பட்டை, தோல் போன்றன எழுதுவதற்குரிய பொருட்களாகப் பயன்பட்டன என்பதைத் தெரிந்துவைத்திருந்தேன். கிறிஸ்தவத் திருமறையின் பெரும்பகுதி தோலில் எழுதிவைக்கப்பட்டிருந்ததாக எனக்குச் சமயப்பாடம் புகட்டிய ஆசிரியர்கள் புகன்றனர். எகிப்தியர்கள் பாப்பிரஸ் என்ற நாணலில் எழுதினர். அப்பெயரே பின்னர் பேப்பர் என்று காகிதத்திற்கு அமைந்துவிட்டதாக என் தந்தையார் விளக்கினார்.

எனது உள்ளம் மீண்டும் மீண்டும் கடந்த காலச்சமுதாயத்தில் பனையோலைச் சுவடிகளின் வாயிலாக நிகழ்ந்த அறிவுப் புரட்சியைக் கற்பனை செய்து பார்க்கத் தொடங்கியது. திண்ணைப்பள்ளிகளில் சிறுவர்கள் எழுத்தாணி கொண்டு

எழுதியதாக நான் கேட்டறிந்த காட்சிகள் எல்லாம் மனக்கண்முன் அடிக்கடித் தோன்றிக்கொண்டே இருந்தன. பெரும்புலவர்கள் எழுத்தாணி கொண்டு ஏட்டில் எழுதி எழுதித் தமிழ் இலக்கியச்சோலையை வளமூட்டிய காட்சிகள் மனத்திரையில் நிழலாடின. ஓலைச்சுவடிகளைக் காணும்போதெல்லாம் மனம் களிப்படைந்ததை உணர்கிறேன். எனினும் அவற்றிலுள்ள எழுத்துக்களை என்னால் அப்போது தெளிவாகப் படிக்க முடியவில்லை.

ஓலைச்சுவடிகள் பற்றி அதிகமாக மென்மேலும் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு எனக்குப் பள்ளிப்பருவத்தில் கிட்டவில்லை என்பேன். நான் நாகர்கோவிலிலுள்ள ஸ்காட் கிறிஸ்தவக் கல்லூரியில் புகுமுக வகுப்பு மாணவனாகச் சேர்ந்தபோது சிறப்புத்தமிழைப் (Advanced Tamil) பாடமாக எடுத்திருந்தேன். எனவே ஏனைய மாணவர்களைவிடவும் சற்றுஅதிகமாகவே தமிழைப் பயிலும் வாய்ப்பு எனக்கு இருந்தது. தமிழ்ப்பேராசிரியர்களில் ஒருவரான சேதுராமையர் என்ற முதிய தமிழ்ப்பேராசிரியர் எனக்குத் தமிழ் கற்பித்து வந்தார். வேட்டியும், ஜிப்பாவும், குடுமியுமாகக் காட்சிதந்த அந்தப் பேராசிரியர் கோட்டும் சூட்டும் அணிந்து காணப்பட்டபிற பேராசிரியர்கள் மத்தியில் ஏதோ ஒரு வித்தியாசமான ஜீவன் போன்றும், வேடிக்கையான ஒரு ஜந்து போன்றும் மாணவர்களுக்குக் காட்சி தந்தார். எனவே அவர் வகுப்புக்கு வந்தவுடன் மிக அதிகமாக மாணவர்கள் கலாட்டா செய்வது வழக்கம். சினங்கொள்ளும் இப்பேராசிரியர் மாணவர்களைத் திட்டும்போது கூடச் செந்தமிழால்தான் திட்டுவார். இதைக்கேட்கும்போது மாணவர்கள் மீண்டும் ஒன்றாகச்சேர்ந்து கூச்சலிடுவர். அவரைப் பாடம் நடத்த விடுவதே கிடையாது.

இத்தகைய கூச்சல்களுக்கு மத்தியில் தமிழ்த்தாத்தா டாக்டர் உ.வே. சாமிநாதையர் எழுதிய உதிர்ந்த மலர்கள் என்ற கட்டுரையைப் பேராசிரியர் சேதுராமையர் தொடர்ந்து

நடத்தினார். அக்கட்டுரையின் ஒவ்வொரு வரியும் ஒவ்வொரு சொல்லும் என்னை அதிகமாக ஈர்த்தன. அக்கட்டுரை பத்துப் பாட்டுள் ஒன்றான குறிஞ்சிப்பாட்டினைஓலைச் சுவடியிலிருந்து பதிப்பிக்க டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் மேற்கொண்டஅரிய முயற்சிகளை அனைவரின் உள்ளங்களையும் கவரும் வண்ணம் விளக்கியிருந்தது. குறிஞ்சிப்பாட்டின் அமைப்பும், அதன் இலக்கியச் சிறப்பும் என் உள்ளத்தில் ஆழ்ந்த பல பாதிப்புக்களை ஏற்படுத்தின. பழந்தமிழ் இலக்கியங்களை அதிகமாகப் பயிலவேண்டும் என்னும் பெருவேட்கை என் உள்ளத்தில் பொங்கியெழ அக்கட்டுரையும் ஒரு காரணமாக அமைந்துள்ளது. அக்கட்டுரையைப் படிக்கப் படிக்கச் சங்க காலத்துக் குறிஞ்சி நிலத்தில் கற்பனைச்சிறகு விரித்து என் மனம் பறப்பது போன்ற உணர்வு ஏற்பட்டது.

பழந்தமிழ்ச் சுவடிகளைத் தேடிப்பதிப்பித்து வெளியிடுவதில் டாக்டர் உ.வே.சா. அவர்கள் காட்டிய ஆர்வம் என்னை வியப்பில் ஆழ்த்தியது. அக்கட்டுரையின் ஒவ்வொரு வரியிலும் அவரது தமிழ்ப்பற்றும், தமிழ்த்தொண்டும் பளிச்சிட்டன. குறிஞ்சிப் பாட்டில் 99 மலர்கள் பற்றிய பட்டியல் (Catalogue) இசையோடும், அருமையான பெயரடைகளோடும் அமைக்கப் பட்டுள்ளது. அதன் சில பகுதிகள் சில ஏடுகளில் சிதைந்து காணப்பட்டன. விடுபட்ட நான்கு மலர்களின் பெயர் தருமபுர ஆதீனச் சுவடியில் கிடைத்தன. இந்நூலில் அமைந்துள்ள மலர்கள் 99 மட்டும்தானா? மேலும் சில விடுபட்டுவிட்டனவா என்பதைக் கண்டறிய தமிழ்த்தாத்தா மேற்கொண்ட சுவடிப்பயணம் என்னை வியக்கவைத்தது.

பல நாட்கள் தூக்கமின்றி அக்கட்டுரை பற்றியும், தமிழ்ச்சுவடிகள் பற்றியும் நான் ஆழமாகச் சிந்தித்ததுண்டு. காலத்தின் கோரத்தாண்டவத்திற்கிடையே சிக்கி எவ்வளவு தமிழ் நூல்கள் அழிந்திருக்கவேண்டும் என்பதை எண்ணியபோது உள்ளம் வேதனையில் மூழ்கியது. இந்தச் சுவடிகளைக் காக்க,

தமிழ்த்தாத்தா மேற்கொண்ட முயற்சிகளை என் உள்ளம் வாழ்த்தியது. என் உள்ளத்தில் மிக உயர்ந்த தமிழ்த் துறவியாக, தமிழ்த் தொண்டராக டாக்டர் உ.வே.சா. அவர்கள் சிறுவயதிலிருந்தே இடம்பெற்றுவிட்டார். அவரைப்போன்று சுவடித்துறையில் பல சாதனைகள் புரிய வேண்டுமென்று நான் அப்போதே எண்ணியதுண்டு. இந்த எண்ணம் ஈடேறும் வாய்ப்புக்கள் சிறப்பாகக் கருக்கொள்ளாமல் பல ஆண்டுகள் பயனின்றிக் கழிந்தன என்பேன்.

நான் தென்திருவிதாங்கூர் இந்துக்கல்லூரியில் இளங்கலை மூன்றாம் ஆண்டு பயிலும்போது உலகத்தமிழ் மாநாடு ஒன்று சென்னையில் நடைபெற்றது. இம் மாநாட்டின்போது தமிழறிஞர்களுக்கு மெரினா கடற்கரையோரங்களில் பல சிலைகள் நிறுவப்பெற்றன. நடிகர் திலகம் சிவாஜிகணேசன் அவர்கள் திருவள்ளுவரின் சிலையினை அமைக்க முன்வந்தார். அந்தச் சிலை எங்கள் ஊரையடுத்த மயிலாடியில் தயாரானது; வள்ளுவர் நின்றுகொண்டு ஓலைச் சுவடியில் எழுத்தாணியால் திருக்குறளை எழுதுவதுபோன்ற வடிவமைப்பு. இது தயாராகும் போது பலமுறை மயிலாடி சென்று இதைப் பார்வையிட்டேன். தமிழ்ப்புலவர் நின்று கொண்டு எழுதும் இந்தச் சிலையின் வடிவமைப்பு ஒரு நகையுணர்வை என் உள்ளத்தில் தோற்றுவித்ததை நினைத்துப் பார்க்கிறேன். அந்தச் சிற்பியிடம்கூட இதுபற்றிக் குறிப்பிட்டேன். அவருக்குத் தரப்பட்ட மாதிரிப் புகைப்படத்தை அவர் என்னிடம் காட்டினார். அதிலும் வள்ளுவர் நின்றுகொண்டே எழுத்தாணியால் எழுதிக் கொண்டிருந்தார். சுவடி, எழுத்தாணி போன்றவற்றின் மரபுகள் மீண்டும் என் உள்ளத்தில் புத்துணர்வுபெற ஆரம்பித்தன. எல்லாப் பேருந்துகளிலும் அப்போது இடம்பெற்ற திருவள்ளுவர் திருக்குறளை எழுதும் காட்சி, ஓலைச்சுவடிகள் பற்றிய சிந்தனைகள் என்மனதில் இடையீடின்றித்தொடர ஓரளவு துணைசெய்தன என்பேன். பேருந்துகளில் காட்சியளித்த

வள்ளுவர் அமைதியாக அமர்ந்துகொண்டே எழுத்தாணியால் எழுதிக்கொண்டிருந்தார்.

நாகர்கோவில் இந்துக் கல்லூரியின் சூழல் ஓலைச்சுவடிகள் பற்றிய எனது ஆர்வத்தைச் செயல்வடிவம் பெறச்செய்யவோ, அதிகரிக்கச் செய்யவோ துணையாக அமையவில்லை. எனினும் தமிழ் இலக்கிய முதுகலை மாணவனாக அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நுழைந்தபோது எனது ஆர்வமும், தொடக்க நிலையில் என் உள்ளத்தில் ஏற்பட்ட எண்ணங்களும் ஓரளவு வடிவம் கொள்ளத்தொடங்கியதை உணர்ந்தேன். அங்குப் பாடம் கற்பித்த ஆசிரியர்கள் பலரும் தமிழ்ச்சுவடிகள் பற்றியும் அவற்றின் பதிப்பு பற்றியும் பல்வேறு குறிப்புக்களைத் தந்தனர். டாக்டர் உ. வே. சா., திரு. சி. வை. தாமோதரம் பிள்ளை, திரு. தியாகராச செட்டியார் ஆகியோர் இத்துறையில் ஆற்றிய தொண்டு பற்றிப் பல செய்திகளை எங்கள் ஆசிரியர்கள் மூலமாக அறியமுடிந்தது. டாக்டர் உ. வே. சாமிநாதையரின் சுவடிப்பணி பற்றி மட்டும் கேட்டிருந்த எனக்கு யாழ்ப்பாணத் தமிழ்ப்புலவர்களின் பணி அதிக வியப்பை நல்கியது. டாக்டர் உ. வே. சாமிநாதையருக்கு எந்தவகையிலும் குறையாமல் விளம்பரமின்றிப் பலர் இத்துறையில் ஆற்றிய பணி என்னை வியப்படையச்செய்தது. இவர்களின் பெயர்களெல்லாம் இன்றும் போதிய வெளிச்சம் பெறாமை வருந்துவதற்குரியதே. திருவாவடுதுறை ஆதீனம், திருப்பனந்தாள் ஆதீனம், தருமபுர ஆதீனம் போன்ற சைவ மடங்களும், அவற்றின் கிளைகளும் தமிழ் ஓலைச்சுவடிகளைப் பாதுகாப்பதில் ஆற்றியுள்ள பணி என்னை மெய்ச்சிலிர்க்க வைத்தது.

## 2. சென்னையில் மலர்ந்த சிந்தனை

அமெரிக்கன் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றியபோது நான் மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் தமிழ் ஓலைச்சுவடிகளைக் காணநேரிட்டது. டாக்டர் உ. வே. சா. எழுதிய பண்டைக்காலப் பள்ளிக்கூடங்கள் பற்றிய கட்டுரையினை அமெரிக்கன் கல்லூரியின் மாணவர்களுக்குக் கற்பிக்கும் வாய்ப்பும் கிட்டியது. அக்கட்டுரை சுவடிகள் தொடர்பான என் சிந்தனையை மிக அதிகமாகத் தூண்டிவிட்டது என்பேன். தமிழ் ஓலைச்சுவடிகளைத் திண்ணைப் பள்ளிக்கூடங்களோடு தொடர்புபடுத்தி மிக விரிவாக அக்கட்டுரை ஆய்ந்திருந்தது. தமிழ் ஓலைச்சுவடிகள், ஓலையில் எழுதும்முறை போன்றன பற்றிய ஏராளமான அரிய செய்திகளை இக்கட்டுரை தந்துநின்றது. எனினும் சுவடி தொடர்பான ஆய்விலோ, பதிப்புப்பணிகளிலோ ஈடுபடும் வாய்ப்பு எனது ஐந்தாண்டு மதுரை வாழ்க்கையில் அமையவில்லை. மொழி இயல், ஆங்கில இலக்கியம் போன்றவற்றைக் கற்பதில் பெரும்பகுதி நேரத்தைச் செலவழிக்கவேண்டிய நிலையில் நான் இருந்ததால் தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய எனது ஆர்வம் அடிமனத்தில் அப்போது அறிதுயில் கொண்டிருந்து.

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நான் பணியாற்றிக் கொணிடிருந்தபோது ஓலைச்சுவடி பற்றிய ஆய்வுக்கெனத் தனி ஆராய்ச்சித்துறை அமைக்கும் திட்டம் உருப்பெறத் தொடங்கியது. சுவடி பதிப்பித்தல், சுவடியியல் தொடர்பான வகுப்புக்கள்

நடத்துதல் ஆகிய ஒருசில முயற்சிகள் அப்போது அங்குச் செயல்வடிவம் பெறத்தொடங்கின. ஏதோ ஒருசில சுவடிகளை வைத்துக்கொண்டு சுவடி நூலகம் என்ற பெயரிலும் அங்குள்ளோர் ஏதேதோ கூறி வந்தனர். எனினும் உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சுவடியியல் துறையின் திட்டங்கள் குறித்த தெளிவான விபரங்கள் எதுவும் எனக்குத் தெரியவில்லை. இந்நிலையில் அப்போது புதிதாக ஆரம்பிக்கப்பட்ட தமிழ்ப்பல்கலைக் கழகத்திலும் சுவடியியல் ஆய்வுப்புலம் ஒன்றினைத் தொடங்கத் திட்டமிட்டிருப்பதாக அறிந்தேன்.

ஆசியவியல் ஆய்வு நிறுவனம் என்ற ஓர் ஆராய்ச்சி நிறுவனத்தை அமைப்பதற்குரிய திட்டங்களை நான் விரிவாகத் தீட்டிக்கொண்டிருந்த நேரமது. இந் நிறுவனத்தில் சுவடியியல் தொடர்பாக ஒரு தனி ஆய்வுத்துறை அமையவேண்டும் என்பது எனது ஆராய்ச்சிக் கனவுகளுள் ஒன்றாக இருந்துவந்தது. இந்த ஆய்வுத்துறை தொடக்கநிலையில் தமிழ் ஓலைச்சுவடிகளின் ஆய்வில் ஈடுபட்டு வியத்தகு சாதனைகள் புரிந்து உலகநாடுகளின் பாராட்டுதலைப் பெறவேண்டும் என்பது எனது மிகையான கனவாகவே 1982 ஆம் ஆண்டில் இருந்தது. எனினும் தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய ஆய்வு எப்படியெல்லாம் இருக்கவேண்டும் என்ற தெளிவு எனக்கு அப்போது ஏற்படவில்லை.

இத்துறையில் எனக்குத் தெளிவு நல்கி நெறிப்படுத்தியோர் பலர். அவர்களுள் திரு. மு. கோ. ராமன், பேராசிரியர் மு. சண்முகம்பிள்ளை ஆகியோர் குறிப்பிடத் தகுந்தோர் ஆவர். திரு. மு. கோ. ராமன் தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய ஆய்வின் வரலாற்றில் குறிப்பிடத்தகுந்த இடம்பெறத்தக்கவர் என்பது எனது கணிப்பு. டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகத்தில் பல ஆண்டுகள் பணியாற்றிய அனுபவமிக்க அந்தத் தமிழ் அறிஞர் தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய அனைத்துத் தகவல் களையும் தெரிந்துவைத்திருந்தார். அவரோடு பலநாட்கள் தொடர்ந்து உரையாடியபோது வெளிவராமல் கறையானின்

கொடிய வாய்க்கும், இயற்கையின் சீற்றத்திற்கும், மனிதனின் மூடநம்பிக்கைக்கும் நாள்தோறும் இரையாகிக்கொண்டிருக்கும் தமிழ் மொழியின் அறிவுச் செல்வங்களின் அவலநிலை பற்றி நான் அதிகமாக அறியமுடிந்தது.

தமிழ் ஓலைச்சுவடிகளில் கால்பங்கு கூட பதிப்பித்து நூலாக வெளியிடப்படவில்லை என்ற செய்தி என் உள்ளத்தை உலுக்கியது. அறிவியல் துறையில் எவ்வளவோ முன்னேறி விட்டோம். கணிப்பொறி (Computer) வாயிலாக அரிய சாதனைகள் பல கண்டுவிட்டோம். கல்வித்துறையில் அனைத்துச் சீர்திருத்தங்களையும் செய்து அரிய சாதனைகள் புரிந்து விட்டதாகப் பெருமையடைகிறோம். ஆனால் நமது முன்னோர்கள் காலங்காலமாகத் தேடிச் சேமித்து வைத்துள்ள இக்கலைச் செல்வங்கள் அழிவதைக் கண்ணால் பார்த்தும் அவற்றைப் பாதுகாக்கும் வழியறியாது நிற்கிறோம். இதைவிட அவலநிலை என்னதான் இருக்கமுடியும் என்று என் உள்ளம் எண்ணியது.

## 3. தனிர்நடை பயின்ற தமிழுணர்வு

பலநாட்களாகச் சிந்தித்துத் தமிழ் ஓலைச்சுவடிகளைப் பாதுகாத்தல், படியெடுத்தல், பதிப்பித்தல், மொழிபெயர்த்தல், மூலஏடுகளை ஒப்புநோக்கி ஆய்தல் என்ற நிலையில் பன்முக ஆய்வுத்திட்டமொன்றை மிக விரிவாக ஆங்கிலத்தில் தயாரித்தேன். புதிதாக அமைக்கத் திட்டமிட்டிருந்த ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தில் மேற்கூறிய எனது ஆய்வுக் கனவைச் செயல்படுத்தத் தனியாக ஓர் ஆய்வுத்துறை நிறுவவேண்டுமென்று முடிவு செய்தேன். இது தொடர்பாக என் ஜப்பானிய நண்பர் டாக்டர் ஷு ஹிகோசகா அவர்களுடன் பலமுறை விரிவாகக் கலந்துரையாடினேன். அவரும் மிக்க மகிழ்ச்சியுடன் இதற்கு ஒப்புதல் தந்தார். தமிழ் ஓலைச்சுவடிகளைக் காப்பதில் நான் காட்டிய ஆர்வம் அந்த ஜப்பானிய உள்ளத்தை மிக அதிகமாகக் கவர்ந்தது. ஏற்கனவே தமிழ் ஓலைச்சுவடிகளின் நிலைபற்றி அவர் நன்கு அறிந்தவர். ஓலைச்சுவடிகளின் பதிப்புபற்றி என்னிடம் விரிவாகப் பல செய்திகளை அவர் பகிர்ந்து கொண்டவர். மணிமேகலை, சிலப்பதிகாரம் ஆகிய தமிழ்க் காப்பியங்களின் பதிப்பிற்காக டாக்டர் உ. வே. சாமிநாதையர் மேற்கொண்ட அரிய பல முயற்சிகளையும் உளமார அவர் உணர்ந்தவர். எனவே எனது திட்டத்தை அவர் வியந்து பாராட்டியதில் எனக்கு வியப்பு ஏற்படவில்லை. தமிழ் ஓலைச்சுவடிகள் பாதுகாப்பின்றி அழிந்து கொண்டிருக்கும்

நிலை அந்த ஜப்பானியத் தமிழறிஞரை அதிக வேதனையடையச் செய்தது. அறிவுச் செல்வங்களைப் பாதுகாப்பதில் இந்த நாட்டு மக்கள் காட்டும் கவனக்குறைவு அந்த ஜப்பானிய நண்பரை அதிக வியப்பில் ஆழ்த்தியது.

1982 ஆம் ஆண்டு ஆசியவியல் ஆய்வு நிறுவனம் பிறப்பெடுத்தது. சுவடியியல் ஆய்விற்காகத் தனி ஆய்வுத்துறை நிறுவப் போவதாக அது அறிவித்தது. எனினும் ஓலைச்சுவடி ஆய்வுதொடர்பாக நாங்கள் தீட்டியிருந்த திட்டத்தை எப்படிச் செயல்படுத்துவது என்பது எனக்குப் புரியவில்லை. இத்துறையைத் தொடங்கி நடத்த ஆண்டுதோறும் பல இலட்ச ரூபாய் தேவைப்படும். இதற்கு யாரை அணுகுவது என்றெல்லாம் நினைத்து வருந்திக்கொண்டிருந்தேன்.

எனது ஆய்வுத் திட்டத்தைத் தமிழறிஞர்கள் பலரிடம் தொடர்ந்து விளக்கினேன். அனைவரும் அதை உதட்டளவில் வியந்து பாராட்டினர். ஒரு சில செல்வந்தர்களிடமும் இதைப்பற்றி விரிவாகக் கலந்துரையாடினேன். வெறும் பாராட்டுதல்கள் மட்டும்தான் கிடைத்தனவே தவிர யாரும் இதைச்செயல்படுத்தத் துணைக்கரம் நீட்ட முன்வரவில்லை. அமைச்சர்களிடம் பேசினேன். அவர்கள் நல்ல திட்டம். ஆனால் உதவும் நிலையில் அரசு இல்லை என்று திட்டவட்டமாகக் கூறிவிட்டனர். தமிழ்வளர்ச்சி தொடர்பான செயல்களைக் கவனிப்பதற்குஓர் உயர்மட்ட அதிகாரி இருந்தார். அவர் தமிழறிஞர் என்றும் கூறிக்கொள்வார். அவரிடம் பழந்தமிழ் ஓலைச்சுவடிகளைப் பாதுகாக்க வேண்டிய தேவை பற்றி விளக்கினேன். அவர் என்னைப் பார்த்து எள்ளி நகையாடினார். ஓலைச்சுவடி களிலுள்ள நூல்கள் எல்லாம் ஏற்கனவே அச்சாகி வெளி வந்துவிட்டன. மீதி இருக்கும் சுவடிகள் எல்லாம் வெறும் குப்பைகளே. அவற்றை எரித்தேவிடலாம் என்று அந்தத்

தமிழ்ஞானி கூறிவிட்டார். ஏன் உங்கள் நேரத்தையும், சக்தியையும் இந்தக் குப்பைகளைப் பாதுகாக்க முயற்சி மேற்கொண்டு வீணடிக்கிறீர்கள் என்று எனக்கு அந்த புத்திசாலி அறிவுரையும் கூறிவிட்டார்.

அமைச்சர்கள், அதிகாரிகள், தமிழறிஞர்கள், தொழிலதிபர்கள் ஆகிய அனைவரின் மெத்தனப்போக்கும் என்னைப் பொறுமை இழக்கச்செய்தது. உடல் மண்ணுக்கு உயிர் தமிழுக்கு என்று பேசிப் பொதுமக்களிடம் கைதட்டலும், வாக்குகளும் பெற்று ஆட்சிக்கு வரும் அரசியல்வாதிகள் அரசு கட்டில் ஏறியதும் சொந்தத் தாய் மொழியைப் புறக்கணிப்பதும், தாய்மொழி வளர்ச்சியில் ஆர்வம் காட்டாமல் இருப்பதும் என்னை வியப்பில் ஆழ்த்தின. பொதுமக்களைக் கண்டவுடன் மேடையில் ஒலிபெருக்கியின் முன்னர் எப்படித்தான் இவர்களுக்குத் தமிழுணர்வு பொங்கியெழுந்து வருகிறது என்பதையும், தமிழ் தொடர்பாகச் செய்யவேண்டிய பணிகளைச் சுட்டியதும் அந்த மொழியுணர்வு இருந்தவிடம் தெரியாமல் எப்படிப் பறந்துபோய்விடுகிறது என்பதையும் என்னால் விளங்கிக்கொள்ள முடியவில்லை. மொழியுணர்வு, பண்பாட்டுணர்வு என்றெல்லாம் அரசியல்வாதிகள் பேசுவது போலியான ஏமாற்றுவேலை என்பதை நான் தெளிவாகவே உணர்ந்துகொண்டேன்.

# 4. செயல்வடிவம் பெற்ற சிந்தனை

இந்நிலையில் எனக்கு ஒரு நல்ல அறிஞரின் தொடர்பு கிடைத்தது. அறிஞராகவும், மைய அரசின் உயர் அதிகாரி யாகவும் விளங்கும் டாக்டர் கபிலா வாத்சியாயன் அவர்களையே இங்கு நான் குறிப்பிடுகின்றேன். இந்தத் தொடர்பை எனக்கு ஏற்படுத்திக்கொடுத்தவர் இந்தியத் திருநாட்டின் புகழ்பெற்ற சட்டநிபுணரான நீதிபதி வி. ஆர். கிருஷ்ண ஐயர் அவர்களே என்பதை மிகப்பெருமையுடன் நினைத்துப் பார்க்கிறேன்.

எங்கள் நிறுவனத்தின் தலைவரான நீதிபதி வி.ஆர். கிருஷ்ண ஐயர் அவர்களிடம் இந்தத் திட்டத்திற்கு மைய அரசின் நிதியுதவி கோருவது பற்றி நான் விவாதித்தபோது அவர் மைய அரசின் பண்பாட்டுத்துறை செயலராகத் திகழ்ந்த டாக்டர் கபிலா அவர்களோடு தொடர்பு கொள்ளுமாறு கூறினார். அதோடு, நிறுவனத்திற்கு நிதியுதவி தேவைப்படுவது பற்றி விளக்கமாக ஒரு கடிதமும் டாக்டர் கபிலா அவர்களுக்கு எழுதினார்.

தமிழ் ஓலைச்சுவடிகளைப் பாதுகாத்தல், ஆய்தல் ஆகிய பணிகளை மேற்கொள்வதற்கு வசதியாகச் சுவடியியல் ஆய்வுப்புலத்தைக் காலந்தாழ்த்தாது மைய அரசின் துணையோடு தொடங்க முயற்சி செய்ய வேண்டும் என்று நான் உறுதிசெய்துகொண்டேன். இதற்கான ஆய்வுத்திட்டத்தை விரிவாகத் தயாரித்து மைய அரசுக்கு அனுப்பிவைத்தேன். எனது வேண்டுகோளை ஏற்றுச் சுவடியியல் ஆய்வுப்

புலத்திற்குரிய அடிப்படைக்கருவிகள் வாங்குவதற்கென மைய அரசு நிதியுதவி வழங்கி ஆணை பிறப்பித்தது. எதிர்பாராத விதமாக இந்த ஆணை கிடைத்ததும் என் உள்ளம் மகிழ்ச்சியால் துள்ளிக்குதித்தது. எனது நீண்டகாலக் கனவு ஒன்று வலுவான அடித்தளத்துடன் செயல்வடிவம் பெறப்போவதை உணர்ந்து கொண்டேன். மைய அரசு விடுவித்த மானியத்தை மையமாகக் கொண்டு சுவடியியல் ஆய்வுப்புலம் 1985 ஆம் ஆண்டில் ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தில் பிறப்பெடுத்தது.

சுவடியியல் ஆய்வுப்புலம் ஆண்டுதோறும் மேற்கொள்ள வேண்டிய பணிகள் பற்றிய விரிவான வரையறைகளை எனது ஜப்பானிய நண்பரோடு கலந்து விவாதித்துத் தெளிவு படுத்திக்கொண்டு ஆய்வுப்பணிகளைத் தொடங்கினோம். இப்புலத்தின் தொடக்கநிலைப் பணிகளைச் செயல்படுத்த ஓர் ஆய்வாளரை நியமனம் செய்தோம். இப்புலம் கீழ்க்கண்ட பணிகளை மேற்கொள்வது என்று முடிவுசெய்து ஒவ்வொரு பணியினையும் செயல்படுத்தும் நெறிமுறைகளை வகுத்துக்கொண்டோம்.

1. சுவடிகளைத் திரட்டுதல்
2. சுவடி நூலகம் அமைத்தல்
3. சுவடிகளை பராமரித்தல் (Conservation)
4. சுவடிகளை ஆங்கில மொழிபெயர்ப்புடன் பதிப்பித்து வெளியிடுதல்
5. சுவடிகள் பற்றிய தகவல்களைக் கணிப்பொறி வாயிலாகத் (Computer) தரவுக்கிடங்கில் (Data Bank) சேமித்து வைத்தல்.

6. தமிழ் ஓலைச்சுவடிகளுக்கு 25 தொகுதிகளைக் கொண்டமுழு விளக்க அட்டவணை (Descriptive catalogue)' தயாரித்தல்.

7. சுவடியியல் தொடர்பான பயிலரங்குகளை (Work shop) நடத்துதல்.

8. சுவடியியல் தொடர்பான கருத்தரங்குகளை நடத்துதல்.

9. சுவடிகளை நிழற்படம் (Microfilm) செய்து பாதுகாத்தல்.

10. சுவடிகளை மையமாகக் கொண்டு மரபு அறிவியல் (Traditional Sciences) பற்றிய ஆய்வினை மேற்கொள்ளுதல்.

11. சுவடிகளில் மூல பாட ஆய்வு போன்றவற்றை (Textual criticism) மேற்கொள்ளுதல்

என்பன எங்கள் ஆய்வுத்திட்டங்களில் குறிப்பிடத்தக்கவை.

மேற்கூறிய திட்டங்களைச் செயல்படுத்த ஏராளமான நிதியுதவி தேவை என்பதை நன்றாகவே உணர்ந்திருந்தோம். மைய அரசு தந்த சிறுதொகையினை மையமாகக்கொண்டு மேற்கூறிய திட்டங்கள் அனைத்தையும் செயல்படுத்த முடியாது என்பதை அறிந்து கொண்டோம். நிதி திரட்ட பல முயற்சிகளை மேற்கொண்டும் அவை தக்க பயன்தரவில்லை. இந்நிலையில் ஜப்பான் நாட்டிலிருந்து இத்திட்டத்திற்குச் சிறு தொகை பெறலாம் என்று நண்பர் ஊக்கம் தந்தார். ஜப்பானிய நிதியுதவி சுவடியியல் ஆய்வுப்புலத்திற்கு உறுதியான அடித்தளம் அமைக்கத் துணைபுரிந்தது. இது, ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின்

சுவடியியல் ஆய்வுப்புலம் தென்னாட்டிலுள்ள சிறந்த ஆய்வுத்துறைகளுள் ஒன்றாகத் திகழும் என்ற நம்பிக்கையை எனக்குத் தந்தது. சுவடியியல் ஆய்வுக்கெனத் தமிழ்நாட்டில் மூன்று ஆய்வுத்துறைகள் தோன்றியுள்ளன. தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் அமைந்துள்ள சுவடியியல் ஆய்வுத்துறையும், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தில் அமைந்த சுவடியியல் ஆய்வுத்துறையும், ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் சுவடியியல் ஆய்வுப்புலமும் தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய ஆய்வில் தீவிரமாகச் செயல்படத் தொடங்கின.

## 5. முன்னேற்றப் பாதையில்...

மைய அரசிடமிருந்து மேலும் நிதியுதவி பெற்று ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் சுவடியியல் ஆய்வுத்துறையைப் பன்முக ஆய்வுப்பணிகளை மேற்கொள்ளும் ஒரு சிறந்த மையமாக மாற்றவேண்டுமென அப்போது நான் கனவு கண்டு கொண்டிருந்தேன். இது பற்றி எனது ஜப்பானிய நண்பரிடம் கலந்துரையாடியபொழுது அவரும் எனது கருத்துக்களை ஏற்றுக்கொண்டார். இருவரும் தில்லிக்குச் சென்று மைய அரசின் பண்பாட்டுத் துறையோடு தொடர்புடைய அதிகாரிகளைச் சந்தித்துப் பேசுவது என்று முடிவு செய்தோம். ரயிலில் தில்லி நோக்கி இருவரும் நீண்டநெடும் பயணத்தை நிறுவனத்தின் இரு அலுவலர்களோடு இணைந்து மேற்கொண்டோம். தமிழ் ஆராய்ச்சித்திட்டங்களுக்கு நிதியுதவி கோரி தில்லிக்கு நாங்கள் மேற்கொண்ட முதற்பயணமாக அந்தப்பயணம் அமைந்தது. 1985 ஆம் ஆண்டு மேற்கொண்ட அரசுமானியம் தேடும் இப்பயணம் எங்களுக்குப் பல்வேறு அனுபவங்களைத் தந்தது. வட இந்தியர்கள் தமிழ்த்துரோகிகள் என்று தமிழகத்தில் கேட்டுக்கேட்டுச் சலித்துப்போன கூற்று எங்களுக்குப் பொய்யுரையாகவேபட்டது. நாங்கள் ஏராளமான அரசு அதிகாரிகளைச் சந்தித்து ஆசியவியல் ஆய்வு நிறுவனம் ஆற்றிவரும் ஆய்வுப்பணிகள் பற்றி மிகத்துணிச்சலாக ஆங்கிலத்தில் பேசினோம். பொதுவிஷயங்களில் அப்பழுக்கற்ற உள்ளத்தோடு உயரிய முயற்சிகளை மேற்கொள்ள முயற்சி

செய்யும் போது யாருக்கும் அஞ்சத்தேவையில்லை என்று ஜப்பானிய நண்பர் அடிக்கடிக் கூறிக்கொண்டிருந்தார். எனவே நாங்கள் எந்த அதிகாரிகளைக் கண்டும் அஞ்சவில்லை. முன்பின் அறிமுகமில்லாதவர்களிடமெல்லாம் எங்களை நாங்களே அறிமுகம் செய்துகொண்டு எங்கள் பணி பற்றி எடுத்தியம்பினோம்.

மைய அரசு அதிகாரிகள் நாங்கள் சந்தித்த தமிழ்நாட்டு அதிகாரிகளிடமிருந்து சற்று வித்தியாசமாகவே காட்சி தந்தனர். நாங்கள் பேசியதை அவர்கள் மிகுந்த விருப்பத்தோடு கேட்டு வியந்து பாராட்டினர். தமிழ் நாட்டைச்சார்ந்த ஒருவர் ஜப்பானியர் ஒருவரையும் அழைத்துக்கொண்டு இந்திய நாட்டு ஆவணங்களையும், கலைச் செலவங்களையும் பாதுகாப்பது குறித்து உயிர்கலந்து, உணர்வு கலந்து பேசியது அவர்களை வியக்கவைத்தது. நாங்கள் தட்டிய கதவுகளெல்லாம் அன்புடனும், பண்புடனும் திறந்துகொண்டு எங்களை வரவேற்றது எங்களுக்குப் போதிய மனநிறைவு தந்தன. டாக்டர் கபிலா அவர்கள் மைய அரசின் பண்பாட்டுத் துறையிலிருந்து விலகிப் புதிதாகத் தொடங்கப்பட்டிருந்த இந்திராகாந்தி தேசியக்கலை மையத்தின் பொறுப்பை அப்போது ஏற்றிருந்தார். இந்தத் தில்லிப் பயணத்தின் போது டாக்டர் கபிலாவைச் சந்திக்கவேண்டும் என்ற எங்கள் ஆசை முழுமையாக நிறைவேறவில்லை. அவரோடு தொலைபேசியில் மட்டுமே நாங்கள் தொடர்புகொண்டு பேசமுடிந்தது. எனினும் நாங்கள் சென்னையிலிருந்து எழுதும் கடிதங்களுக்கெல்லாம் தவறாது டாக்டர் கபிலா அவர்கள் பதில் எழுதிக்கொண்டிருந்தார். டாக்டர் கபிலா அவர்களைச் சந்தித்து எங்கள் ஆய்வுத் திட்டங்களையெல்லாம் விளக்கவேண்டும் என்ற எண்ணம் அதிக விரைவில் நிறைவேறும் என்பதை நாங்கள் அப்போது அறியவில்லை.

வள்ளல் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள் ஏற்பாடு செய்திருந்த கருத்தரங்கம் ஒன்றிற்காகச் சென்னைக்கு வருகைதந்த டாக்டர் கபிலா அவர்களை நானும், நண்பர் டாக்டர் ஷு

உறிகோசகா அவர்களும் நேரில் சந்தித்து ஆசியவியல் ஆய்வு நிறுவனத்திற்கு வருகைதருமாறு வேண்டினோம். மனமுவந்து இசைவு தெரிவித்த டாக்டர் கபிலா அவர்கள் நிறுவனத்திற்கு வருகைதந்து நிறுவன ஆய்வுப்பணிகள் பற்றி நீண்ட நெடுநேரம் எங்களோடு கலந்துரையாடினார். நிறுவனத்தின் ஆய்வுப்பணிகள் அனைத்தையும் மனந்திறந்து அவர் பாராட்டினார். தமிழ் ஓலைச்சுவடிகள், தமிழக நாட்டுப்புறவியல் தொடர்பான எனது ஆய்வுத்திட்டங்கள் அவரை அதிக வியப்படையச் செய்தன. டாக்டர் கபிலா அவர்களோடு நாங்கள் ஏற்படுத்திக்கொண்ட தொடர்பு பற்றி 'தமிழும் நானும்' என்ற நூலில் மிக விரிவாகவே எழுதியுள்ளேன். எனவே அது பற்றி இங்கு விளக்கமாகக் கூறத்தேவையில்லை என்று எண்ணுகிறேன்.

## 6. சுவடிச் சேகரிப்பு

நாங்கள் மீண்டும் தில்லிக்குச் சென்று டாக்டர் கபிலா அவர்களை இந்திராகாந்தி தேசியக்கலை மையத்தில் சந்தித்தோம். நிறுவனத்தின் ஆட்சிக்குழு உறுப்பினராகச் செயலாற்ற வேண்டும் என்ற எங்களின் விருப்பத்தை டாக்டர் கபிலா அவர்கள் முழுமையாக ஏற்றுக்கொண்டார். டாக்டர் கபிலா அவர்களின் தொடர்பால் தமிழ் ஓலைச்சுவடிகள், தமிழக நாட்டுப்புறவியல் தொடர்பான எங்கள் ஆய்வுத் திட்டங்கள் மேலும் வலுப்பெறத் தொடங்கின.

மைய அரசிடமிருந்து ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் சுவடிப்புலத்திற்குத் தொடர்ச்சியாக மானியம் கிடைப்பதற்கும் டாக்டர் கபிலா அவர்கள் உதவினார்கள். அதோடு, சுவடியியல், நாட்டுப்புறவியல் தொடர்பான பல ஆய்வுப்பணிகளை மைய அரசு நிறுவனமான இந்திராகாந்தி தேசியக்கலை மையத்தோடு இணைந்து இந்நிறுவனம் மேற்கொள்ளவும் வழிபிறந்தது.

சுவடியியல் ஆய்வுப்புலம் தனது ஆய்வுத்திட்டங்களை ஒவ்வொன்றாகச் செயல் படுத்தத் தொடங்கியது. இந்த ஆய்வுப்புலத்தின் அடிப்படைத் திட்டங்கள் தொடக்க நிலையில் தமிழ்நாட்டை மையமாகக்கொண்டு சுழலவேண்டும் என்றும் காலப்போக்கில் ஆசிய நாடுகள் அனைத்தையும் தழுவவேண்டும் என்றும் தெளிவுபடுத்திக்கொண்டோம். ஓலைச்சுவடிகளில் அமைந்துள்ள தமிழ் இலக்கியங்களைக் காக்க வேண்டும் என்ற எங்களது எண்ணம் வாய்மொழியில் அமைந்த

படைப்புக்களையும், வழக்காறுகளையும் இணைத்தே பாதுகாக்க வேண்டும் என்று சற்று பரந்துபட்ட நோக்கில் அரும்பி மலரத்தொடங்கியது. இதன்விளைவாக ஓலைச்சுவடிகள் பற்றிய எங்களது ஆய்வுத்திட்டங்கள் நாட்டுப்புறவியல் தொடர்பான ஆய்வுப்பணிகளோடு இணைந்து சங்கமித்து வளரத்தொடங்கின.

சுவடிப்புலம் ஒருவாறு உறுதியான அடித்தளத்தின் மீது வளரத்தொடங்கியதும் இது தொடர்பான எண்ணம் என் உள்ளத்தில் தழைத்துவளரத் துணையாக இருந்த திரு. மு. கோ. ராமன் அவர்களைச் சுவடிப்புலக் காப்பாளராக அழைத்து நியமனம் செய்தோம். ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தில் சுவடிப்புலக் காப்பாளராகப் பணியாற்றத் தொடங்கிய அவர் அவ்வப்போது பல புதிய எண்ணங்களை என் நெஞ்சக்கழனியில் விதைத்துக்கொண்டே இருந்தார். ஈரப்பதம் பார்த்து விதைக்கும் ஓர் உழவர் பெருமகனைப்போன்று அவர் இருந்தார் என்று கூறுவது மிகவும் பொருந்தும். திடீரென என் அறையினுள் நுழைவார். சுவடிக்காப்பு தொடர்பாக ஏதாவது ஒரு புதிய கருத்தைக் கூறிச்செல்வார். அவர் சென்றதும் அவர் கூறியது பற்றி விரிவாக நான் அமர்ந்து சிந்திப்பேன். இப்படிப்பட்ட கலந்துரையாடல், கருத்துப்பரிமாற்றம் ஆகியவற்றின் மூலமாகப் பயன்மிக்க நீண்ட ஓர் ஆய்வுத்திட்டம் கொஞ்சங் கொஞ்சமாக நிமிர்ந்து நடைபயிலத் தொடங்கியது.

ஓலைச்சுவடிகள் அடங்கிய நூலகம் ஒன்று இந்தச் சுவடியியல் ஆய்வுப் புலத்தில் அமையவேண்டும் என்று நானும், ஜப்பானிய நண்பரும் விரும்பினோம். இதற்காக ஊர் ஊராகச்சென்று ஓலைச்சுவடிகளைச் சேகரிக்கத்தொடங்கினோம். இப்பணி தொடக்கத்தில் நாங்கள் நினைத்ததுபோல அவ்வளவு எளிமையாக இருக்கவில்லை. தமிழ்ப் பல்கலைக் கழகம் போன்ற ஒரு சில அமைப்புக்கள் சுவடி சேகரிக்கும் பணியில் தீவிரமாக இறங்கியதால் தமிழ் ஓலைச்சுவடிகளுக்குப் பணரீதியில் ஒரு

மதிப்பு ஏற்பட்டிருந்தது. சுவடிகளை விற்றுப் பணம் சம்பாதிக்கலாம் என்று சுவடிகளை வைத்திருப்போர் கனவுகண்டு கொண்டிருந்தனர். டாக்டர் உ. வே. சாமிநாதையர் ஓலைச்சுவடிகளைத் தேடும்போது பல்வேறு இடங்களிலிருந்த சுவடிகள் பற்றிய குறிப்புகளைத் தந்துள்ளார். அவை நாங்கள் தேடும்போது கொஞ்சங் கொஞ்சமாக அழிவடைந்துவிட்டன. சுவடிகளுக்கென பணரீதியில் ஒரு மதிப்பு திடீரென வரவே சுவடிகளை வைத்திருப்போர் அவற்றைக் காட்டவும் மறுத்தனர். ஓலைச்சுவடி என்றால் அதில் ஏதோ ஒரு முக்கியத்துவம் இருக்கவேண்டும் என்று அவர்கள் கருதத்தொடங்கினர். இந்த உணர்வு பலரும் திடீரென சுவடிகளைச் சேகரிக்கும் பணியில் ஈடுபட்டதால் ஏற்பட்டது என்பதை நாங்கள் உணர்ந்துகொள்ள முடிந்தது. அதோடு, சுவடிகளை வாங்கிப் பலரும் மேல்நாட்டினருக்கு அதிகவிலையில் விற்பதாகப் பெரிய அளவில் வதந்தி கட்டவிழ்த்து விடப்பட்டிருந்தது. இதனால் சுவடிகளைப் பெறுவது மிகவும் அரிய செயலாகவே இருந்தது. அரிச்சுவடிகளையும், சோதிடம், மாந்திரீகம் தொடர்பான சுவடிகளையும், வைத்தியம் தொடர்பான ஏடுகளையும் வைத்திருப்போர்கூட ஆயிரக்கணக்கில் விலை பேசத் தொடங்கினர். பூசையில் பயன்படுத்த வைத்திருப்போர் அவற்றைக் காட்டக்கூட மறுத்தனர்.

இந்தச் சமயத்தில் குமரி மாவட்டத்தில் நாட்டுப்புறவியல் தொடர்பான களஆய்வு ஒன்றை இந்திய தேசியக்கலை, கலாச்சார மையத்தின் (INTACH) துணையோடு ஆசியவியல் ஆய்வு நிறுவனம் மேற்கொண்டுவந்தது. திரு. ஸ்டீபன், டாக்டர் இராமச்சந்திரன் நாயர் என்ற இரு அலுவலர்கள் மேற்கூறிய களப்பணியினை முழுநேரப் பணியாகச் செய்து வந்தனர். அவர்களிடம் இந்நிறுவனத்தின் சுவடி சேகரிக்கும் திட்டம் பற்றி விரிவாக விளக்கினேன். களப்பணியின்போது முடிந்த அளவிற்கு ஓலைச்சுவடிகளையும் சேகரிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டேன். அவர்களும் அதற்கு இசைவு தெரிவித்தனர்.

சுவடி சேகரிப்புப் பணியில் எங்களோடு ஒத்துழைத்தவர்கள் பலர். அவர்களுள் டாக்டர் ஆ. தசரதன், டாக்டர் கோவிந்தசாமி, திரு. ஸ்டீபன், டாக்டர் இராமச்சந்திரன் நாயர், புலவர் கண்ணையன் ஆகியோர் மிகவும் குறிப்பிடத்தகுந்தோராவர்.

எங்களுடைய சுவடி சேகரிப்புப்பணி தொடக்கநிலையில் பெரும்பாலும் குமரி, திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களிலேயே நடைபெற்றது. நாங்கள் இப்பகுதிகளுக்குச் சென்றபோது பல இடங்களில் சுவடிகளைக் காட்டுவதற்குக் கூட மறுத்தனர். சிலர் சுவடிகளைக் காட்டியபோதிலும் படி எடுப்பதற்கு அவற்றைத்தர மறுத்தனர். அப்படிப்பட்ட சிலரிடம் சுவடியைப் படிக்கச்செய்து ஒலிநாடாக்களில் பதிவுசெய்துகொண்டோம். பின்னர் ஒலி நாடாக்களிலிருந்து அவற்றைக் காகிதத்தில் பெயர்த்தெழுதினோம். பல இடங்களில் பணம் கொடுத்து அரியபல நாட்டுப்புறப் பாடல்கள் அடங்கிய சுவடிகளை விலைக்கு வாங்கினோம். சில இடங்களில் கள் வாங்கிக் கொடுத்தும் சுவடிகளை வாங்க நேரிட்டதாக நண்பர்கள் எடுத்துரைத்தனர். யாப்பருங்கலக் காரிகையினைப் பாடங்கேட்க மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை கஞ்சா வாங்கிக்கொடுத்த நிகழ்ச்சியோடு எங்கள் அனுபவத்தை என் உள்ளம் ஒப்பிட்டு நோக்கியது. எவ்வாறாயினும் முடிந்த அளவிற்கு ஓலைச்சுவடிகளைப் பெற்றுவிட வேண்டும் என்று நிறுவனத்தின் அலுவலர்கள் ஊர் ஊராக அலைந்து பயணம் செய்தனர். இதன்விளைவாக நிறுவனத்தின் சுவடி நூலகத்திற்குத் தமிழகத்தின் பல்வேறு கிராமப்புறங்களிலிருந்து பல ஓலைச்சுவடிகள் வந்து குவியத் தொடங்கின.

பூதப்பாண்டியில் சுவடி தேடும்போது டாக்டர் இராமச்சந்திரன் நாயருக்கு மத்தள தாள இலட்சணம் எனப்பெயரிய தமிழ் இசை தொடர்பான அரிய சுவடியொன்று கிட்டியது. அதை மிக்க மகிழ்ச்சியுடன் அவர் நிறுவனத்திற்கு அளித்து எப்படியாவது வெளியிட்டுவிட வேண்டுமென்று

என்னிடம் வேண்டினார். 77 செய்யுட்களைக்கொண்ட அந்நூல் மிகப்பழங்கால நூலாகத் தென்பட்டது. பல தலைமுறையினரால் அது பிரதிசெய்யப்பட்டிருக்கவேண்டும் என்று தோன்றியது. அழகிய தமிழில் மத்தளம் எனும் இசைக்கருவியின் மாட்சி பற்றி அந்நூல் விரிவாக எடுத்தியம்பியது. அதை விரிவான உரையுடனும், ஆங்கில மொழிபெயர்ப்புடனும் வெளியிட வேண்டுமென்று நான் துடித்தேன். இசை தெரிந்த பலரிடம் அதைக்காட்டினேன். யாருமே முழுமையாக அதைப் புரிந்துகொள்ளவில்லை. இறுதியில் டாக்டர் வீ. ப. கா. சுந்தரம் அவர்கள் இந்நூலுக்கு உரையெழுத முன்வந்தார். அன்னாரின் அரிய விளக்க உரையுடனும், ஆங்கில மொழிபெயர்ப்புடனும் இந்நூல் (The Art of Drumming) என்ற பெயரில் வெளிவந்து அனைவரின் பாராட்டுதலையும் பெற்றது. ஓர் அரிய நூலை அழிவிலிருந்து காத்து உலகிற்கு அறிமுகப்படுத்திய பெருமிதம் நெஞ்சில் நிழலாடியது.

திரு. ஸ்டீபன் அரிய நாட்டுப்புற இலக்கியங்களைத் தாங்கிய பல ஓலைச்சுவடிகளை நிறுவனத்திற்குப் பெற்றுத்தந்தார். குமரி மாவட்டத்திலுள்ள கல்குளம், விளவங்கோடு ஆகிய பகுதிகளைச் சார்ந்த அரியபல ஓலைச்சுவடிகளை இவர் வாயிலாக இந்நிறுவனம் பெறமுடிந்தது. டாக்டர் ஆ. தசரதனும், நானும் சுவடிதேடும் பணிக்காக நாகர்கோவில் சென்றிருந்தபோது அகஸ்தீஸ்வரத்தைச் சேர்ந்த ஆறுமுகப்பெருமாள் நாடார் அவர்களிடமுள்ள சுவடிகளை எப்படியாவது இந் நிறுவனத்திற்காகப் பெற்றுவிட வேண்டுமென விரும்பினோம். நாட்டுப்புறவியல் தொடர்பாகப் பல அரிய ஓலைச்சுவடிகள் அவரிடமிருப்பதை நான் பலமுறை கேள்விப்பட்டிருக்கிறேன். வில்லுப்பாட்டு போன்ற நாட்டுப்புறக் கலைகள் பற்றி ஆய்வு செய்த அமெரிக்கநாட்டு அறிஞர்களுக்கு அவரது சுவடிகள் துணைசெய்த பாங்கினை நான் அறிந்திருந்தேன். எனவே டாக்டர் தசரதனோடு ஒரு சிலரை அகஸ்தீசுரம் அனுப்பி

வைத்தேன். திரு. ஆறுமுகப்பெருமாள் நாடார் அவர்கள் அண்மையில் மறைந்துவிட்டார்கள் என்றும், அவர் தம் குடும்பத்தினரிடம் 150 சுவடிகள் உள்ளன என்றும் அவற்றை அவர்கள் விற்பனை செய்யத் தயாராக உள்ளனர் என்றும் அவர்கள் குறிப்பிட்டனர். உடனே அவர்களை அங்கு அனுப்பித் தகுந்த விலைகொடுத்து அந்தச் சுவடிகளை நிறுவனத்திற்கு வாங்கினோம். இதன்வாயிலாக அரியபல சுவடிகள் நிறுவனத்தின் சுவடிப்புலத்தை அணிசெய்தன.

டாக்டர் ஆ. தசரதன் திருநெல்வேலி மாவட்டத்திலிருந்து பல சுவடிகளை நிறுவனத்திற்குப் பெற்றுத்தந்தார். இராமநாதபுரம் மாவட்டத்திலிருந்து பல சுவடிகள் டாக்டர் கோவிந்தசாமி அவர்களால் சேகரிக்கப்பட்டன. புலவர் கண்ணையன் அவர்கள் திண்டிவனம் போன்ற பல பகுதிகளிலிருந்து சில கிரந்தச் சுவடிகளையும், சமண சமயம் சார்ந்த பல அரிய சுவடிகளையும் கொண்டு குவித்தார். தஞ்சை போன்ற மாவட்டங்களிலிருந்தும் பல அரிய சுவடிகள் நிறுவனத்திற்கு வந்து சேர்ந்தன. இப்பணி இன்றும் இடைவிடாது தொடர்கின்றது. ஆயிரத்திற்கும் மேற்பட்ட அரிய தமிழ்ஓலைச்சுவடிகளைக் கொண்டு இந்நிறுவனத்தின் சுவடி நூலகம் துலங்குவது என்னைப் பலமுறை மகிழ்ச்சியில் ஆழ்த்தியுள்ளது.

சுவடிகளைப் பேணிப்பாதுகாப்பதற்குரிய பல கருவிகள் வாங்க மைய அரசு மீண்டும் உதவிபுரிந்தது. ஜப்பானிய நண்பரும் இத்துறையின் வளர்ச்சிக்குப் போதிய உதவி நல்க முன்வந்தார். சுவடிப்பாதுகாப்பிற்குத் தக்க நடவடிக்கைகள் பலவற்றை மேலும் இந்நிறுவனம் மேற்கொள்ளத் தொடங்கியது. இந்தச் சுவடி நூலகம் படிப் படியாக வளர்ந்து வருவது நெஞ்சுக்கு நிறைவுதருகிறது. காலப்போக்கில் தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய ஆய்விற்குரிய அரிய மையமாக இந்நூலகம் திகழும் என்ற நம்பிக்கை எங்கள் உள்ளத்தில் தளிர்விடத் தொடங்கியது.

# 7. சிதறிக்கிடக்கும் தமிழ் ஓலைச்சுவடிகள்

உலகெங்கிலும் சிதறிக்கிடக்கும் தமிழ் ஓலைச்சுவடிகளின் எண்ணிக்கை எவ்வளவு என்பதைக் கண்டறிவதில் நாங்கள் அதிக ஆர்வம் காட்டத்தொடங்கினோம். தமிழ் ஓலைச்சுவடிகள் தமிழ்நாட்டில் மட்டுமன்றி பிற மாநிலங்களிலும் ஏராளம் இருப்பதை அறிந்தோம். திருவனந்தபுரம், கல்கத்தா ஆகிய இடங்களில் ஏராளமான தமிழ் ஓலைச்சுவடிகள் இருப்பதை நாங்கள் அறிய நேரிட்டது. மேலும் தமிழ் நூல்கள் மலையாள எழுத்துக்களிலும், கன்னட எழுத்துக்களிலும் தெலுங்கு எழுத்துக்களிலும் எழுதிவைக்கப்பட்டிருப்பதை திரு மு.கோ. ராமன் எடுத்துக்காட்டினார்.

இந்திய மாநிலங்களில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் ஏராளமான தமிழ்ச் சுவடிகள் இருப்பது பற்றி நான் விரிவாகத் தெரிந்து கொண்டேன். திரு. கிருஷ்ணமூர்த்தி என்பவர் இதுபற்றி பல ஆண்டுகளுக்கு முன்னர் ஒரு பட்டியல் தயாரித்திருந்தார். ஹாங்காங் பல்கலைக் கழகத்தைச் சார்ந்த எனது நண்பர் டாக்டர் கிரகோரி ஜேம்ஸ் அவர்கள் ஐரோப்பாவின் பல பகுதிகளிலுள்ள தமிழ் ஓலைச்சுவடிகளின் பட்டியல் ஒன்றினைத் தமிழியல் எனப்பெயரிய ஆய்வு இதழ் ஒன்றில் சில ஆண்டுகளுக்கு முன்னர் வெளியிட்டார். இதில் பெரும்பாலும் ஐரோப்பிய நாடுகளில் பல்வேறு நிறுவனங்களிடம் உள்ள ஏறத்தாழ 3000 தமிழ்ச் சுவடிகள் பற்றியக் குறிப்பு இடம்பெற்றிருந்தது. தமிழ் ஓலைச்சுவடிகள் ஐரோப்பிய நாடுகளில் 88 நிறுவனங்களில்

உள்ளதாக டாக்டர் கிரகோரி ஜேம்ஸ் இக்கட்டுரையில் குறிப்பிட்டிருந்தார். இந்த 88 நிறுவனங்களைத் தவிர மேலும் பல அமைப்புக்களில் தமிழ்ச்சுவடிகள் உள்ளதாகவும், அவை பற்றிய தகவல்களைத் தேடிக்கொண்டிருப்பதாகவும் நண்பர் டாக்டர் கிரகோரி ஜேம்ஸ் சுட்டியிருந்தது என்னை வியப்பில் ஆழ்த்தியது. கடல் கடந்து பயணம் மேற்கொண்ட தமிழ்ச்சுவடிகளை நினைத்துப்பார்க்கும்போது நெஞ்சில் பெருமித உணர்வு ஏற்பட்டது. எனினும் இவை பயன்படுத்துவாரில்லாமல் ஆங்காங்கே சிந்திச் சிதறிக்கிடப்பதை நினைத்தபோது வருத்தமே மேலிட்டது. இலண்டன் மாநகரத்திலுள்ள தமிழ்ச்சுவடிகள் மலபார் ஆவணங்கள் எனப் பெயரிடப்பட்டுக் கட்டிவைக்கப்பட்டுள்ளதாக நண்பர்கள் புகன்றனர். இவற்றையெல்லாம் படியெடுத்தாவது அவை பிறந்த மண்ணிற்கு மீண்டும் கொண்டுவர வேண்டுமென்று நான் விரும்பினேன்.

இந்தியத் தட்பவெப்ப நிலைகளுக்கு 300 ஆண்டுகள் வரையே தாக்குப் பிடிக்கவல்ல இக்கலைக் கருவூலங்கள் ஐரோப்பிய நாட்டின் தட்பவெப்ப நிலைகளுக்கிடையில் மேலும் பல ஆண்டுகள் உயிர்வாழ முடியும் என்ற உண்மைநிலை என்னை ஓரளவு மகிழ்ச்சியடையச் செய்தது. இந்தச் சுவடிகளையெல்லாம் எப்படிப் பிரதி செய்து கொண்டுவருவது எனப் பலமுறை நான் ஆழ்ந்து சிந்தித்தேன். இது பற்றி டில்லிக்குச் சென்று டாக்டர் கபிலா அவர்களோடு கலந்துரையாடினேன். வெளிநாடுகளிலுள்ள இவற்றைப் பிரதி செய்வதில் பல சிக்கல்கள் உள்ளன என்பதை அவர் விளக்கினார். இப்பணியைச் செய்ய ஏராளமான பொருட்செலவு ஏற்படும் என்பதையும் அவர் தெளிவுபடுத்தினார். தமிழ்ச்சுவடிகளை வைத்திருக்கும் வெளிநாட்டு நிறுவனங்களைக் கேட்டால் அவர்களே அவற்றைப் பிரதிசெய்து தருவதற்கும் வாய்ப்புக்கள் உள்ளன. எனினும் அவர்கள் அதிகத் தொகை கேட்டால் அதைக்கொடுப்பது சிரமம் என்று அஞ்சினோம்.

இந்நிலையில் டாக்டர் கபிலா அவர்களோடு உரையாடிய போது இச்சுவடிகளைப் பிரதி செய்வதற்குரிய வாய்ப்புக்கள் பிறப்பதற்குரிய சாத்தியக்கூறுகள் சில இருப்பதாகத் தென்பட்டன. இந்திராகாந்தி தேசியக்கலை மையத்தின் ஒரு பிரிவாகச் சுவடிப்பாதுகாப்புப் பகுதியும், மற்றொரு பகுதியாக நாட்டுப்புறக்கலைகள், இலக்கியங்கள் ஆகியவற்றின் பாதுகாப்புப் பகுதியும் செயல்படுகின்றன. இவ்விரு பகுதிகளோடு இணைந்து பல் ஆய்வுத்திட்டங்களைச் செயல்படுத்த ஆசியவியல் ஆய்வு நிறுவனம் விழைவதாக நான் குறிப்பிட்டபோது மிக்க மகிழ்ச்சியுடன் டாக்டர் கபிலா அவர்கள் அதற்கு இசைவளித்தார்கள்.

இந்திராகாந்தி தேசியக்கலைமையம் இந்திய மொழி களிலுள்ள சுவடிகள் பற்றிய தகவல்களைக் கணிப்பொறி (Computer) வாயிலாகத் தரவுக்கிடங்கில் (Data Bank) சேமித்துவைக்கும் பணியினை அப்போது தொடங்கத் திட்டமிட்டிருந்தது. இத்திட்டத்தில் தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய தகவல்களைச் சேகரிக்கும் பணியினை ஆசியவியல் ஆய்வு நிறுவனத்திடம் ஒப்படைக்க நான் வேண்டியதை டாக்டர் கபிலா அவர்கள் ஏற்றுக்கொண்டார். இத்திட்டத்தை மிகச்சிறப்புடன் ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் சுவடியியல் ஆய்வுப்புலம் இந்திராகாந்தி தேசியக்கலை மையத்துடன் இணைந்து செயல்படுத்தி வருகின்றது. இதுவரை பட்டியல் தயாரிக்கப்படாத 10,000 க்கும் மேற்பட்ட தமிழ் ஓலைச்சுவடிகள் தொடர்பான தகவல்களை இத்திட்டத்தின் கீழ் இந்நிறுவனம் சேகரித்துள்ளது குறிப்பிடத்தக்கது.

இந்திராகாந்தி தேசியக் கலைமையம் பிற நாடுகளில் காணப்படும் இந்திய மொழிகளில் அமைந்துள்ள சுவடிகள் அனைத்தையும் நுண்படச்சுருளாக (Microfilm) பிரதிசெய்யத் திட்டமிட்டுள்ளதாக டாக்டர் கபிலா அவர்கள் குறிப்பிட்டார்கள். இத்திட்டம் செயல்படுத்தப்படும்போது நீங்கள் மீண்டும் மீண்டும்

வற்புறுத்திக்கொண்டிருக்கும் தமிழ்ச்சுவடிகள் அனைத்தும் பிரதி செய்யப்பட்டுவிடும் என்று டாக்டர் கபிலா அவர்கள் குறிப்பிட்டபோது நான் அதிக மகிழ்ச்சியடைந்தேன். வெளிநாட்டிற்குச் சென்றுவிட்ட என் தாய்மொழியின் படைப்புக்களையெல்லாம் மீண்டும் இந்தத் தமிழ் மண்ணிற்குக் கொண்டுவந்துவிட்டது போன்ற மனநிறைவு அப்போது ஏற்பட்டது. தமிழ்த்தாய் இழந்துபோன தன் அணிகலன்களில் பலவற்றை மீண்டும் அணிந்து ஆனந்தத் தாண்டவமிடுவது போன்ற பெருமகிழ்ச்சி எனக்கு ஏற்பட்டது.

## 8. ஜப்பானில் தமிழ் ஓலைச்சுவடி

ஐரோப்பிய நாடுகளில் மட்டுமன்றி பிற ஆசிய நாடுகளிலும் தமிழ்ஓலைச்சுவடிகள் ஏராளமாக இருப்பதை அறிந்து கொண்டோம். இலங்கை, தாய்லாந்து, மலேசியா போன்ற நாடுகளில் உள்ள தமிழ்ச்சுவடிகள் பற்றிய தகவல்களைச் சேகரிக்கும் முயற்சியிலும் நாங்கள் ஈடுபட்டோம். ஜப்பான், கொரியா போன்ற நாடுகளுக்கும் தமிழ் ஓலைச்சுவடிகள் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் பயணப்பட்டுள்ள செய்தி என்னை அதிகமாக வியப்படையச் செய்தது. ஜப்பானிய நண்பர் ஜப்பானிலுள்ள ஒரு நிறுவனத்திலிருந்து ஓர் அரிய தமிழ் ஓலைச்சுவடியின் பிரதி ஒன்றினைக் கொண்டுவந்தார். இச்சுவடி மருத்துவம், போர்ப்பயிற்சி போன்றவற்றோடு உறவுகொண்ட வர்மம் அல்லது மர்மக்கலை பற்றிய சுவடியாகும். இச்சுவடியை ஆய்ந்து பார்த்தபோது அதன் நடை தென்குமரித் தமிழாக இருந்தது கண்டு வியப்புற்றேன். தென்குமரித் தமிழ்ச்சுவடியின் ஜப்பானியப் பயணம் எங்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. ஜப்பானின் கராத்தே, சோளிஞ்சோகெம்போ போன்ற போர்க்கலைகள் தென்குமரியின் மர்ம அடி, கேரளத்தின் களரிப்பயிற்று போன்றவற்றோடு உறவுகொண்டிருப்பதன் காரணம் இப்போது எங்களுக்குப் புரிந்தது. தமிழ்நாட்டுப் பௌத்தத் துறவிகள் இக்கலைகளையும், இவை சார்ந்த சுவடிகளையும் சீன நாட்டிற்கு எடுத்துச் செல்ல அங்கிருந்து இவை ஜப்பான் போன்ற நாடுகளைச் சென்று எட்டியிருக்கலாம்

என்று ஜப்பானிய நண்பர் குறிப்பிட்டார். காஞ்சியிலிருந்து போதிதர்மர் என்ற துறவி சீன நாட்டிற்குச் சென்று தியான பௌத்தத்தைத் தொடங்க அதுவே சென் பௌத்தம் என்ற பெயரில் ஜப்பானில் பரவியதையும், இந்தியத் திருநாட்டை ஜப்பானியர்கள் இன்றும் தங்கள் ஆன்மிகத் தாய்நாடாகப் (Spiritual Motherland) போற்றுவதையும் நான் இணைத்து நோக்கினேன். தமிழ்ப்பண்பாட்டைப் பௌத்தத்தோடு கலந்து உறவாடவிட்டுப் பின்னர் இவ்விரண்டையும் ஆசிய நாடுகள் எங்கும் பரப்பிய தமிழ் நாட்டுப் பௌத்தத் துறவிகளுக்கு என் மனம் மவுனமாக அஞ்சலி செலுத்தியது.

குமரிமாவட்டத்தில் இந்த வர்மக்கலை மிகவும் புகழ்பெற்ற கலையாக இன்றும் திகழ்கின்றது. இந்த வர்மக்கலையைச் சிறப்புறத் தெரிந்து வைத்திருப்பவர்களை ஆசான் என்று குமரித்தமிழில் அழைப்பது வழக்கம். மலையாள மொழியில் ஆசான் என்பது ஆசிரியரைச் சுட்டும். தொல்காப்பியம் அதங்கோட்டு ஆசான் தலைமையில் அரங்கேற்றப்பட்ட செய்தியும் இங்கு இணைத்து நோக்கத்தக்கது. குமரி மாவட்ட ஆசான்கள் இந்தக் கலையை இன்றும் பேணிப்பாதுகாக்கின்றனர். வர்மக்கலையை அடிப்படையாகக் கொண்ட இவர்களின் வைத்தியமும் போர் முறை (அடிமுறை)யும் மிகவும் தனித்தன்மை வாய்ந்தவை. இக்கலையை ஆசறத் தெரிந்தோரைப் பழைய திருவிதாங்கூர் மன்னர்கள் படைத்தலைவர்களாக அமர்த்தி அவர்கள் வாயிலாகப் போர்ப்பயிற்சியளித்ததாக இப்பகுதியின் வரலாறு தெரிவிக்கின்றது.

ஜப்பானிய நண்பர் இந்தத் தமிழ்ச் சுவடியைப் பதிப்பித்து ஆங்கில மொழி பெயர்ப்புடன் நூலாக வெளியிட விரும்பினார். இதற்கு ஒரு ஜப்பானிய மொழி பெயர்ப்பும் வெளிவர வேண்டும் என்பது அவரது விருப்பம். இதனை ஒருவாறு ஓலைச் சுவடியிலிருந்து காகிதத்தில் பெயர்த்தெழுதி விளங்கிக்கொள்ள முயன்றோம். எனினும், இதற்குத் தமிழில் விளக்க உரை

எழுதவும், இதனை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கவும் தகுந்த அறிஞர்கள் கண்ணில் தட்டுப்படாததால் ஜப்பானிலிருந்து தாயகம் திரும்பிய இந்த ஓலைச்சுவடி மீண்டும் சிறிதுகாலம் சென்னையில் அறிதுயில் கொள்ள நேரிட்டது.

இந்நிலையில் ஜப்பானியப் பேராசிரியர் ஒருவரின் கடைக்கண் பார்வை இந்தத் தமிழ்ச்சுவடியின் மீது விழவே இதற்கு நல்லகாலம் பிறந்துவிட்டது. அந்த ஜப்பானியர் இதன்மீது காட்டிய கருணையால் அது தமிழில் நூலாக வடிவம் பெற்று ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளிவந்துவிட்டது. ஜப்பானிய மொழியில் அது விரைவில் மொழிபெயர்க்கப்பட்டு இந்தியவியல் ஆய்வில் ஆர்வங்காட்டும் ஜப்பானிய அறிஞர்களின் கரங்களிலெல்லாம் விரைவில் தவழ்ந்து விளையாடப்போகின்றது.

மேற்கூறிய நல்லகாலத்தை இந்தத் தமிழ் ஓலைச்சுவடிக்கு நல்கிய ஜப்பானிய அறிஞர்தான் பேராசிரியர் ஷிமிட்சு என்பவர். கியோட்டோ மாநகரிலுள்ள பல்கலைக்கழகம் ஒன்றில் உடல்நல ஆய்வு மையத்தில் (Health Science) பேராசிரியராகப் பணிபுரிபவர் பேராசிரியர் ஷிமிட்சு அவர்கள். ஜப்பானுக்கும் இந்தியாவுக்கும் இடையிலுள்ள பண்பாட்டு உறவுகளை ஆய்வுசெய்வதில் மிகத்துடிப்புள்ள இவ்விளைஞர் டாக்டர் ஹிகோசகா அவர்களின் மூலம் தமிழ்மொழி, தமிழ் இலக்கியம் ஆகியவற்றின் சிறப்பு பற்றிக் கேள்விப்பட்டுத் தமிழகம் வந்து ஆசியவியல் ஆய்வு நிறுவனப் பணிகளைப் பார்வையிட வேண்டுமென்று விரும்பினார். தன்னுடன் பேராசிரியர் ஷிமிட்சு அவர்கள் சென்னை வருவதாகவும், எனது வீட்டில் ஒருவாரம் தங்கியிருக்க விரும்புவதாகவும் டாக்டர் ஷுஹிகோசகா அவர்கள் ஜப்பான்லிருந்து தொலைபேசியில் தெரிவித்தபோது நான் மிகவும் மகிழ்ந்துபோனேன்.

குறிப்பிட்ட நாளில் பேராசிரியர் ஷிமிட்சு அவர்களையும், ஜப்பானிய நண்பர் டாக்டர் ஹிகோசகா அவர்களையும் விமான

நிலையத்திற்குச் சென்று வரவேற்றேன். ஒருவாரகாலம் என்னுடன் தங்கியிருந்த அவர் உடல்நலம் பேணுதல் பற்றிய சிந்தனைகளில் ஜப்பானுக்கும் இந்தியாவிற்கும் இடையில் பல தொடர்புகள் இருப்பதைப்பற்றி விளக்கி இத்தலைப்பில் ஆசியவியல் ஆய்வு நிறுவனம் வழியாகச் சென்னைப்பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்ட ஆய்வை மேற்கொள்ள தாம் விரும்புவதாகக் குறிப்பிட்டார். அவர் இங்கு டாக்டர் பட்ட ஆய்வுக்குப் பதிவு செய்வதில் சில நிர்வாகச் சிக்கல்கள் இருந்ததால் சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் சாதிக் அவர்களிடம் இதுபற்றி விளக்கிக்கூறினோம். ஜப்பானிய அறிஞரின் ஆர்வம் கண்டு வியந்த துணைவேந்தர் அவர் ஆய்வுக்குப் பதிவு செய்வதற்குரிய எல்லா உதவிகளையும் செய்வதாக உறுதியளித்தார்.

ஆசியவியல் ஆய்வு நிறுவன நூலகத்திலுள்ள ஓலைச் சுவடிகள் இந்த ஜப்பானிய அறிஞரை வியப்பில் ஆழ்த்தின. பல நாட்கள் தொடர்ந்து தமிழக நாட்டு மருத்துவம் பற்றியும், தொன்மையான ஜப்பானிய நாட்டு மருத்துவமான நீஞ்சா பற்றியும் அவர் என்னோடு விவாதித்தார். இந்நிலையில் சென்னைத் தொலைக்காட்சி நிலையம், ஆசியவியல் ஆய்வு நிறுவனம் பற்றியும், ஜப்பானிய அறிஞர்களின் தமிழார்வம் பற்றியும் ஒரு கலந்துரையாடலுக்கு ஏற்பாடு செய்தது. சென்னைத் தொலைக்காட்சியின் இக்கலந்துரையாடலில் நானும், டாக்டர் ஹிகோசகாவும், பேராசிரியர் ஷிமிட்சு அவர்களும் கலந்துகொண்டோம். இக்கலந்துரையாடலின்போது தமிழக நாட்டு மருத்துவத்திற்கும், ஜப்பானிய நாட்டு மருத்துவமான நீஞ்சா முறைக்குமிடையேயுள்ள தொடர்பு பற்றிப் பேராசிரியர் ஷிமிட்சு விளக்கினார். இவ்விரு மருத்துவ முறைகளையும் ஒப்பிட்டு ஆயவேண்டிய இன்றியமையாமை பற்றியும் அவர் வற்புறுத்தினார்.

ஜப்பானிலிருந்து தாயகம் திரும்பிய வர்மக்கலை பற்றிய தமிழ் ஓலைச்சுவடி பேராசிரியர் ஷிமிட்சு அவர்களை மிகவும் வியப்பில் ஆழ்த்தியது. போதிய நிதியுதவி இல்லாமல் அந்தத் தமிழ் ஓலைச்சுவடி வெளிவராமல் மூலையில் முடங்கிக்கிடப்பது அவரை வருத்தமடையச் செய்தது. தமிழ்நாட்டின் அறிவுக் கருவூலங்களின் தலைவிதியை அறிந்து வருந்திய அவர் இச்சுவடியை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து விளக்கவுரையுடன் பதிப்பித்து வெளியிடுவதற்குரிய முழுச்செலவையும் ஏற்றுக்கொள்ள முன்வந்தார். அதோடு, இதன் ஜப்பானிய மொழிபெயர்ப்பு ஒன்றினையும் வெளியிட இசைவு தெரிவித்தார்.

நிறுவனத்தின் சுவடித்துறைப் பேராசிரியர் டாக்டர் பூ. சுப்பிரமணியம் அவர்களிடம் இது பற்றிப் பேசியபோது அவர் தாமே இந்நூலுக்கு ஆய்வுரையும், விளக்கவுரையும் எழுத முன்வந்தார். இதன் ஆங்கில மொழிபெயர்ப்பும் உடனே தயாரானது. இந்நூலின் வெளியீடு என்னைப் பெருமகிழ்ச்சியில் ஆழ்த்தியது. தமிழ்கச்சுவடி ஜப்பானுக்குச் சென்று மீண்டும் தமிழகம் வந்து ஜப்பானிய அறிஞர்களின் துணையால் உலக அறிஞர் அரங்கிற்கு அறிமுகமான நிகழ்ச்சி இந்நிறுவனத்தின் குறிப்பிடத்தகுந்த சாதனைகளுள் ஒன்றாகவே அமைந்துள்ளது.

# 9. தமிழ் ஓலைச்சுவடிகளின் வெளியீடு

தமிழ் ஓலைச்சுவடிகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிடும் திட்டத்தின்கீழ் இந்நிறுவனம் சர்வதேசத்தரம் வாய்ந்த பல நூல்களைப் பழைய ஓலைச்சுவடிகளிலிருந்து வெளிக் கொண்டு வந்துள்ளது. இத்திட்டத்தைப் பொறுத்த வரையில் நிறுவனத்தின் பார்வை நாட்டுப்புறவியல் சார்ந்த ஓலைச் சுவடிகளின் மீது அழுத்தமாகவே பதிந்திருந்தது. தமிழகம் தொடர்பாக மேற்கொள்ளப்படவேண்டிய சமூகவியல் தொடர்பான ஆய்வுகளுக்கும், வரலாற்று ஆய்வுகளுக்கும் ஏட்டில் தவழ்ந்து வந்துள்ள நாடோடிப் பாடல்கள், குறிப்பாகக், கதைப் பாடல்கள் அடித்தளமாக அமைவதை நான் அனுபவபூர்வமாக உணர்ந்தவன். நம் நாடு பற்றிய வரலாற்று நூல்களெல்லாம் பெரும்பாலும் மன்னர்களின் வரலாறாகவும், உயர்குடி மக்களின் வரலாறாகவுமே இருந்து வந்துள்ளன. கல்வெட்டுக்களில் வீரத்தையும் வெற்றியையும் பேசினரே தவிர, தோல்வியுற்ற மன்னர்கள்கூட தம் தோல்வி பற்றிய செய்திகளை எழுதிவைப்பதில்லை. சாதாரண மனிதர்களின் சாதனைகள் உயர்குடியைச் சார்ந்தோர் பற்றிய இலக்கியங்களிலும் ஆவணங்களிலும் ஓரளவு மூடி மறைக்கப்பட்டே வந்துள்ளன, அல்லது பின்னுக்குத் தள்ளப்பட்டுள்ளன. தஞ்சை பெரிய கோயிலைக் கட்டுவித்த இராஜராஜன் பெயர் பறைசாற்றப் படுகின்றதே தவிர, அதை வடிவமைத்த கட்டிட வல்லுநர்கள்,

சிற்பிகள் ஆகியோர் பெயர்கள் இருட்டடிப்புச் செய்யப்பட்டே வந்துள்ளன. அரும் பெரும் சாதனைகளை ஏற்கனவே புகழ்பெற்றவர்கள் மீது ஏற்றிக்கூறும் ஒரு பொதுப் போக்கும் இந்நாட்டில் நிலவியது. எழுதியவன் தன் பெயரில் நூலை வெளியிடத் தயங்கிவந்துள்ள போக்கினைத் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஆங்காங்கு காணமுடிகிறது. எழுத்தாளனுக்குப் போதிய சமூக அந்தஸ்து அல்லது மதிப்பீடு (Social Status) இல்லாமையும் இதன் காரணமாக இருக்கலாம் என்று நான் நினைத்துப் பார்த்ததுண்டு. மருத்துவம் தொடர்பாக எழுதப்பட்ட நூல்களெல்லாம் அகத்தியர் எழுதியதாக அறிவிக்கப்பட்டுள்ளன. நல்ல நாட்டுப்புற இலக்கியங்களெல்லாம் புகழேந்திப்புலவர் மீது சார்த்திப் பேசப்பட்டுள்ளன.

தொடக்க நிலையில் நமது வரலாறுகளை எழுதியவர்கள் பெரும்பாலும் மேல்நாட்டு அதிகாரிகளாக (Civil Servants) இருந்ததால் அரசாண்ட மன்னர்கள், அதிகாரிகள் ஆகியோரின் அரசியல் வரலாறுகளாகவே பெரும்பாலான நமது வரலாற்று நூல்கள் அமைந்துவிட்டன. ஆளப்பட்டோர் பற்றியோ, ஒடுக்கப்பட்டோர் பற்றியோ, சமுதாய அந்தஸ்தைப் பெறாதவர் பற்றியோ, தோல்வி கண்டோர் பற்றியோ, சூழ்ச்சியால் முறியடிக்கப்பட்டோர் பற்றியோ, அதிகார வர்க்கத்தை எதிர்த்துக் குரலெழுப்பியோர் பற்றியோ, ஆளும் வர்க்கத்தின் தவறுகளைச் சுட்டிக்காட்டி வெஞ்சிறையில் செத்தவர்கள் பற்றியோ நமக்கு அதிகமாகத் தெரியவில்லை. ஆனால் இவற்றையெல்லாம் வாய்மொழியிலும், பழைய ஓலைச்சுவடிகளிலும் நின்று நிலவும் நாட்டுப்புற இலக்கியங்கள் பேணிப் பாதுகாத்தன. மக்கள் மத்தியில் மேற்கூறியோர் வீரர்களாகவும், தெய்வவடிவம் பெற்ற விந்தை மனிதர்களாகவும் துலங்கினர். எளிய மக்களின்

மனங்களில் சாகாவரம் பெற்று வாழும் இவர்தம் வரலாறுகள் பெரும்பாலும் ஓலைச்சுவடிகளில் எழுதிவைக்கப்பெற்றன; நாட்டுப்புறக் கலைகளில் இவை பரிணமித்தன. இவற்றை வெளிக்கொணர்ந்து தமிழகத்தின் புதிய அரசியல் வரலாற்றை எழுதுவோருக்கும், அதன் சமுதாய வரலாற்றை வடிப்போருக்கும் இந்நிறுவனம் அரிய பல தகவல்களைத் தந்து ஆய்வு உலகை வளப்படுத்தியது; தமிழகம் பற்றிய அரியபல செய்திகளை உலகிற்குத் தந்து பெருமைபெற்றது.

இந்த வரிசையில் சின்னத்தம்பி கதை, குருக்களாஞ்சிகதை, உச்சினிமாகாளியம்மன் கதை என்ற மூன்று கதைப்பாடல்களை ஓலைச்சுவடிகளிலிருந்து பதிப்பித்து விளக்க உரையுடனும், ஆங்கில மொழிபெயர்ப்புடனும் The Wandering Voice என்னும் அழகிய தலைப்பில் வெளியிட்டோம். இம்மூன்று படைப்புக்களையும் ஒருவித போராட்ட இலக்கியம் (Literature of Confrontation) என்று குறிப்பிடுவது மிகவும் பொருந்தும். இந்நூலின் ஆய்வுரை விளக்கவுரை போன்றவற்றை நிறுவனத்தின் ஆய்வாளர் டாக்டர் நிர்மலாதேவி எழுத டாக்டர் வி. முருகன் இதனை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார்.

வசதி படைத்த உயர்சாதியினரின் பேராசைக்கும், சாதிவெறிக்கும் தாழ்ந்தகுலத்தில் பிறந்த ஏழை வீரனொருவன் பலியாவதைச் சின்னத்தம்பி கதைப்பாடல் மிகச்சிறப்பாகச் சித்திரித்திருந்தது. கலப்புத்திருமணம் செய்துகொண்ட இருவரை வெறிகொண்ட உயர்சாதியினர் வெட்டிக்கொன்று சாதீய தர்மத்தை நிலைநாட்ட முயற்சி செய்யும் கோர நிகழ்ச்சியைக் குருக்களாஞ்சிகதை சித்தரித்துள்ளது. இப்படைப்பு சாதீய சமுதாய அமைப்புக்கு எளியமக்கள் விடுத்துள்ள சவாலாகவே அமைந்துள்ளது.

சமுதாய மாற்றத்தைக் காளியின் நடனமாக, ஊழிக்கூத்தாகப் பாரதி சித்திரித்துள்ளான். வெள்ளையர்களைக் காளி கருவறுத்துச் சுதந்திர இந்தியாவிற்கு வித்திட்டதாகப் பாமரமக்களின் படைப்பான உச்சினிமாகாளியம்மன் கதை விளக்கிச் செல்கின்றது. மேற்கூறிய இந்தத் தொகுப்பு பலராலும் பாராட்டப்பெற்றது. தமிழ்ப் பல்கலைக் கழகம் விருது நல்கி இப்படைப்பைச் சிறப்பித்தது எங்களையெல்லாம் அதிக மகிழ்ச்சியடையச் செய்தது.

## 10. வரலாற்றுச் சுவடிகள்

வரலாற்றை விளக்கும் காரல் மார்க்ஸ் - வரலாறு என்பது வர்க்கங்களுக்கு இடையே நிகழும் முரண்பாடுகளும், போராட்டங்களுமே (Class struggle) என்று எழுதிச் சென்றார். இந்தியச் சமுதாயத்தின் அடித்தளமாக அமைந்து இச் சமுதாயததைக் காலந்தோறும் பல்வேறு திசைகளில் இயக்கிவைத்தவை பொருளாதார அடிப்படையில் அமைந்த வர்க்கங்களை விடவும் சாதி அடிப்படையில் ஆன பிரிவுகளே என்பதை இந்திய வரலாறு தெளிவாகவே உணர்த்துகின்றது. எனவே இந்திய வரலாற்றை அல்லது இந்தியச் சமூகவியல் வரலாற்றைத் தெளிவாக உணரவேண்டுமென்றால் இந்நாட்டில் நிலவி வந்த பல்வேறு சாதிகளின் வரலாற்றை அறிவது மிகவும் அவசியம். இந்நாட்டில் நிலவிய பல்வேறு சாதிகள் பற்றிய தெளிவான அறிவு இல்லாமல் இந்தியச் சமுதாயத்தின் வளர்ச்சி, அதன் முழுப்பரிமாணம் ஆகியவற்றை விளங்கிக்கொள்ள முடியாது என்பதை நாங்கள் தெளிவாகவே உணர்ந்திருந்தோம்.

தமிழ்நாடு பற்றியோ, தென்னிந்தியா பற்றியோ எழுதப்பட்ட வரலாறுகள் அனைத்தும் வெறும் அரசியல் வரலாறுகளாக நின்றுவிட்டனவே அன்றிச் சமுதாய வரலாறுகளாக மலரவில்லை. இதனால் தமிழ்ச் சமுதாயம் பற்றிய அல்லது தமிழ் மக்கள் பற்றிய முழுமையான ஆய்வு சிறப்பாகக் கால்கொள்ள முடியாமல் போய்விட்டது. இந்தக்குறை நிறைவு செய்யப்பட்டுத் தமிழ்ச் சமுதாயம் பற்றிய முழுமையான ஆய்வு

மலர வேண்டுமென்றால் தமிழகத்தின் மூலை முடுக்குகளில் எல்லாம் இருந்து வந்த பல்வேறு சாதிகளின் வரலாறு, சாதிகள் பற்றிய இலக்கியங்கள், சாதிகளின் சடங்கு முறைகள், பழக்கவழக்கங்கள் ஆகிய அனைத்தையும் வெளிக்கொண்டு வந்து ஆராய்ச்சிக்கு உடபடுத்தவேண்டியது தவிர்க்க முடியாத தேவையாக அமைகின்றது. இதுபோன்ற செய்திகள் தெளிவாக வெளிக்கொண்டு வரப்படாமையால் பிறநாடுகளைப் போல சமூகவியல் பற்றிய ஆய்வுகள் தமிழகத்தில் வளர முடியாமல் போயிற்று. இந்தக்குறை நிறைவு செய்யப்படும்போது சமூகவியல் பற்றிய ஆய்வுக்குரிய மூலச் சான்றுகள் ஏராளம் கிடைப்ப தோடன்றித் தமிழ்ச் சமுதாயம் பற்றிய சரியான, முறையான, முழுமையான மதிப்பீடுகளும், ஆய்வுகளும் வளர்வதற்கு வழிபிறக்கும் என்று நாங்கள் நம்பினோம். எனவே சாதிகள் தொடர்பான சான்றாதாரங்களை (Source material) வாய்மொழிப் பாடல்களான நாட்டுப்புற இலக்கியங்களில் இருந்தும், ஓலைச் சுவடிகளில் இருந்தும் வெளியிடும் முயற்சியில் ஈடுபடத் தொடங்கினோம். சாதீய இலக்கியங்கள் பல பழந்தமிழ் ஓலைச் சுவடிகளில் ஏராளமாக இருப்பது என்னை வியப்பில் ஆழ்த்தியது. இதுபோன்ற ஓலைச்சுவடிகள் போதுமான அளவிற்கு இதுவரை பதிப்பித்து வெளியிடப் பெறாமை எங்களை வேதனை கொள்ளச் செய்தது.

தமிழ்ச்செவ்வியல் இலக்கிய வரிசையில்,(Classical Literature) சாதிகள் பற்றிய இலக்கியங்கள் அதிகமாக இடம் பெறவில்லை.

> "சாதிகள் இல்லையடி பாப்பா - குலத்
> தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்"

என்ற பாரதியின் இலட்சியக்கருத்து, மலரவேண்டிய இலட்சிய சமுதாயம் பற்றிய கவிஞனின் கனவே தவிர கடந்துவந்த பாதை பற்றிய கணிப்போ, அல்லது நடந்துவரும் நிகழ்காலம்

பற்றிய ஆய்வுபூர்வமான மதிப்பீடோ அல்ல என்பது தெளிவு. சாதி இல்லை என்று கூறும் ஒவ்வொரு தமிழனின் உடலிலும் சாதிவெறி ஊடுருவிப் பாய்ந்திருப்பதை நாம் இன்றும் காணலாம். அடிமனத்தின் ஆழத்தில் சாதிவெறியைப் பரவவிட்டு வாய் அளவில் மட்டுமே சாதி இல்லை என்று பேசும் இரட்டைவேடப்போக்கு தமிழனுக்கு மட்டுமல்ல இந்தியர்கள் அனைவருக்குமே ஓரளவுக்குப் பொதுச்சொத்து எனலாம். இலட்சிய இலக்கிய வரிசையான தமிழ்ச் செவ்வியல் இலக்கிய வரிசையில் சாதீய இலக்கியங்கள் பெரும்பாலும் தவிர்க்கப்பட்டுள்ளன எனலாம்.

கபிலர் அகவல், ஏர் எழுபது, ஈட்டி எழுபது, காராளர் அம்மானை போன்ற சாதீய நூல்கள் சில ஏற்கனவே வெளிவந்திருந்த போதிலும் பெரும்பாலான நூல்கள் வெளிவராமல் ஓலைச்சுவடிகளில் காலத்தின் கோரத் தாண்டவத்திற்கு ஆட்பட்டு அழிந்துகொண்டிருப்பதை நாங்கள் காணமுடிந்தது. ஆசியவியல் ஆய்வு நிறுவனம் இது போன்ற பல ஓலைச்சுவடிகளைச் சேகரித்தது. இச்சுவடிகளுள் பலவேசஞ் சேர்வைக்காரன் கதை, வெங்கலராஜன் கதை என்ற இரு சுவடிகளையும் பதிப்பித்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துத் தகுந்த முன்னுரையுடன் நான் வெளியிட விரும்பினேன். எனது வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு மைய அரசு இவ்விரு நூல்களையும் வெளியிடுவதற்குரிய நிதி உதவியினை நல்குவதற்கு முன் வந்தது.

மேற்கூறிய நூல்களுள் வெங்கலராஜன் கதை என்னும் நூல் நாடார் குல மக்களின் பரம்பரை புராணமாக (Geneology) அமைந்துள்ளது. இக்குலத்தின் தோற்றம், வளர்ச்சி, பிரிவுகள் ஆகியவற்றை விளக்கிச் சொல்லும் இந்நூல் வெங்கலராஜனை இக்குலத்தின் கலாச்சாரத் தலைவனாக (Culture Hero) கொண்டு அவனுக்கும், பிற சாதியினருக்குமிடையே ஏற்பட்ட போராட்டங்களை விரிவாகப் பேசுகின்றது. பல்வேறு

சாதிகளுக்கிடையே நிகழ்ந்துள்ள போராட்டங்களையும் முரண்பாடுகளையும் சூழ்ச்சிகளையும் இழிகுணங்களையும் சிறப்பியல்புகளையும் நாடார் குல மக்களின் கண்ணோட்டத்தில் இந்நூல் கலைநயம் ததும்ப எடுத்துப்பேசுகின்றது. உயர் சாதியினரின் சூழ்ச்சிக்குப் பலியாகி, இக்கதைத் தலைவன் மடிந்து, நாடார்குல மக்களின் உள்ளங்களில் நீங்காத இடம்பெற்று வழிபாட்டுக்கு உரியவனாக வளர்ந்துள்ளதை இந்நூல் சித்திரிக்கின்றது. இந்நூலினை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து The Dateless Muse என்ற தலைப்பில் இந்நிறுவனம் வெளியிட்டபோது அறிஞர் உலகம் அதைப் பாராட்டி வரவேற்றது. நிறுவன அலுவலர் டாக்டர் வி. முருகன் இதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். தமிழ்ப் பல்கலைக்கழகம் விருது வழங்கி இந்நூலைச் சிறப்பித்தது.

மற்றொரு நூலான பலவேசஞ் சேர்வைக்காரன் கதை சற்று வித்தியாசமான ஒரு சாதீய இலக்கியமாக அமைந்துள்ளது. மறவர் சாதியினுள் காணப்பட்டஓர் உட்சாதிப் பூசலை இந்நூல் மிகத்திறம்பட எடுத்தியம்பியது. மறவர் சாதியினரிடையே சிறுதாலி மறவர், பெருந்தாலி மறவர் என்று இருபிரிவினர் உள்ளனர். இதில் பெருந்தாலி மறவர்கள் சற்று இழிந்தோராக, சேர்வைக்காரர்களாகச் சிறுதாலி மறவர்களால் கருதப்பட்டனர். சிறுதாலி மறவர்கள் பெருந்தாலி மறவர்களை அடிமைகளைப் போன்று நடத்திவந்தனர். இதன்விளைவாகத் தாழ்த்தப்பட்ட பெருந்தாலி மறவர்களான சேர்வைக்காரர்களின் உரிமைக்குப் போராடச் சின்ன பலவேசம், பெரிய பலவேசம் என்று இரு வீரர்கள் தோன்றினர். இக்கதைப்பாடல் முழுவதிலும் மறவர் சாதிக்குள் நடந்த உட்சாதிப்பூசல் ஊடும் பாலமாக இழையோடுவதைக் காணலாம்.

பதினெட்டாம் நூற்றாண்டை மையமாகக்கொண்டு சுழலும் இக்கதை ஓரளவிற்கு அக்கால கட்டத்தில் நடந்த அரசியல் நிகழ்ச்சிகளையும் சித்திரித்துக் காட்டியுள்ளது. பிரித்தாளும்

சூழ்ச்சியைத் தகுந்த ஆயுதமாகக்கொண்டு இந்திய மன்னர்களையும், மக்களையும் பலவீனப்படுத்தி இந்தியர்களின் ஒற்றுமையைக் குலைத்து வந்த வெள்ளையர்கள் மேற்கூறிய உட்சாதிப்பூசலையும் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டனர். மறவர் குலத்தின் இரு பிரிவினருக்குள் முரண்பாடு தோன்றி அது போராக வடிவு எடுத்தபோது சிறுதாலி மறவர்களுக்கு உதவ வெள்ளையர்களும், பெருந்தாலி மறவர்களுக்கு உதவக் கட்டபொம்மனும் போர்முனைக்கு வருகின்றனர். வெள்ளையர் படையைக் கண்டதும் கட்டபொம்மன் படை சிதறி ஓடுகின்றது. இந்த முரண்பாட்டின் விளைவாகப் பெருந்தாலி மறவர்களின் கதைத்தலைவர்கள் தோல்வியைத் தழுவி அழிந்துபடுகின்றனர். இந்த நூலை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து The Unsung Melodies என்ற பெயரில் ஆசியவியல் ஆய்வு நிறுவனம் வெளியிட்டு, தென்னிந்தியவியல் ஆய்வில் ஆர்வம் காட்டும் சர்வதேச அறிஞர்களின் பாராட்டுதலைப் பெற்றது. கட்டபொம்மன் படை சிதறியோடியதாகச் சித்திரித்துள்ள நிகழ்ச்சி என்னை வியக்க வைத்தது. இதைப்படித்ததும், வெள்ளையர்களை எதிர்த்து ஆற்றலுடன் போர்முரசு கொட்டிய கட்டபொம்மனா இப்படி அஞ்சியோடினான் என்று உண்மையிலேயே நாங்கள் வியந்துபோனோம். பின்னர் ஆவணங்களை ஆழ்ந்து பயின்றபோது கட்டபொம்மன் என்ற பெயரில் அடுத்தடுத்து மூவர் இருந்தனர் எனவும் இவர்களில் முதல் கட்டபொம்மன் வெள்ளையர்களுக்குப் பணிந்தே நடந்தான் எனவும் அறிந்துகொள்ள முடிந்தது.

மறவர் சாதியினரின் பல்வேறு வளர்ச்சி நிலைகளும், உட்பிரிவுகளும், தமிழ்ச்சமுதாயத்தில் அவர்கள் பெறும் முக்கியத்துவமும், தமிழ்மொழி, தமிழ்ச் சமுதாயம் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு அவர்கள் ஆற்றியுள்ள தொண்டும் எங்களை வியப்படையச் செய்தன. கள்ளர், தேவர், அகமுடையார் என்றெல்லாம் பல்வேறு பிரிவுகளாகப் பிரிந்து நிற்கும் இம்மறவர்

குலம் பற்றி விரிவாக ஆராயவேண்டும் என்றும், இவர்களைப் பற்றிய இலக்கியங்களைச் சிறப்பாக வெளிக்கொண்டு வரவேண்டும் என்றும் நாங்கள் திட்டமிட்டோம். மறவர் சமுதாயம் பற்றிய ஆய்வில் இந்நிறுவனம் ஏன் இவ்வளவு அக்கறை காட்டவேண்டும் என்றும் பலர் எங்களை வினவியதுண்டு. அனைத்து சாதியினரின் ஆய்விலும் எங்களுக்கு விருப்பம்உண்டு என்ற பதிலைத்தான் அவர்களுக்கு எங்களால் தர முடிந்தது.

1991 ஆம் ஆண்டு மறவர் சமுதாயம் பற்றிய தேசியக் கருத்தரங்கு ஒன்றினை சுவீடன் நாட்டிலுள்ள உப்சாலா பல்கலைக் கழகத்தின் துணையோடு சென்னையிலுள்ள வி. ஜி. பி. தங்கக்கடற்கரையில் நடத்தினோம். உப்சாலா பல்கலைக் கழகத்தின் பேராசிரியரான டாக்டர் பீட்டர் ஷாக் போன்ற பல வெளிநாட்டு அறிஞர்களும் இதில் பங்கேற்றனர். மறவர் குலத்தினர் பற்றிய 25 க்கும் மேற்பட்ட அருமையான ஆய்வுக்கட்டுரைகள் இக்கருத்தரங்கில் அரங்கேறின. இக் கருத்தரங்கு சாதீய இலக்கியங்கள் பற்றி மேலும் ஆராயவேண்டும் என்ற எங்கள் ஆர்வத்திற்கு வலுவூட்டியது. இக்கருத்தரங்கில் பூலித்தேவன் என்னும் மறவர்குலத் தலைவன் பற்றிய நாடகம் ஒன்றினையும் நிகழ்த்துவித்தோம். இக்கருத்தரங்கின்போது பூலித்தேவன் கதைப்பாடல், சந்தனத்தேவன் கதைப்பாடல் என்ற மறவர் குலவீரர்கள் பற்றிய இரு நூல்களைஓலைச்சுவடி களிலிருந்து பதிப்பித்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட விரும்பினேன். இம்முயற்சிக்கு மையஅரசு நிதியுதவி செய்ய முன்வந்தது. இந்நூல்களை வெளியிட்டு சாதீய இலக்கியம் பற்றிய ஆய்வில் மேலும் சில திருப்புமுனைகளை இந்நிறுவனம் ஏற்படுத்தியது.

இந்த வரிசையில் பிற சாதிகள் தொடர்பான அரிய இலக்கியங்களையும் ஓலைச்சுவடிகளிலிருந்து பதிப்பித்து வெளியிட வேண்டுமென்று நாங்கள் தொடர்ந்து முயற்சித்து

வந்தோம். இந்நிலையில் கோவை மாவட்டப்பகுதிகளில் வழங்கி வரும் அண்ணன்மார் கதைப்பாடல் என்ற இலக்கியத்தை உலகுக்கு அறிமுகப்படுத்தத் திட்டமிட்டிருந்தோம். கவுண்டர் குலத்தில் தோன்றிய பெரிய அண்ணன், சின்ன அண்ணன் என்ற இருவருடைய வீர வரலாற்றைச் சமூகப்பின்னணியோடு எடுத்தியம்பும் இக்கதைப்பாடல் மிகவும் புகழ் பெற்றிருந்தது. இந்தக் கதைப்பாடலை மேல்நாட்டு அறிஞரான டாக்டர் பிரண்டாபெக் என்பவர் மிக விரிவாக ஆராய்ந்திருந்தார். வாய்மொழியாக வழங்கப்பட்ட அண்ணன்மார் கதைப்பாடல் முழுவதையும் அவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். இந்த மொழிபெயர்ப்பினை The Elder Brother's Story என்ற தலைப்பில் இரு தொகுதிகளாக வெளியிட்டுச் சர்வதேச அறிஞர்களின் பாராட்டுதலை இந்நிறுவனம் பெற்றது. சாதீய இலக்கிய வரிசையில் இன்னும் ஏராளமான சுவடிகளையும், வாய்மொழி இலக்கியங்களையும் தொடர்ந்து வெளியிடுவதற்கு இந்நிறுவனம் திட்டமிட்டுள்ளது.

## 11. பிற கதைப்பாடல்கள்

சமயச் சார்புடைய பல்வேறு கதைப்பாடல்களும் ஓலைச்சுவடிகளில் இருப்பதை ஓலைச்சுவடிகள் பற்றிய இந்நிறுவனத்தின் தொடர்ந்த ஆய்வுகள் தெளிவுபடுத்தியுள்ளன. இத்தகைய கதை இலக்கியங்கள் அமைந்த ஏராளமான ஓலைச்சுவடிகளை ஆசியவியல் ஆய்வு நிறுவனம் தனது சுவடி நூலகத்தில் சேகரித்துவைத்துள்ளது. இவற்றுள் குறிப்பிடத்தகுந்த இலக்கியமாகப் பெருமாள்சுவாமி கதைப்பாடல் என்ற பெயரினைக் கொண்ட ஓலைச்சுவடி திகழ்கின்றது. எங்களைப் பொறுத்தவரையில் தமிழக நாட்டுப்புற இலக்கியங்கள் தொடர்பாகக் கிடைக்கும் ஓலைச்சுவடிகளில் இதுவே மிகவும் பழமையானது. 300 ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றிய இக்கதைப் பாடல் திருவரங்கத்தில் உள்ள பெருமாள் பல்வேறு ஊர்களைக் கடந்து திருவனந்தபுரத்தில் உள்ள பத்மநாபசுவாமி கோயிலுக்குச் செல்கின்ற வழிநடைப் பயணத்தைச் சித்திரிக்கின்றது. இறைவன் திருத்தலப்பயணம் மேற்கொள்வதாக இவ்விலக்கியம் புதுமையான வகையில் புனையப்பட்டிருந்தது. இறைவன் பயணம் செய்கின்ற வழியில் உள்ள ஊர்கள், அவற்றின் சமூகப் பண்பாட்டுப் பின்புலங்கள், வழிபாட்டு மரபுகள் ஆகியவற்றை எல்லாம் இந்நூல் சிறப்பாகச் சித்திரித்திருந்தது. திருவரங்கம் தொடங்கி திருவனந்தபுரம் வரையுள்ள நிலப்பரப்பு, வாழ்வியல் பண்பாட்டுப் போக்குகள் ஆகியவற்றைத் திறம்படப் படம்பிடித்துக்காட்டும் இப்புதுமையான இலக்கியம் என்னைக் கவர்ந்தது. குமரி

மாவட்டத்திலிருந்து பெறப்பட்ட இச்சுவடியை விரைவில் பதிப்பித்து வெளியிட வேண்டுமென்று துடித்தேன். அப்போது ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் சுவடிப்புலத் தலைவராகப் பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளையவர்கள் பொறுப்பேற்றிருந்தார். சுவடிப்பதிப்புத் துறையில் அரும்பெரும் சாதனைகளை நிகழ்த்திய இவ்வறிஞரின் தலைமையில் இந்த ஆய்வுத்துறை மேலும் பல சாதனைகளைப் படைத்தது.

நிறுவனத்தின் சுவடியியல் ஆய்வுப்புலத்தின் தலைவராக இருந்த பேராசிரியர் மு. சண்முகம்பிள்ளை அவர்களிடம் எனது விருப்பத்தைத் தெரிவித்தபோது அந்நூலைப் பதிப்பித்து உரை எழுதும் அரும்பணியை மேற்கொள்வதற்கு அவர் இசைவு தந்தார். பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை, கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஆகியோருடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை நல்ல முதிர்ச்சி பெற்ற தமிழ் அறிஞராகத் திகழ்கின்றார். சுவடிப்பதிப்புப் பணியில் பழுத்த அனுபவம் பெற்ற இப்பேராசிரியரின் முயற்சியால் இந்நூல் மிகச்சிறப்பாகப் பதிப்பிக்கப்பட்டது. மு. இராகவையங்காரின் பெயரரான டாக்டர் ஜே. பார்த்தசாரதி என்பவரைக் கொண்டு இந்நூலை ஆங்கிலத்தில் மொழிப் பெயர்த்தோம். The Divine Pilgrimage என்ற தலைப்பில் இந்த நூல் வெளிவந்தது. இந்நூலைப் பல்வேறு பத்திரிகைகளும் மதிப்பீடு செய்து பாராட்டிப் புகழ்ந்தன. சர்வதேச அறிஞர்களின் கவனத்தை இந்நூல் பெரிதும் ஈர்த்தது. இந்நிறுவனத்தின் தமிழ் ஓலைச்சுவடிகளின் பதிப்புப் பணியில் இந்நூல் மிகக் குறிப்பிடத்தகுந்த சாதனையாக அமைந்துள்ளது.

தமிழகத்தின் தெருக்கூத்துக் கலைக்கும், ஆந்திரப் பகுதிகளில் பெயர் பெற்ற வீதி நாடகத்திற்கும், கேரளத்தின் கதகளிக்கும், கர்நாடகத்தின் யட்சகானத்திற்கும் இடையில் பல குடும்ப உறவுகள் (Family Resemblances) நிலவுவதை நான் பலமுறையும் ஒப்பிட்டுச் சிந்தித்ததுண்டு. யட்சகானம் என்னும் கலை கர்நாடக

மாநிலத்திற்கே உரியது என்றுதான் தொடக்கநிலையில் நான் எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால் பிரபல இசை ஆராய்ச்சி வல்லுநரான டாக்டர் துர்கா என்பவர் வல்லாளராஜன் கதை போன்ற ஒருசில யட்சகானங்கள் தமிழில் இருப்பதாகச் சுட்டிய போது நான் உண்மையிலேயே வியப்படைந்தேன். டாக்டர் துர்கா அவர்கள் ஒரு சில யட்சகானப் படைப்புகளைப் பதிப்பித்து வெளியிட்டிருந்தார். இந்நிலையில் தமிழிலுள்ள யட்சகானங்கள் அனைத்தையும் தொகுத்து ஆய்வு செய்யும் முயற்சியில் நிறுவனம் ஈடுபட்டது. கர்நாடகத்தில் இப்போதும் பெரும்வழக்கில் உள்ள யட்சகான இலக்கியங்களுக்கும், தமிழில் இருந்து மறைந்துபோன யட்சகான இலக்கியங்களுக்குமிடையே உள்ள உறவுகளை ஆராயவேண்டும் என்று பலமுறை நாங்கள் திட்டமிட்டதுண்டு. இந்த ஆய்விற்கு நாங்கள் தொகுத்த யட்சகானப் படைப்புகளில் ஒன்றான நீலி யட்சகானம் என்ற ஒரு நூலினைப் பதிப்பித்து வெளியிடும் பணியில் இந்நிறுவனத்தின் சுவடிப்புலம் ஈடுபட்டுள்ளது.

தமிழ்நாட்டில் பெரும் வழக்கில் இருந்த பழையனூர் நீலிகதை பல்வேறு சமயங்களை, குறிப்பாகப் பௌத்தம், சமணம் போன்ற சமயங்களைக் கவர்ந்ததுண்டு. இந்தக் கதையை ஒவ்வொரு சமயமும் அவற்றிற்குரிய கண்ணோட்டத்தில் காணத் தொடங்கியது. நீலகேசி என்னும் காப்பியத்தில் இந்நீலிகதை ஒரு சமணம் சார்ந்த கதையாகக் காட்டப்படுகின்றது. நாட்டுப்புற இலக்கியங்கள் இக்கதையை அவற்றிற்குரிய போக்கில் கையாண்டுள்ளன. நீலி யட்சகானம் என்னும் படைப்பு நீலிகதையைத் தமிழக நாட்டுப்புற இலக்கியக் கண்ணோட்டத்தில் சித்திரித்துள்ளது.

புராணங்களில் அல்லது காப்பியங்களில் இடம்பெறும் கிளைக்கதைகள் (Episodes) பல நாட்டுப்புறக் கதைகளாக மலர்ந்து ஓலைச்சுவடிகளில் இடம் பெற்றுள்ளன. அவ்வாறு செந்நெறி இலக்கியத்திலிருந்து இக்கதைகள் நாட்டுப்புற

இலக்கியத்திற்கு இடம்பெயரும்போது இவற்றின் பண்பாடுகளும், தன்மைகளும், ஆன்ம ஓட்டங்களும் அவை புதிதாகப் பிறப்பெடுத்துள்ள சமுதாயப் பின்புலங்களுக்கு ஏற்பப் பல மாற்றங்களைத் தழுவுவதுண்டு. இதுபோன்ற இலக்கிய வரிசையில் சகுந்தலை விலாசம் என்ற ஓர் அரிய நாடக நூலின் சுவடியினை இந்நிறுவனம் பல ஆண்டுகளுக்கு முன்னர் சேகரித்தது. இந்த ஓலைச்சுவடியைப் பல ஆண்டுகளுக்கு முன்னரே பதிப்பித்து வெளியிடத் திட்டமிட்டிருந்தேன். காளிதாசனின் சாகுந்தலத்தைப் பின்பற்றாது மகாபாரதக் கதையைத் தழுவி நாட்டுப்புறவியல் கண்ணோட்டத்தோடு குமரி மாவட்டச் சமுதாயப் பின்புலங்களுக்கு ஏற்ப இந்தச் சுவடியிலுள்ள சகுந்தலை கதை அமைந்திருந்தது. 18 ஆம் நூற்றாண்டின் இறுதியில் 35 ஆண்டுகள் தொடர்ந்து பெண்ணுரிமைப் போராட்டம் நிகழ்ந்த தென்குமரி மண்ணில் பிறந்த இந்நூலின் கதைத் தலைவியான சகுந்தலை காளிதாசனின் சாகுந்தலத்தில் வரும் சகுந்தலையைப்போலன்றி ஒரு புரட்சிப்பெண்ணாகவே உருப்பெற்றிருந்தாள். தமிழகத்திற்கு வந்து புதுப்பிறவி எடுத்திருந்த இந்தச் சகுந்தலை விலாசத்தை A Tale of Romance என்ற தலைப்பில் இந்நிறுவனம் நூலாக வெளியிட்டு இலக்கிய அடிக்கருத்து (Thematology) பற்றிய ஆய்வுக்குப் பல சான்றாதார நூல்கள் (Reference Books) தோன்றுவதற்கு வித்திட்டுள்ளது. இச்சுவடியை இந்நிறுவனத்திற்கு வழங்கிய தென் திருவிதாங்கூர் இந்துக்கல்லூரியின் வரலாற்றுப் பேராசிரியர் டாக்டர் இராமச்சந்திரன் அவர்களுக்குத் தமிழ் அறிஞர் உலகம் என்றும் நன்றி பாராட்டத்தவறாது.

தமிழ் ஓலைச்சுவடிகள் மட்டுமன்றி கன்னடம், தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகளைச் சார்ந்த அரிய ஓலைச்சுவடிகளையும், செப்பேடுகளையும் பதிப்பித்து ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளியிட வேண்டுமென்று நாங்கள் பல ஆய்வுக்கனவுகள் கண்டதுண்டு. அந்த் கனவில் உருவாகியதுதான்

The Tunes of Divinity என்ற இந்நிறுவனத்தின் நூலாகும். தெலுங்குச் செப்பேட்டில் எழுதப்பட்ட இசை பற்றிய சங்கீத லட்சணமு என்ற நூலை விரிவான விளக்க உரையுடனும், ஆங்கில மொழி பெயர்ப்புடனும் மேற்கூறிய தலைப்பில் வெளியிட்டு இசை பற்றிய ஆராய்ச்சிக்கும் இந்நிறுவனம் அடித்தளம் அமைத்துக்கொடுத்துள்ளது. இந்நிறுவனத்தின் தெலுங்குமொழித் துறையின் தலைவர் டாக்டர். சால்வா கிருஷ்ணமூர்த்தி அவர்கள் இப்பணியினை மிகத்திறம்படச் செய்துள்ளார்.

## 12. தமிழ் ஓலைச்சுவடிகளின் விளக்கப்பட்டியல்

தமிழ் ஓலைச்சுவடிகளை ஆங்கில மொழிபெயர்ப்புடன் பதிப்பித்து வெளியிடும் எங்களது பணி மிகவேகமாக முன்னேறியபோதிலும், அழிந்துகொண்டிருக்கும் ஓலைச் சுவடிகளின் எண்ணிக்கையையும், அவற்றின் தற்போதைய நிலையையும் நோக்கும்போது அவை அனைத்தையும் பதிப்பித்து வெளியிடுவது இயலாத காரியம் என்றே எனக்குத் தோன்றியது. இப்பணியை மேலும் தீவிரமாகத் துரிதப்படுத்தலாம் என்றால், அதற்கு இடையூறாக இருப்பது நிதி பற்றாக்குறையே என்பதைத் தெளிவாக நாங்கள் உணரமுடிந்தது. மொழி, கலாச்சாரம் இவற்றைப் பாதுகாப்பதாக உரக்கக் குரலெழுப்பும் எந்த அரசும் இப்படிப்பட்ட ஒரு பெரிய திட்டத்துக்கு முழுமையாக உதவி செய்ய முன்வராது என்பதை எங்கள் அனுபவத்தில் உணர்ந்துகொண்டோம். பல செல்வந்தர்களை அணுகியபோது, எங்கள் திட்டங்களை வாய்திறந்து பாராட்டினரர்களே தவிர, அவற்றைச் செயல்படுத்துவதற்குரிய நிதியுதவியை செய்ய யாரும் முன்வரவில்லை. பண்பாடும், மொழியும் மேடைப்பேச்சுக்கு மட்டுமே பயன்படுத்தப்படும் அவலநிலையை இந்த நாட்டில் இல்லாமல் வேறு எந்த நாட்டிலும் காணமுடியவில்லை. பாமர மக்களை ஏமாற்றுவதற்கும், தேர்தல் மூலமாக அவர்களை ஏமாற்றி அவர்களின் உரிமைகளைப் பறிப்பதற்கும்தான் மொழியுணர்வும், பண்பாட்டுணர்வும் அரசியல்வாதிகளால் பயன்படுத்தப் படுகின்றன.

அறிவியல் ரீதியாக ஏராளமான வளர்ச்சிகளைக்கண்ட நாம் கல்வியில் பல புதுமைகளைப் புகுத்திப் புரட்சிசெய்ய வேண்டுமென்று எண்ணுகிறோம். இத்தகைய எண்ணங்கள் எல்லாம் கருக்கொண்டு செயல்வடிவம் பெறத் துடிக்கின்ற இந்தக் காலத்திலும் பரம்பரை பரம்பரையாக நம் முன்னோர்கள் தேடிவைத்த அறிவுச் செல்வங்களைப் பயன்படுத்த முடியாமல் பறிகொடுத்து நிற்கும் அவலநிலையில் நாம் இருக்கின்றோம். பிறநாட்டினர் இந்த மொழி மீதும், பண்பாட்டின் மீதும் அதிக ஆர்வம் காட்டுகின்ற இக்காலத்தில் நம் கண்முன்னர் அழிந்துகொண்டிருக்கும் இந்தப் பண்பாட்டுக் கருவூலங்களைக் காப்பதற்கு வழி இல்லாமல் நாங்கள் தவித்துக்கொண்டிருந்தோம். தில்லிக்குச் சென்றிருந்தபோது இதுதொடர்பான எங்கள் மனவேதனைகளையெல்லாம் டாக்டர் கபிலா வாத்சியாயன் அவர்களிடம் கூறினோம். அழிந்து கொண்டிருக்கும் இந்தத் தமிழ் ஓலைச்சுவடிகளைக்காக்க முடியாமல்போனாலும், அவற்றிற்கு ஒரு விளக்க அட்டவணையாவது (Descriptive Catalogue) தயாரிக்கவேண்டுமென்ற எனது எண்ணத்தை டாக்டர் கபிலா அவர்கள் மனந்திறந்து பாராட்டினார்கள். இத்தகைய விளக்க அட்டவணை தயாராகும்போது வருங்காலச் சந்ததியினர் இத்தகைய அரிய நூல்கள் எல்லாம் தமிழில் இருந்தன என்பதையாவது தெரிந்துகொள்வார்கள் என்று எண்ணினோம். காலப்போக்கில் உருப்படியான தமிழ் இலக்கிய வரலாற்றை எழுதமுடியாமல் போனாலும்கூட மறைந்துபோன தமிழ்நூல்கள் பற்றிய வரலாற்றையாவது வருங்காலத் தலைமுறையினர் எழுதி மன அமைதி கொள்ளட்டுமே என்று நாங்கள் நினைத்தோம்.

எங்களது எண்ணத்தை வரவேற்ற டாக்டர் கபிலா அவர்கள் விளக்கப் பட்டியல் அமைய வேண்டிய முறை பற்றி ஒரு மாதிரிப் படிவத்தைத் தயாரிக்குமாறு என்னிடம் வேண்டினார்கள். இதுவரை வெளிவந்துள்ள விளக்கப்பட்டியல்களைப் போலல்லாமல் இது மிகவும் விரிவாக எல்லாச் செய்திகளையும்

தருவதாக இருக்க வேண்டுமென்று அவர் குறிப்பிட்டார். அதோடு, இந்திராகாந்தி தேசியக்கலை மையத்தில் சுவடிகள் தொடர்பான செய்திகளையெல்லாம் கணிப்பொறியின் வாயிலாகச் சேகரித்து வைப்பதற்கு அவர்கள் பயன்படுத்திய தகவல் சேகரிப்புப் படிவத்தையும் என்னிடம் காட்டி விவாதித்தார்கள்.

தமிழ் ஓலைச்சுவடிகளின் விளக்கப்பட்டியலில் இடம்பெறும் ஒவ்வொரு நுழைவுகளிலும் நான்குவிதமான செய்திகள் விரிவாக அமையவேண்டும் என்று நாங்கள் முடிவு எடுத்தோம். முதற்பகுதி அந்த ஓலைச்சுவடி தொடர்பான எல்லா அகப்புறச் செய்திகளையும் தருகின்ற விளக்கமாக (Material Description) அமைய வேண்டும். இதில் ஓலைகளின் எண்ணிக்கை, அளவு, அவற்றின் தற்போதைய நிலை, எழுதிய ஆசிரியர், உரையாசிரியர், பிரதி செய்தவர், காலம், இடம் ஆகியன பற்றிய அனைத்துச் செய்திகளும் இடம்பெற வேண்டும். இரண்டாவது பகுதி அந்த நூலின் வெளியீடுகள் போன்றவற்றோடு தொடர்புடைய செய்திகளைத் (Bibliographical Description) தருவதாக அமைய்வேண்டும். இந்த நூல் எப்போது அச்சிடப்பட்டது? எத்தனைப் பதிப்புகள் இதுவரை வெளிவந்துள்ளன? அச்சிடப்படவில்லையென்றால் பிற நூல்களில் இதன் செய்திகள் எடுத்தாளப்பட்டுள்ளனவா?, பிறநூல்களைப் பதிப்பித்தபோது இதனைப்படித்துப் பயன்படுத்தியுள்ளனரா? என்பன போன்ற பல விளக்கங்களையும் இந்தப்பகுதியில் தரவேண்டும். இதன் மூன்றாவது பகுதியாக நூலின் உள்ளடக்கம் பற்றிய செய்திகள் (Subject Description) அமையும். இப்பகுதியில் அந்த நூலின் உள்ளடக்கம், அதன் இலக்கிய வகை, அது பேசுகின்ற சமூகவியல், வரலாற்றியல். தொடர்பான செய்திகள், அதன் மொழி நடை போன்ற அனைத்து விவரங்களும் தரப்படவேண்டும். இறுதிப்பகுதியில் அந்த நூலின் தனித்தன்மை பற்றி விளக்கப்பெறும்.

இதுபோன்ற ஒரு பெரிய விரிவான விளக்கப்பட்டியலைத் தமிழ் ஓலைச்சுவடிகளுக்குத் தயாரிக்க வேண்டுமென்றால் குறைந்தபட்சம் 10 அறிஞர்களாவது முழுநேர ஆய்வாளர்களாகப் பணிபுரியவேண்டும். அதோடு அனைத்து ஓலைச்சுவடிகளையும் இவர்கள் முழுமையாகப் பயின்று தகவல்கள் திரட்டவேண்டும்; பழைய தமிழ் ஓலைச் சுவடிகளைப் படிப்பதில் இவர்களுக்கு நல்ல பயிற்சி வேண்டும்; தமிழ் இலக்கியத்தின் பல்வேறு துறைகளில் இவர்களுக்கு ஆழ்ந்த அறிவு வேண்டும்; தமிழோடு தொடர்புடைய பிற துறைகளிலும் இவர்களுக்கு நல்ல புலமை வேண்டும். இத்தகைய தகுதிகள் படைத்த 10 அறிஞர்களின் துணையோடு குறைந்தபட்சம் 25 ஆண்டுகள் தொடர்ந்து உழைத்தால் இந்தத் தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய விரிவான விளக்கங்களைத் திறம்படத் தயாரித்து முடித்துவிட முடியும் என்று டாக்டர் கபிலாவிடம் கூறினோம்.

இந்தச் சுவடிப் பயணத்தைச் சிறப்பாக முடிக்க வேண்டுமென்றால், நாங்கள் கல்லும் முள்ளும் நிறைந்த பாதையில் உதிரங்கொட்டும் கால்களுடன் நீண்ட நெடும் பயணத்தை மேற்கொண்டுதான் ஆகவேண்டும். நடக்கவேண்டிய பாதையின் நீளத்தையும், அதில் ஏற்படும் இடையூறுகளையும் எண்ணிய போது மனம் குழப்பமடையத்தொடங்கியது. எனினும், பல நல்ல உள்ளங்கள் எங்களுக்கு ஊக்கமளித்தன. அதில் ஜப்பானிய நண்பரின் பங்கு மிகவும் குறிப்பிடத்தக்கது. பயணிக்கவேண்டிய பாதையின் கடுமையை எண்ணிக் கொண்டிருந்தால் பயணத்தைத் தொடங்குவதற்குரிய சாத்தியக்கூறுகள்கூட ஏற்படாது. எனவே துணிந்து பயணத்தைத் தொடங்கிவிடுவோம்; தொடங்கினால் எதுவும் தொடரும் என்று நம்பினோம். இந்தப்பாதையில் இந்நிறுவனத்தின் சுவடியியல் ஆய்வுப்புலம் அடியெடுத்து வைத்துத் தளிர்நடைபயிலத் தொடங்கியது. தமிழ் ஓலைச் சுவடிகளின் விளக்கப் பட்டியலுக்குரிய மாதிரிப் படிவத்தைப் பலரோடும் நான் இணைந்து சிந்தித்துத் தயாரித்து டாக்டர்

கபிலா அவர்களுக்கு அனுப்பிவைத்தேன். இந்த மாதிரிப்படிவம் டாக்டர் கபிலா அவர்களை மிகவும் கவர்ந்தது. இதுபோன்ற ஆய்வுக் கண்ணோட்டத்தில் அமைந்த விளக்கப்பட்டியல் வேறு எந்த மொழியில் உள்ள ஆவணங்களுக்கும் இதுவரை வரவில்லையே என்று அவர்கள் வியந்து பாராட்டினார்கள். குறைந்தபட்சம் 25 தொகுதிகளாகத் தமிழ் ஓலைச்சுவடிகளின் விளக்கப்பட்டியல் அமையும் என்றும் ஒவ்வொரு தொகுதியும் இரு பகுதிகளைக் கொண்டு துலங்கும் என்றும் கணக்கிட்டோம். தொடர்ந்து செய்தால் 25 முதல் 30 ஆண்டுகளுக்குள் இதனை முடித்துவிடலாம் என்றும் எண்ணினோம்.

இந்தத் தமிழ் மொழியின் உயிர்க்கருவூலங்கள் இருந்த இடம் தெரியாது அழிவதை ஓரளவிற்குக் காக்கும் அரிய ஆய்வுத்திட்டம் ஒன்றைக் கையில் வைத்துக்கொண்டு செயல்படுத்துவதற்குரிய நிதி ஆதாரங்களைத் தேடித்தேடி அலையத் தொடங்கினோம். அரசுகளையும் அறக்கட்டளைகளையும் அணுகி இது பற்றிக்கேட்டுப் பார்த்தோம். பொறுப்பில் இருந்த அதிகாரி ஒருவர் ஓலைச்சுவடிகள் அனைத்தும் குப்பையே; அவற்றுள் ஒன்றும் இல்லை என்று சுவடிப்புலம் தொடங்கும்போது கூறியதை மீண்டும் கூறினார். படித்தும் கல்வியறிவு இல்லாத பாமரனாக இருந்த அந்த அதிகாரியை நினைக்கும்போது, தமிழ் ஓலைச் சுவடிகளைத் திட்டமிட்டு அழித்த ஒருசில வெளிநாட்டு அதிகாரிகளும், திட்டம் தீட்டி அழிக்காது தமது அறியாமை யினாலும் மூடநம்பிக்கையாலும் அழித்த தமிழ்நாட்டுப் பாமர மக்களும்தான் என் நினைவுக்கு வந்தனர். பல ஆண்டுகளுக்கு முன்னர் மதுரையில் சேகரித்து வைக்கப்பட்ட அரிய ஓலைச்சுவடிகளின் குவியல் வெள்ளைக்காரன் ஒருவனின் குதிரைக்கு வெந்நீர் காய்ச்சுவதற்குப் பயன்பட்ட செய்தியை நினைத்துப்பார்த்தேன். தமிழைக் காப்பதற்குத் தமிழ் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசால் நியமனம் பெற்ற இந்த அதிகாரிக்கும், சுவடிகளைக் கொளுத்தித் தன் குதிரைக்கு வெந்நீர்

காய்ச்சிய அந்த வெள்ளைக்காரனுக்கும் என்ன வேறுபாடு என்று எண்ணினேன். ஆடிப்பெருக்கில் புதுப்புனல் வரும் பொழுது அதில் பக்திப் பரவசத்தோடு வீசி எறியப்பட்ட அரிய தமிழ் ஓலைச்சுவடிகள் தான் எத்தனை எத்தனை போகிப் பண்டிகையன்று பழையன கழிதல் என்னும் நோக்கில் எரியூட்டப்பெற்ற தமிழ் ஓலைச்சுவடிகள்தான் எத்தனை சுவடிகளைப் பயன்படுத்திய முதியவர்கள் இறந்து விட்டபோது அவர்களோடு சேர்த்துக் கொளுத்தப்பட்ட சுவடிகள்தான் எத்தனை, சமயப்பூசலின் போது வெந்தழலில் கருகி வெந்து அழிந்த அழகிய தமிழச் சுவடிகள்தான் எத்தனை. அறிவுக் கருவூலங்களைப் பெற்றெடுத்த இந்தத் தமிழ்ச் சாதிக்குப் பெற்ற குழந்தைகளை அழிப்பதில் ஏன் இவ்வளவு வெறி ஏற்பட்டது என்று நாங்கள் அடிக்கடி சிந்தித்ததுண்டு. அப்படிச் சிந்திக்கும் போதெல்லாம் எங்கள் உள்ளங்கள் வெந்தழலில் வெந்து கருகுவது போன்ற உணர்வே ஏற்பட்டது.

தமிழ் நாட்டிலுள்ள பல நிதி ஆதாரங்களையும் அணுகிப்பார்த்துத் தோல்வி கண்ட நாங்கள் மீண்டும் டாக்டர் கபிலாவைச் சந்தித்தபோது தமிழ்ச்சுவடிகளின் விளக்கப்பட்டியல் தயார் செய்ய மைய அரசிடம் நிதியுதவியினைப் பெற்றுத்தருமாறு வேண்டினோம். எங்களது முயற்சியினையும், தெளிவினையும், உள்ள உறுதியினையும் கண்ட டாக்டர் கபிலா அவர்கள் எங்களுக்குத் தேவையான நிதியுதவியின் ஒரு பகுதியை மைய அரசிடம் இருந்து பெற்றுத்தருவதற்கு உறுதியளித்தார்கள். இந்த விளக்கப்பட்டியலின் தயாரிப்புச் செலவின் ஒருபகுதியை மைய அரசின் பண்பாட்டுத்துறையும், இதன் வெளியீட்டுச்செலவின் பெரும்பகுதியை மைய அரசின் கல்வித்துறையும் ஏற்பது போன்ற ஒரு நிலையைத் தக்கவர்களுடன் பேசி அமைத்துக்கொண்டோம். நிதிப்பற்றாக்குறை ஏற்படும்போது நிதியுதவி செய்து திட்டம் தொய்வின்றித்தொடர துணைபுரிவதாக ஜப்பானிய நண்பர் டாக்டர் ஷு ஹிகோசகா அவர்கள் உறுதியளித்தார்கள்.

இந்த அடிப்படையில் தமிழ் ஓலைச்சுவடிகளின் விளக்கப்பட்டியல் தயாரிப்புப் பணி தொடங்கியது. திரு மு.கோ.ராமன் அவர்கள் தொடக்க நிலையில் இதனைக் கண்காணித்துச் செயல்படுத்தி வந்தார். அவர் தயாரித்த முதற்பகுதியை நான் பார்வையிட்டு மீண்டும் பல மாற்றங்களைக் கொண்டுவந்தேன். உடல்நலமின்மை காரணமாக திரு.மு.கோ. ராமன் அவர்களால் இப்பணியைத் தொடரமுடியவில்லை. அவருக்குப் பின்னர் சுவடித்துறையில் பழுத்த அனுபவம் பெற்ற பேராசிரியர் மு. சண்முகம்பிள்ளை அவர்களின் நெறிப் படுத்தலோடு இப்பணி தொடர்ந்தது. இரு பகுதிகளைக் கொண்ட ஒவ்வொரு தொகுதியிலும் குறைந்தபட்சம் 1000 தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றன. டாக்டர். உ.வே. சாமிநாதையர் அவர்களின் பெயரில் நிறுவப்பட்டுள்ள நூலகத்திலுள்ள தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய குறிப்பை நான்கு பகுதிகளடங்கிய இரு தொகுதிகளாக ஆங்கிலத்தில் வெளியிட்டோம். இதன் ஆங்கில மொழிநடையில் பல திருத்தங்கள் செய்து திரு. ஏ.வி. சுப்பிரமணியன் செப்பம் செய்து கொடுத்தார். இந்தப் பிரம்மாண்டமான வெளியீடு தமிழியல் ஆய்வில் ஆர்வம் காட்டும் அனைத்து அறிஞர்களையும் கவர்ந்தது.

மூன்றாவது தொகுதி திருவாவடுதுறை ஆதீனத்தில் உள்ள சுவடிகள் பற்றியதாக இருக்கவேண்டும் என்று நான் விரும்பினேன். ஏராளமான சைவம் தழுவிய நூல்கள் அங்கு இருப்பது பற்றி ஏற்கனவே நான் கேள்விப்பட்டிருந்தேன். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் நான் பயின்றபோதும், டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்களின் சுவடிப்பதிப்புப்பணி பற்றிய பல செய்திகளை அறிந்தபோதும், திருவாவடுதுறை ஆதீனச் சுவடிகள் பற்றிய ஆர்வம் எனக்கு அதிகரிக்கத் தொடங்கியது. இந்த ஆதீனத்தில் 300 சுவடிகள் தான் உள்ளன என்கின்ற செய்தியே முதலில் எனக்குக் கிடைத்தது. நிறுவனத்தின் அலுவலர்கள் இருவரை ஆதீனத்தின் இசைவோடு

அங்கு அனுப்பி வைத்து, சில மாதங்கள் தங்கியிருந்து தகவல்களைச் சேகரித்தபோது ஆயிரத்திற்கும் மேற்பட்ட தமிழ் நூல்கள் ஓலைச்சுவடிகளில் இருப்பதை அறியமுடிந்தது. இந்த ஆதீனத்தின் தமிழ்ச் சுவடிகள் பற்றிய விளக்கங்களை இரண்டு பகுதிகளைக்கொண்ட மூன்றாவது தொகுதியாகத் தயாரித்து வெளியிட்டோம். இந்த ஆய்வுத் திட்டத்தின் நான்காவது தொகுதி ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் சுவடிகள் பற்றிய விளக்கமாக அமைந்தது. இதன் ஐந்தாவது தொகுதி சித்தமருத்துவ ஆராய்ச்சி மையத்திலுள்ள சுவடிகள் பற்றிய முழு விபரங்களையும் தந்து நிற்கும்.

## 13. ஆதீனங்களும் தமிழ் ஓலைச்சுவடிகளும்

திருவாவடுதுறை ஆதீனத்தில் உள்ள தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய தகவல்களைச் சேகரித்துக் கொண்டிருந்தபோது, சாதிகளோடும், சமயங்களோடும் உறவு கொண்டு தமிழிலக்கியம் காலந்தோறும் வளர்ந்துள்ள பாங்கினை நான் பலமுறை விரிவாகவே சிந்திக்க நேர்ந்தது. அரசர்கள் அல்லது வீரர்கள் (சத்திரியர்) என்னும் பிரிவைச் சார்ந்து, பெரும்பாலும் வீரயுக இலக்கியங்களாக விளங்கும் சங்க இலக்கியங்களும், வணிகர்கள் என்னும் பிரிவினரைச் சார்ந்து சங்கம் மருவிய காலத்து இலக்கியங்களுள் பெரும்பாலானவையும், வேளாளர்களின் சார்பில் அல்லது ஆதரவில் சைவ இலக்கியங்களுள் பெரும்பான்மை யானவையும் வளர்ந்துள்ள பாங்கினை நான் அடிக்கடி எண்ணிப் பார்ப்பதுண்டு. வீரயுக இலக்கியங்களான சங்க இலக்கியங்கள் மன்னர்களையும், வீரர்களையும் மையமாகக்கொண்டே சுழன்றன.

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்" (புறம். 186)

என்னும் பாடல்வரிகள் இவ்விலக்கியங்களின் அடித்தளத்தைத் தொட்டுக்காட்டுகின்றன. இதே காலத்தில் தோன்றிய சமஸ்கிருத இலக்கியங்கள் வேள்வியையும் புரோகிதர்களையும் மையமாகக் கொள்ள, தமிழ்ச் சங்க இலக்கியங்கள் உலகின் உயிரே மன்னன் என்று பேசுவது குறிப்பிடத்தக்கது.

"எவ்வழி நல்லவர் ஆடவர்

அவ்வழி நல்லை வாழிய நிலனே" (புறம்.187)

என்ற ஔவையாரின் வரிகளும் இதனையே வலியுறுத்தும். இங்கு ஆடவர் என்பது வீரனையே குறிப்பிடும் என்பது சுட்டத்தக்கது. சங்க இலக்கியத்தில் துறவியைவிட வீரன் சமுதாயத்தின் முக்கிய அங்கத்தினனாகக் கருதப்பட்டான். அழகிய ஆடவனாக, சொல்வலை வேட்டுவனாக இருந்த வீரன் துறவியாக மாறிவிட்டதற்காக வருந்திப் பாடும் கையறுநிலைப் பாடலையும் சங்க இலக்கியத்தில் காண்கிறோம்.

"கறங்குவெள் அருவி ஏற்றலின், நிறம்பெயர்ந்து,

தில்லை அன்ன புல்லென் சடையோடு,

அள்இலைத் தாளி கொய்யு மோனே

இல்வழங்கு மடமயில் பிணிக்கும்

சொல்வலை வேட்டுவன் ஆயினன் முன்னே. (புறம். 252)

இப்பகுதி சமஸ்கிருத இலக்கியங்களையும், பழந்தமிழ் இலக்கியமான வீரயுக இலக்கியத்தையும் வேறுபடுத்திக்காட்டும் எல்லைக்கோடாக உள்ளது.

சங்கம் மருவிய காலத்தைச் சார்ந்த சிலம்பும் மேகலையும் பிற காப்பியங்களும் பெரும்பாலும் வணிகர்களையே மையமாகக்கொண்டு அமைந்துள்ளன. தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் சமயங்கள் தமிழ் மொழிக்கு ஆற்றியுள்ள தொண்டு அளவிடற்கரியது. தமிழும் தமிழ் இசையும் இங்கு வந்துசேர்ந்த சமயங்களோடும், இம்மண்ணில் பிறப்பெடுத்த சமயங்களோடும் உறவாடியே வளர்ந்துள்ளன. இம்மண்ணில் வாழ்ந்த ஒவ்வொரு சமயமும் அதன் கடவுளரைத் தமிழ்க் கடவுளாகவே காணமுற்பட்டன. அவலோகிதர் என்னும் மகாயான பௌத்தக்கடவுள் தமிழை அகத்தியருக்குக் கற்றுக் கொடுத்ததாகப் புத்தமித்திரனால் எழுதப்பட்ட வீரசோழியம்

சுட்டுவது குறிப்பிடத் தகுந்தது. சமணம் தமிழை அருகனின் படைப்பாகவே கருதியது. தமிழ்க்கடவுளர்களாக முருகனும், சிவனும், திருமாலும் காட்சி தந்தனர். இந்நிலையில் தமிழைப் பற்றிக்கொண்டு சமயங்களும் சமயங்களைப் பற்றிக் கொண்டு தமிழும் வளர்ந்த நிலையினைக் காணமுடிகின்றது. இதற்கு இஸ்லாமும் கிறிஸ்தவமும் விதிவிலக்கு அல்ல.

சமயங்கள் தமிழுக்குப் பெருந்தொண்டாற்றியபோதிலும் பல இடையூறுகளையும் ஏற்படுத்தியுள்ளன என்பது மறுக்க முடியாத உண்மை. சமயக்காழ்ப்பு உருப்பெற்றபோது பல தமிழ் ஓலைச்சுவடிகள் தீக்கிரையாயின; பல சுவடிகள் செந்தணலில் வெந்து கருகின. இத்தகைய அழிவினைப் பக்தி இயக்கம் தோன்றிய காலத்தில் பெருமளவிற்குக் காணமுடிகின்றது. சமணர்களுக்கும் சைவர்களுக்கும் இடையே காழ்ப்பும் பகையும் ஏற்பட்டபோது பல சுவடிகள் அழிக்கப்பட்டதை வரலாறு பேசுகின்றது. பாண்டி நாட்டுக்கு வருகை தந்த ஞானசம்பந்தர் சமணர்களை வென்றபோதும், தோல்வி கண்ட சமணர்கள் கழுவில் ஏற்றப்பட்ட போதும், சமண நூல்கள் பல நெருப்பிலும் நீரிலும் போடப்பட்டு அழிக்கப்பட்ட செய்தியை அனல்வாதம், புனல்வாதம் பற்றிய குறிப்புகள் நமக்கு மறைமுகமாக விளக்கிச் செல்கின்றன. ஏராளமான பௌத்தத் தமிழ் இலக்கியங்கள் சமணர்களாலும், சமணத்தமிழ் இலக்கியங்கள் பௌத்தர்களாலும் இவ்விரு பிரிவினரின் இலக்கியங்கள் சைவர்களாலும், வைணவர்களாலும் அழிக்கப் பெற்றிருக்கவேண்டும் என்பது வரலாறு நமக்கு அறிவுறுத்தும் செய்தியாகும்.

சமயப் போராட்டங்களும், பூசல்களும் நிறைந்த காலகட்டங்களில் ஒரு பிரிவினரின் தமிழ் நூல்களை மறுபிரிவினர் படிக்கக்கூடாது என்றுகூட தடை விதிக்கப் பட்டதை அறிகின்றோம். சமணக் காப்பியமான சிந்தாமணியைப் படித்து மகிழ்ந்த மன்னனைச் சேக்கிழார் தடுத்து நிறுத்தி பெரியபுராணம் என்ற நூலை எழுதி அதை மட்டும் தான்

மன்னன் படிக்கவேண்டும் என்று வற்புறுத்தியதாகத் தமிழ் இலக்கியங்கள்வாயிலாக அறிகிறோம். இதனால் சமயப் போராட்டத்தில் தோற்றுப்போனவர்களின் இலக்கியங்கள் வெற்றிபெற்றோரால் அழிக்கப்பட்டிருக்கின்றன என்பதை நாம் அறிய முடிகிறது. சமணர்களும் பௌத்தர்களும் படைத்த ஏராளமான காப்பிய இலக்கியங்கள் நமக்குக் கிடைக்காமல் போனதற்கு இதுவும் ஒரு காரணமாக இருக்கலாம் என்று நான் உறுதியாக எண்ணினேன்.

சிந்தாமணியைச் சைவர்கள் படிக்கக்கூடாது என்று கி.பி.11-ஆம் நூற்றாண்டில் வெளியிடப்பட்ட கருத்து, மடங்களை நிறுவிய சைவ ஆதீனத்தினரால் மறுபரிசீலனை செய்யப்பட்டு, காலப்போக்கில் பிற சமயக்காப்பியங்களும் சைவர்களால் விரும்பிப்படிக்கப்படும் நிலை தோன்றியது. டாக்டர். உ. வே. சாமிநாதையார் அவர்கள் சிந்தாமணியைப் பதிப்பிக்க முயன்றபோது, திருவாவடுதுறை ஆதீனத்தின் தலைவராக இருந்த சுப்பிரமணிய தேசிகர் அதற்கு ஊக்கம் தருவதைக் காண்கின்றோம். மீனாட்சி சுந்தரம்பிள்ளை போன்ற சைவப் பெரியோர்கள் சமண இலக்கண நூல்களில் அதிக ஆர்வம் காட்டியது ஒரு வளர்ச்சி நிலையாகவே எனக்குத் தோன்றியது. இவர்கள் அனைவருக்கும் முன்னோடியாக தூயஞானம் நிறைந்த சிவச்சுடரான நச்சினார்க்கினியர் சிந்தாமணி என்னும் சமணக் காப்பியத்துக்கு உரை எழுதினார் என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது. சைவ மடங்கள் எழுச்சிபெற்ற காலத்தில் சமணமும், பௌத்தமும் பலவீனப்பட்டு அழிந்துபோனதுகூட இதற்கு ஒரு காரணமாக இருக்கலாம் என்று நான் எண்ணினேன். மடங்கள் கிறிஸ்தவத்தையும், இஸ்லாமையும் தான் தம் எதிரிகளாகக் கொண்டனவேயன்றி சமணத்தையும் பௌத்தத்தையும் அல்ல என்பது குறிப்பிடத்தகுந்தது. எனினும் மாயூரம் வேதநாயகம்பிள்ளை போன்ற கிறிஸ்தவர்கள் இந்த மடங்களோடு உறவுகொண்டு தமிழை வளர்க்கத் துணைநின்றது குறிப்பிடத்தகுந்த நிகழ்ச்சியே.

தமிழ் ஓலைச்சுவடிகளுக்குரிய விளக்கப்பட்டியல் தயாரிக்கத் திட்டமிட்டபோது உலகெங்கிலும் சிதறிக்கிடக்கும் தமிழ் ஓலைச்சுவடிகள் ஏறத்தாழ 30, 000 வரை இருக்கும் என்று நாங்கள் கருதினோம். ஆனால் இந்தத் துறையில் ஈடுபட்டு உழைத்தபோது தமிழ் ஓலைச்சுவடிகளின் எண்ணிக்கை பற்றிய தகவல்கள் புதிது புதிதாகக் கிடைத்துக்கொண்டே வந்தன. ஹாங்காங் பல்கலைக்கழகத்தில் பணிபுரியும் எனது நண்பர் டாக்டர். கிரகோரி ஜேம்ஸ் அவர்கள் ஐரோப்பிய நாடுகளில் உள்ள தமிழ்ச் சுவடிகள் பற்றிய தகவல்களைத் தொகுத்து கட்டுரையாக வெளியிட்டார் என்று முன்னர்க் குறிப்பிட்டேன். ஆசியவியல் ஆய்வு நிறுவனமும் இது தொடர்பாகக் களப்பணி செய்து பல தகவல்களைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சேகரித்து வந்தது. 1989 அளவில் நாற்பதினாயிரம் தமிழ் ஓலைச்சுவடிகள் வரை இருக்கும் என்று கணக்கிட்டோம். மீண்டும் மீண்டும் சேகரிக்கப்பட்ட தகவல்கள் இந்த எண்ணிக்கையை உயர்த்திக்கொண்டே வந்தன. 1993 ஆம் ஆண்டின் இடைப் பகுதியில் ஏறத்தாழ 53,000 தமிழ் ஓலைச்சுவடிகள் வரை இருப்பது பற்றிய தகவல்கள் எங்களுக்குக் கிடைத்தன. எனவே நாங்கள் தயாரித்துக்கொண்டிருக்கும் தமிழ் ஓலைச்சுவடிகளின் விளக்கப்பட்டியல் நூலின் தொகுதிகளும் மேலும் அதிகரிக்க வாய்ப்புகள் தோன்றின.

## 14. பயிலரங்குகளும் கருத்தரங்குகளும்

தமிழ் இலக்கிய வரலாற்றில் அச்சுப்பொறியின் வருகை பல மாற்றங்களைக் கொண்டு வந்தது. இலக்கியங்களை வாயால் சொல்ல காதால் கேட்டு அனுபவித்த பழையநிலை அச்சு இயந்திரத்தின் வருகையால் மாற்றம் கண்டது. 'செவி நுகர் கனிகள்' என்று கருதப்பட்ட இலக்கியங்கள் காகிதத்தில் அச்சடிக்கப்பெற்று நூல்களாக, விற்பனைப் பொருள்களாக வாசகர்களை எட்டியதும் அவை 'கண்கள் நுகர் கனிகளாக' மாறின. ஒரு சிலரால் ஓலைச்சுவடிகளில் ஒரு சில பிரதிகள் மட்டுமே எழுதப்பெற்ற இலக்கியங்கள் ஆயிரக்கணக்கில் அச்சிடப்பட்டு விற்பனைப் பொருட்களாக எண்ணற்ற வாசகர்களை வந்தடையும் நிலை ஏற்பட்டது. பனை ஓலைச்சுவடிகள் வாயிலாக நிகழ்ந்த கருத்துப்பரிமாற்றக் கலைக்கு அச்சு இயந்திரம் ஒரு முற்றுப்புள்ளி வைத்து விட்டது எனலாம். எனினும், அச்சில் வெளிவந்த நூல்களைக்கூட சில முதியவர்கள் பனை ஓலையில் எழுதிவைத்த நிலை 19 ஆம் நூற்றாண்டின் இறுதி வரை நிகழ்ந்தது. அச்சில் வெளிவந்த திருக்குறள் பரிமேலழகர் உரையினைப் பனை ஓலைச்சுவடிகளில் கண்டபோது உண்மையிலேயே நான் வியப்படைந்தேன். அத்தகைய பனையோலைச் சுவடிகள் ஒரு சில ஆசியவியல் ஆய்வு நிறுவனத்திலும் உள்ளன.

நூல்கள் வெளியீட்டாளர்களின் பெருக்கமும், அச்சு இயந்திரத்தின் வேகமும் இலக்கியப் படைப்பை ஓரளவிற்கு ஒரு வருவாய் சார்ந்த வணிகமாக மாற்றின எனலாம். குறிப்பிட்ட மன்னர்கள் அல்லது கோயில்களின் ஆதரவில் கவிதைகள் புனைந்து அவற்றை ஓலைச்சுவடிகளில் எழுதிவைத்துக் கற்றோர் முன்னிலையில் அரங்கேற்றிப் புரவலர்கள் கொடுத்த பரிசுத் தொகையைப் பெற்று வயிற்றை நிரப்பி வந்த பழைய எழுத்தாளர்களின் நிலையிலும் பல மாறுதல்கள் ஏற்பட்டன. தான் எழுதுவதையெல்லாம் விற்பனைப்பொருளாக (Commodity) மாற்றி, நூலாக வெளியிட்டு வாசகர்களுக்கு விற்றுப் பொருளீட்டும் ஒருவித பொருளாதாரத் தற்சார்பு நிலை எழுத்தாளனுக்கு வரத்தொடங்கியது. இந்தப் பின்னணியில் ஓலைச்சுவடிகளில் இலக்கியங்களை எழுதிவைக்கும் முறை காலாவதியாகிப்போன ஒரு மரபாக மாறி விட்டது. இதன்விளைவாக இந்தக் கலை தமிழக மண்ணில் வேகமாக மறையத் தொடங்கியது. சுவடியில் எழுதுவோர், சுவடிகளைப் படிப்போர் ஆகியோர் தொகை அருகிவிட்டது. இந்நிலையில் குறைந்தபட்சம் சுவடிகளைப் படிக்கும் பயிற்சியைத் தக்கவைத்துக்கொள்ள வேண்டியது நமது கடமையாக ஆகிவிட்டது. இதைச் செய்யத் தவறிவிட்டால் எஞ்சியிருக்கின்ற ஓலைச்சுவடிகளைப் பயன்படுத்த முடியாத நிலையும், பதிப்பித்து வெளியிட முடியாத நிலையும் தோன்றிவிடும் என்று நாங்கள் அஞ்சினோம்.

எனவே சுவடியியல் தொடர்பான பல கருத்தரங்குகளையும் பயிலரங்குகளையும் (Workshops) நடத்தி இளந்தலை முறையினருக்கு இத்துறையில் ஆழ்ந்த பயிற்சி தர நாங்கள் திட்டமிட்டோம். ஓலைச்சுவடிகளைக் காக்கும் முயற்சியின் ஓர் அங்கமாக இதுபோன்ற பயிற்சித் திட்டங்கள் (Training Programmes) அமையவேண்டும் என்று நாங்கள் விரும்பினோம். எனவே எப்படியாவது ஆண்டுதோறும் குறைந்தபட்சம் 25 அறிஞர்களுக்காவது இத்துறையில் பயிற்சி தரத் திட்டமிட்டோம்.

இது போன்ற பயிற்சித் திட்டங்கள் பற்றி டாக்டர் கபிலா அவர்களிடமும், பிறமொழிச்சுவடியியல் வல்லுநர்கள் பலருடனும் நான் தொடர்ந்து விவாதித்தபோது அவர்களும் அவற்றின் முக்கியத்துவத்தை வற்புறுத்தினர். இந்நிலையில் தில்லியிலுள்ள இந்திராகாந்தி தேசியக் கலைமையத்தின் சுவடியியல் பகுதியின் ஆலோசகராக இருந்த வடமொழி அறிஞர் டாக்டர் சி.ஆர்.சுவாமிநாதன் அவர்கள் எனக்குப் பல நிலையிலும் உதவி செய்ய முன் வந்தார்கள்.

ஆண்டுதோறும் சுவடியியல் மூலபாட ஆய்வு (Textual Criticism) தொடர்பான பயிலரங்குகள் நடத்துவதற்கு மைய அரசிலிருந்து தொடர்ந்து நிதியுதவி கிடைப்பதற்கு டாக்டர் சுவாமிநாதன் வழிகாட்டினார். மைய அரசு இதுபோன்ற பயிலரங்குகளை நடத்துவதற்கு நிதியுதவி செய்ய முன்வந்தபோது நாங்கள் மிகவும் மகிழ்ச்சியடைந்தோம். மைய அரசின் நிதியுதவியோடு நடைபெறும் இப்பயிலரங்குகள் மிகப்பயனுள்ளனவாக இருக்கவேண்டும் என்பதில் நாங்கள் அதிக ஆர்வம் காட்டினோம்.

முதல் பயிலரங்கம் நடத்துவதைப் பற்றி நாங்கள் செய்தித்தாள்களில் விளம்பரம் கொடுத்த போது ஏராளமான தமிழ் அறிஞர்களும், ஆய்வு மாணவர்களும் விண்ணப்பங்களை அனுப்பியிருந்தனர். அவர்களுள் தகுதி அடிப்படையில் 25 பேரை மட்டுமே நாங்கள் தேர்வு செய்தோம். 21 நாட்கள் தொடர்ந்து நடைபெற்ற இப்பயிலரங்கில் 20 - க்கும் மேற்பட்ட அறிஞர்கள் சுவடியியலின் பல்வேறு கூறுகள் பற்றி விரிவுரை ஆற்றினர். சுவடியியல் பற்றிய ஆய்வு வரலாற்று ரீதியாகவும், ஒப்பியல் நோக்கிலும் அமையவேண்டுமென்பதில் நாங்கள் அதிகக் கவனம் செலுத்தினோம். எனவே, கன்னடம், தெலுங்கு, மலையாளம், சமஸ்கிருதம், பாலி போன்ற மொழிகளில் உள்ள சுவடிகளின் நிலை பற்றியும், சுவடிகளைப் பதிப்பிக்கும் பணி இம்மொழிகளில் கண்டுள்ள வளர்ச்சி பற்றியும் விரிவுரை ஆற்ற

வல்லுநர்களை அழைத்திருந்தோம். சுவடிகளைச் சேகரித்தல், பாதுகாத்தல் போன்றன தொடர்பாகப் பல விரிவுரைகள் இப்பயிலரங்கில் நிகழ்த்தப்பட்டன. காலந்தோறும் தோன்றிய எழுத்து வகைகள், வரி வடிவில் ஏற்பட்ட மாறுதல்கள், சுவடிகளிலுள்ள எழுத்துக்களைப் படிக்கும் முறை, சுவடிகளைப் பதிப்பிக்கும் முறை, மொழிபெயர்க்கும் முறை என்பன பற்றி ஆழ்ந்த பயிற்சி தரப்பட்டது. இத்தகைய முயற்சியைத் தொடர்ந்து மேற்கொள்ளும் போது வருங்காலத்தில் தமிழ் ஓலைச்சுவடிகளைப் படிப்போர் இல்லை என்கின்ற அவலநிலை ஏற்படாமல் பாதுகாத்துக்கொள்ள முடியும் என்ற உறுதி எங்களுக்கு ஏற்பட்டது.

நிறுவனத்தின் சுவடித்துறையில் உள்ள அலுவலர்களை வட இந்தியாவில் நடைபெற்ற பயிற்சி முகாம்களுக்கு அனுப்பிப் பயிற்சி தந்தோம். திரு. பூமிநாகநாதன் என்ற ஆய்வாளர் லக்னோவில் சில மாதங்கள் சுவடிப்பாதுகாப்பில் டாக்டர் அகர்வால் போன்ற பெரிய அறிஞர்களிடம் பயிற்சி பெற்று வந்தார். அதோடு, மூலபாட ஆய்விலும் எங்கள் ஆய்வாளர்கள் நல்ல பயிற்சி பெறுமாறு பார்த்துக்கொண்டோம். சுவடியியல் தொடர்பான பயிலரங்குகளில் மூலபாட ஆய்வுக்கு அதிக முக்கியத்துவம் தந்தோம்.

முதல் பயிலரங்கை நடத்திய பின்னர் நிறுவனத்தின் சுவடியியல் ஆய்வுப்புலம் தனது பணிகளை மேலும் விரிவுபடுத்தத் தொடங்கியது. நாங்கள் நடத்திய பயிலரங்கம் மைய அரசினருக்கு மிகுந்த மனநிறைவைத் தந்தது. அடுத்த ஆண்டும் இதுபோன்ற ஒரு பயிலரங்கத்தை நாங்கள் நடத்தினோம். பல நிலைகளிலும் முன்னர் நடத்தப்பட்ட பயிலரங்கைவிட இது சிறப்பாக இருக்குமாறு பார்த்துக் கொண்டோம். இந்த இரண்டாவது பயிலரங்கம் சுவடியியல் ஆய்வில் நிறுவனத்துக்கு நல்ல புகழைத் தேடித் தந்தது. நிறுவனத்தின் ஆய்வாளர்கள் பயிலரங்க விரிவுரைகளில் அதிகமாகப் பங்கு கொள்ளத் தொடங்கினர்.

சென்னையிலுள்ள திருவான்மியூரில் தொடங்கப்பட்ட தமிழ் ஓலைச்சுவடிகளைப் பாதுகாக்கும் முயற்சி மெல்ல மெல்ல பரந்து விரிந்து தமிழ்நாட்டு முயற்சியாக மலர்ந்து பிறமொழிச் சுவடிகளையும் ஆராயும் தேசிய முயற்சியாகக் கனிந்தது. தென்னகத்திலுள்ள சுவடியியல் பற்றிய ஆய்வுக்குரிய சிறந்த ஆய்வுமையமாக இந்நிறுவனத்தின் சுவடியியல் ஆய்வுப்புலம் அனைவரையும் கவரத் தொடங்கியது. இந்நிலையில் சுவடியியல் தொடர்பாக மேலும் பல ஆய்வுத் திட்டங்களை மேற்கொண்டு எங்கள் ஆய்வுப்பரப்பை விரிவுபடுத்தத் திட்டமிட்டோம். இதன் விளைவாக மேலும் பல சாதனைகளைத் தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய ஆய்வில் நாங்கள் நடத்திக்காட்டுவதற்குரிய வழி வகைகள் பிறந்தன.

## 15. அறிவியல் சார்ந்த ஓலைச்சுவடிகள்

நாங்கள் கணக்கிட்டுள்ள 53,000 தமிழ் ஓலைச்சுவடிகளில் ஏறத்தாழ 30,000 க்கும் மேற்பட்ட சுவடிகள் மருத்துவம் போன்ற பழைய தொன்மையான அறிவியல் துறைகளைச் சார்ந்தனவாக இருந்தன. எனவே தமிழ் ஓலைச்சுவடிகள் காட்டும் தொன்மையான அறிவியல் (Traditional Science) என்ற தலைப்பில் மிகப்பெரிய ஆய்வுத்திட்டத்தை ஏன் உருவாக்கக் கூடாது என்று நீண்ட நாட்களாக நான் சிந்தித்து வந்தேன். இன்றைக்கு நாம் பேசுகின்ற அறிவியல் சிந்தனைகள் எல்லாம் அதிகமாக மேற்கிலிருந்து வந்தவை. இவை வந்துசேரும் முன் நமது அறிவியல் சார்ந்த முயற்சிகளின் நிலை என்ன என்பதையும், அவை மேலைநாட்டு ஆதிக்கத்தால் எவ்வாறு அழிந்தன என்பதையும் ஆய்ந்து காணமுயன்றோம். ஆசிய நாடுகளில் தோன்றிய அறிவியல் சிந்தனைகளும் சாதனைகளும் மேற்கத்திய ஆதிக்கத்தால் ஓரளவிற்கு மூடி மறைக்கப்பட்டுள்ள நிலையை நாங்கள் நெடுங்காலமாகவே உணர்ந்திருந்தோம். மேற்கின் தொடர்பு நமக்கு ஏற்படுவதற்கு முன்பு நம்நாடு மருத்துவத்திலும் சரி, கட்டிடக் கலையிலும் சரி மிக உன்னத நிலையைப் பெற்றிருந்ததை யாராவது மறுக்க முடியுமா? கரிகாலன் கட்டியதாகக் கூறப்படும் கல்லணை பொறியியல் தொடர்பான தொழில் நுட்பங்கள் விண்ணளாவ வளர்ந்த இன்றைய நிலையிலும் அனைவரையும் வியப்பூட்டுவதாக அமையவில்லையா? கட்டிடக்கலையில் தமிழர்கள் பெற்றிருந்த

அனுபவமும், திறமையும் இன்றைக்கும் வெளிநாட்டினரை வியப்பில் ஆழ்த்துகின்றனவே. தஞ்சைப் பெரியகோயிலின் கட்டிடக்கலை நுட்பத்தை இன்றும் நம் நாட்டு அறிஞர்களும், பிறநாட்டு அறிஞர்களும் வியந்து பாராட்டுகின்றனரே. மருத்துவக் கலையிலும் பிற கலைகளிலும் நாம் பெற்றிருந்த திறமைகள் உலகத்தையே வியக்க வைக்கின்றனவே. இவை போன்ற அறிவியல் சிந்தனைகளை அடக்கியுள்ள இந்தப் பழந்தமிழ் ஓலைச்சுவடிகளைப் படியெடுத்து அவற்றின் கருத்துகளை ஆய்வது கல்வி வளர்ச்சிக்கு மிகவும் தேவை என்று நான் கருதினேன். அமெரிக்கா, ஜப்பான், இங்கிலாந்து போன்ற பிறநாடுகளைச் சேர்ந்த எனது நண்பர்கள் இங்கு வரும்போதெல்லாம் இது தொடர்பாக நான் அவர்களுடன் விவாதித்தேன். அவர்கள் அனைவரும் இம்முயற்சியைப் பாராட்டினர். இந்தத் திட்டத்தைச் செயல்படுத்த வேண்டுமென்றால் தமிழக அரசையோ, மைய அரசையோ நம்பி, நிதி ஆதாரங்களைப் பொறுத்தவரையில் எதுவும் செய்யமுடியாது என்று நான் அனுபவ பூர்வமாக உணர்ந்துகொண்டேன். வெளிநாடுகளைச் சார்ந்த சில நிறுவனங்களைக்கூட இத்திட்டத்திற்கு உதவுமாறு வேண்டியிருந்தேன். இத்திட்டத்தைப் பாராட்டிய அனைத்து வெளிநாட்டவர்களும் இதற்கு நிதியுதவி செய்வதில் உள்ள ஒரு சில இடையூறுகளை விளக்கினர். இந்நிலையில் தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய எனது திட்டத்தை ஐக்கிய நாடுகளின் பார்வைக்கு எடுத்துச்செல்ல முடிவு செய்தேன்.

## 16. தமிழ்ச் சுவடிகளும் யுனெஸ்கோ நிறுவனமும்

ஐக்கிய நாடுகளின் கல்வி, பண்பாட்டு நிறுவனமான யுனெஸ்கோ நிறுவனத்துக்கு எனது திட்டத்தின் விரிவான கருத்துருவினை அனுப்பி வைத்தேன். இது இந்நிறுவனத்தின் முக்கிய அதிகாரிகளைப் பெரிதும் கவர்ந்தது. இதுபோன்ற பிரமாண்டமான திட்டம் ஒன்றை உலகம் முழுவதற்கும் உலகின் நினைவுச்சின்னங்கள் (Memory of the World) என்ற பெயரில் யுனெஸ்கோ நிறுவனம் அறிமுகப்படுத்துவதாகவும், அதில் ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் திட்டத்தையும் இணைத்து செயல்படுத்தலாம் என்றும் யுனெஸ்கோ நிறுவனம் தெரிவித்தபோது நாங்கள் மிகவும் மகிழ்ச்சி அடைந்தோம். தமிழ் ஓலைச்சுவடிகளைக் காப்பதற்கு ஆண்டாண்டு காலமாகத் தொடர்ந்து செய்த முயற்சி இறுதியில் வெற்றி பெற்றுவிட்டது என்று உள்ளம் உவகைக்களிப்பில் மிதந்தது. யுனெஸ்கோவோடு இணைந்து தமிழ் ஓலைச்சுவடிகளைச் சர்வதேச அறிஞர்களின் கவனத்திற்கு எடுத்துச்செல்ல முயன்ற எங்களது முயற்சிக்கு கிடைத்த வரவேற்பு நிறுவனத்துக்குக் கிடைத்த மாபெரும் வெற்றியாக அமைந்தது.

உலகின் நினைவுச் சின்னங்கள் என்ற திட்டத்தை உலகம் தழுவிய நிலையில் செயல்படுத்த முயன்ற யுனெஸ்கோ நிறுவனம் அத்திட்டத்தில் இந்நிறுவனத்துக்குப் பெரும் பங்கினைத் தந்தது. இத்திட்டத்தின் செயல்பாட்டிற்குரிய ஆலோசனை வழங்கும்

வல்லுநர்களாக உலகின் பல்வேறு நாடுகளைச் சார்ந்த பத்து பேர் கொண்ட ஒரு குழுவினை ஏற்படுத்தி அந்தக்குழுவின் ஓர் உறுப்பினராக, அந்தக் குழுவின் இந்தியப் பிரதிநிதியாக என்னைத் தேர்வு செய்து, யுனெஸ்கோ நிறுவனம் அழைப்பு விடுத்திருந்தது. இந்த வல்லுநர்குழுவின் முதல் கூட்டம் போலந்து நாட்டின் தலைநகரான வார்சாவில் நடைபெறுவதாகவும், அக்கூட்டத்தில் யுனெஸ்கோவின் முழுச்செலவில் நான் கலந்துகொள்ள வேண்டுமென்றும் அழைப்பு வந்திருந்ததைக் குறித்து நாங்கள் மிகவும் மகிழ்ச்சியடைந்தோம்.

ஜப்பானிய நண்பர் டாக்டர் ஷு ஹிகோசகா அவர்கள் உலகின் பிற நாடுகளிலிருந்து நிறுவனத்துக்கு வரும் செய்திகளை நிறுவனம் உடனடியாகப் பெறத் துணைசெய்யும் வகையில் தொலை எழுது கருவி (Fax) ஒன்றை அன்பளிப்பாகத் தந்திருந்தார். அந்தக் கருவி பிரான்ஸ் நாட்டின் தலைநகரான பாரிசு மாநகரத்திலிருந்து தமிழ் ஓலைச்சுவடிகளைக் காக்கும் முயற்சியை அடித்தளமாகக் கொண்ட மேற்கூறிய அழைப்பை ஏந்தி வந்தபோது நாங்கள் அனைவரும் மிகுந்த மகிழ்ச்சியடைந்தோம். ஐக்கிய நாடுகளின் அமைப்பான யுனெஸ்கோ நிறுவனத்தின் அழைப்பை ஏற்று உலகின் நினைவுச்சின்னங்கள் என்ற ஆய்வுத்திட்டத்தைச் செயல்படுத்த ஆலோசனை வழங்கும் வல்லுநர் குழு உறுப்பினர்களுள் ஒருவனாக நான் செயலாற்ற இசைவு தந்தேன். அதோடு, போலந்து நாட்டின் தலைநகரான வார்சாவில் நடக்கும் வல்லுநர்குழுவின் முதல் கூட்டத்தில் கலந்து கொள்ள மகிழ்ச்சியுடன் இசைவளித்தேன். எனது கடிதங்கள் தொலை எழுது கருவி வாயிலாகப் பாரிசுக்கு அனுப்பி வைக்கப்பட்டன.

மேற்கூறிய அழைப்புக் கடிதத்தைக்கண்ட டாக்டர் ஷு ஹிகோசகா வாய்ப்பு இருந்தால் தானும் என்னுடன் வந்து வார்சாவில் நடைபெறும் கூட்டத்தில் கலந்துகொள்ள விழைவதாகக் குறிப்பிட்டார். யுனெஸ்கோ நிறுவனம் அழைப்பு

நல்கும் என்றால், ஜப்பானிய நிறுவனங்களிலிருந்து நிதி பெற்றுத் தானும் அந்தக் கூட்டத்தில் கலந்துகொள்ள இயலும் என்று அவர் கூறினார். இதனை யுனெஸ்கோ அதிகாரியான நண்பர் திரு. அபிட் என்பவருக்கு நான் தொலை எழுது கருவி மூலம் தெரிவித்தபோது அவரும் அதற்கு இசைவளித்தார்.

இக்கூட்டத்தில் பார்வையாளராகத் தம் சொந்தச் செலவில் கலந்து கொள்ளுமாறு யுனெஸ்கோ நிறுவனம் டாக்டர் ஷீ ஹிகோசகாவிற்கு அழைப்பு விடுத்தது. அவருக்குரிய செலவினை ஏற்றுக்கொள்ள ஜப்பான் நாட்டின் கல்வி நிறுவனம் ஒன்று முன்வந்தது. எனவே நாங்கள் இருவரும் வார்சா செல்வதென்று முடிவு செய்து கொண்டோம். இந்த அழைப்பு, அழிந்து கொண்டிருக்கும் பழந்தமிழ்ஓலைச்சுவடிகள் அனைத்தையும் பாதுகாத்துவிட முடியும் என்ற அசைக்கமுடியாத நம்பிக்கையை எங்கள் இருவர் உள்ளங்களிலும் தோற்றுவித்தது. டாக்டர் ஷு ஹிகோசகா உலக நாடுகளைப் பலமுறை சுற்றி வந்தவர். அவர் என்னோடு வருவது பலவகைகளிலும் எனக்குத் துணையாக இருக்குமென்று எனது குடும்பத்தினரும் கருதினர்.

தமிழ் ஓலைச்சுவடிகள் தொடர்பான ஆய்வுப்பணிகளுக்காக நான் மேற்கொள்ளும் முதல் வெளிநாட்டுப்பயணம் இதுவாகவே அமைந்தது. இந்த அழைப்பைப் பாராட்டிப் பல்வேறு பத்திரிகைகளிலும் செய்திகள் வெளிவந்தன. இதற்கு முன்னர் இந்த நிறுவனத்தின் பௌத்தவியல் ஆய்வுத்துறையை விரிவுபடுத்துவதற்காக இலங்கையின் கல்வி அமைச்சரையும், புத்தசாசனத்துறையின் செயலரையும் சந்திப்பதற்காக நாங்கள் இருவரும் இலங்கை சென்று வந்தோம். அப்போது இலங்கை அரசு சார்பாக எல்லா உதவிகளும், வசதிகளும் எங்களுக்குச் செய்து தரப்பட்டன. இலங்கையின் துணைக் கமிஷனராக இருந்த திரு. ஜெயசிங்கே அனைத்து உதவிகளையும் நல்கி இப்பயணம் சிறப்பாக அமைய அப்போது துணைபுரிந்தார். கொழும்பு மாநகரத்திலுள்ள பல பௌத்த அமைப்புக்களுக்கு நாங்கள்

சென்றபோது சிங்கள மொழியில் அமைந்த ஏராளமான ஓலைச்சுவடிகளைக் காண நேரிட்டது. அப்போதெல்லாம்கூட தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய செய்திகளை அங்கிருந்த புத்த பிக்குகளிடம் நான் கேட்டுத் தெரிந்து வைத்திருந்தேன். பெரும்பாலான தமிழ் ஓலைச் சுவடிகள் யாழ்ப்பாணப் பகுதியில் இருப்பதாகவும், கலவரம் நடந்துகொண்டிருந்ததால் அப்பகுதிகளுக்கு நானும், எனது ஜப்பானிய நண்பரும் செல்வது நல்லது அல்ல என்றும் அவர்கள் கூறிவிட்டனர். எனவே எங்களது இலங்கைப் பயணத்தின்போது இலங்கையிலுள்ள தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய செய்திகளைத் திரட்டவோ, அவற்றின் நிலையைக் கண்டறியவோ வாய்ப்புக்கள் கிடைக்காமல் போய்விட்டன.

## 17. எனது வார்சா பயணம்

வார்சா பயணத்தை மேற்கொள்ளும்போது பிற ஐரோப்பிய நாடுகளிலுள்ள தமிழ் ஓலைச் சுவடிகளையும் பார்வையிட வேண்டும் என்று முதலில் நாங்கள் திட்டமிட்டோம். எனினும், இது எனது முதல் ஐரோப்பியப் பயணமாக இருப்பதால் அதிக இடங்களுக்குச் செல்வதைத் தவிர்ப்பது நல்லது என்று நண்பர் கூறிவிட்டார். எனவே ஜெர்மனி, ரோம், ஸ்வீடன் போன்ற நாடுகளுக்குச் செல்வதை அடுத்த பயணத்தின்போது பார்த்துக் கொள்ளலாம் என்று முடிவு செய்தோம். இப்பயணத்தின் போது இலண்டனில் சென்று தங்கி அங்குள்ள தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய செய்திகளைச் சேகரிக்கத் திட்டமிட்டோம்.

எனது பயண ஏற்பாடுகளை ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் அலுவலர்கள் மிகுந்த ஆர்வத்துடனும், உற்சாகத்துடனும் மேற்கொண்டனர். இந்நிலையில் இலண்டனில் என்னை மீண்டும் சந்திப்பதாகக் கூறி நண்பர் டாக்டர் ஷு ஹிகோசகா ஜப்பானுக்குச் சென்றுவிட்டார். யுனெஸ்கோ வல்லுநர்குழுவின் மத்தியில் தமிழ் ஓலைச்சுவடிகளைக் காப்பது பற்றி எப்படியெல்லாம் விளக்கிக்கூற வேண்டும் என்பது பற்றி என் மனம் ஓய்வின்றி இரவும் பகலும் தொடர்ந்து சிந்தித்துக் கொண்டேயிருந்தது. பாதுகாக்கவேண்டிய தமிழ் ஓலைச்சுவடிகளின் பட்டியல் ஒன்றை மிக விரிவாகத் தயாரித்தோம். சென்னையிலுள்ள கீழ்த்திசை சுவடி நூலகத்தில் ஏராளமான தமிழ் ஓலைச்சுவடிகள் உள்ளன. இவை அரசின்

பாதுகாப்பில் இருந்தும் நன்றாகப் பாதுகாக்கப்படவில்லை. இந்த நூலகத்திற்குச் சென்று அங்குள்ள தமிழ்ச்சுவடிகளின் நிலையைக் கண்டறிந்தேன். டாக்டர் கபிலா அவர்களின் முயற்சியால் அங்குள்ள சமஸ்கிருத ஓலைச்சுவடிகளுக்கு நல்லகாலம் பிறந்திருந்தது. அவற்றை நுண்சுருள் புகைப் படங்களாகப் பிரதிசெய்யும் பணி (Microfilming) நடந்து கொண்டிருந்தது. ஆனால் தமிழ்ஓலைச்சுவடிகள் கேட்பாரற்றுக் கிடந்தன. பிற நாடுகளில் காணப்படும் தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய பட்டியலையும் எங்களால் தயாரிக்க முடிந்தது. அதோடு, தமிழ் ஓலைச்சுவடிகளின் நிலை பற்றிய நீண்ட கட்டுரை ஒன்றினையும் யுனெஸ்கோவின் வல்லுநர் குழு உறுப்பினர்களுக்குத்தர ஆங்கிலத்தில் தயாரித்தோம். இந்த வாய்ப்பைப் பயன்படுத்தித் தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய சிந்தனைகளை உலக நாட்டு அறிஞர்களின் கவனத்திற்கு மிக்க ஆற்றலுடன் கொண்டுவர வேண்டும் என்று அதிக ஆர்வமுடன் செயல்பட்டோம். இந்த அறிமுகத்தின் மூலம் தமிழ் ஓலைச் சுவடிகளுக்கு நல்லகாலம் கிடைத்துவிடும் என்ற உறுதி எங்கள் உள்ளத்தில் பிறந்தது.

செப்டம்பர் மாதம் 6ஆம் நாள் மாலையில் நிறுவனத்தின் அலுவலர்களும் ஆய்வாளர்களும் ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தனர். நிறுவனத்தின் மூத்த தமிழ்ப்பேராசிரியர் டாக்டர் மு. சண்முகம் பிள்ளை எனது முயற்சிகளைப் பாராட்டிப் பேசினார். நிறுவனத்தின் ஆய்வாளர்களும் பணியாளர்களும் அலுவலர்களும் வாழ்த்துக்கூறி வழியனுப்பிவைத்தனர்.

நிறுவனத்தின் அலுவலர்கள் விமான நிலையம் வந்து வழியனுப்ப செப்டம்பர் 7 ஆம் நாள் நான் சென்னையை விட்டு வார்சா நகரை நோக்கிப் பயணம் மேற்கொண்டேன். என் வாழ்வில் மிகவும் குறிப்பிடத்தக்க இந்தப் பயணம் மகிழ்ச்சியும், உற்சாகமும் ஊட்டும் பயணமாகவே அமைந்தது. இந்தியப் பண்பாட்டின் பிரதிநிதியாக ஐக்கிய நாடுகளின் கல்வி-

பண்பாட்டு நிறுவனம் ஏற்பாடு செய்துள்ள சர்வதேச அறிஞர்களின் கூட்டத்தில் தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றி ஆங்கிலத்தில் சொற்பொழிவாற்ற இருப்பதை நினைத்து உள்ளத்தில் ஒருவித பரவச உணர்வு ஏற்பட்டது. பயணம் முழுவதும் தமிழ் ஓலைச்சுவடிகளின் நிலைபற்றிய சிந்தனையே என் உள்ளத்தில் அதிக ஆதிக்கம் செலுத்தியது. எங்கள் விமானம் துபாய் நகரத்தை அடைந்தபோது இந்திய மக்களின் மதிநுட்பத்தாலும் கைவண்ணத்தாலும் பாலைவனத்தின் மத்தியில் ஒரு சொர்க்கலோகம் கட்டியெழுப்பப் பட்டிருப்பதைக்கண்டு வியந்தேன். துபாய் நகரத்தின் அழகு என்னை மிகவும் கவர்ந்தது. இந்திய மக்களின் வியர்வைத்துளிகளின் வெளிப்பாடாகவே எனக்கு அந்நகரம் காட்சியளித்தது. இரவிலும் அந்நகரம் பகலாகவே தென்பட்டது. எனினும், இந்தியர்களின் திறமையும் உழைப்பாற்றலும் அவர்களின் சொந்த மண்ணிற்கும், சொந்தப் பண்பாட்டிற்கும் பயன்படாமல் "விழலுக்கு இறைத்த நீர்" போன்று எங்கோ சென்று சேருவதை எண்ணியபோது வருத்தமே மேலிட்டது. பிறக்கின்ற ஒவ்வொரு மனிதனும் தன்னைக் காத்துக்கொள்ளும் ஆற்றலினையும், தனக்கு வேண்டிய தேவைகளைச் சந்திக்கும் வலுவினையும் உட்கொண்டுதான் பிறக்கின்றான். ஆனால் அவனுக்கு வாழ்வதற்கு வழி அமைத்துக்கொடுக்க நம்நாடு தவறிவிட்டது. எனவே இங்குப் பிறந்த மனிதர்கள் இந்த மண்ணில் பயனுற வாழ வழியற்று, வயிற்றுப்பிழைப்புக்காக எங்கெங்கோ அலையும் நிலை ஏற்படும்போது, இந்த நாட்டின் சமூக, பொருளாதார அமைப்புக்களை எண்ணி நான் உண்மையிலே மிகுந்த வேதனையடைந்தேன்.

சர்வதேச நகரமாக் உருப்பெற்ற துபாய் நகரத்திலிருந்து புறப்பட்டு வரலாற்றுச் சிறப்புமிக்க பல நாடுகளைத் தாண்டி விமானம் 45,000 அடி உயரத்திற்கு மேல் இலண்டனை நோக்கிப்பறந்துகொண்டிருந்தது. நீண்ட நெடும் பயணத்திற்குப் பின் அது இலண்டனை நெருங்கிக்கொண்டிருந்தது. இன்னும்

20 நொடிகளில் விமானம் இலண்டனில் தரையிறங்கும் என்று அறிவிப்பு செய்யப்பட்டவுடன் ஷேக்ஸ்பியரும் மில்டனும் ஷெல்லியும் கீட்சும் பிறந்த இங்கிலாந்து நாட்டைத் தரிசிக்கப்போகிறோம் என்பதை நினைத்து உள்ளத்தில் மகிழ்ச்சி ஏற்பட்டது.

நான் ஆங்கில இலக்கியம் பயின்று கொண்டிருக்கும் போதெல்லாம், இலண்டனைப் பற்றி இலக்கியங்கள் மூலம் அதிகமாகக் கற்றிருக்கிறேன். எனது பேராசிரியர் டாக்டர் ஏஸ். இராமகிருஷ்ணன் இங்கிலாந்து நாட்டு வரலாற்றை, அந்த நாட்டின் சமூக அமைப்புகளை, அந்த நாட்டின் மொழி இலக்கிய வரலாற்றினை அப்படியே எங்கள் மனக் கண்முன் கொண்டு வந்து நிறுத்துவார். எலிசபெத் மகாராணியின் ஆட்சி பற்றியும், ஷேக்ஸ்பியரின் நாடக அரங்கமான குளோப் தியேட்டர் பற்றியும் என் தந்தையார் பலமுறை என்னோடு விரிவாகக் கலந்துரையாடியிருக்கின்றார். ஆங்கில இலக்கிய மேதைகளுள் என்னை மிகவும் கவர்ந்தவர்கள் ஷேக்ஸ்பியர், மில்டன், ஷெல்லி, கீட்ஸ், சாமுவேல் ஜான்சன் ஆகியோரே. 25 வயதில் இம்மண்ணுலகைத் துறந்துவிட்ட கீட்ஸ் எழுதிய கவிதைகளைப் படிக்கும்போதெல்லாம் வான உலகத்திலிருந்து ஒரு தேவதூதன் இறங்கி வந்து உணர்ச்சி மிகுந்த உள்ளத்தோடு ஆங்கிலத்தில் கவிதை பாடுவதாக உணர்ந்திருக்கின்றேன். வேட்ஸ்வர்த்தின் பாடல் வரிகளைப் படிக்கும்போதெல்லாம் அவன் வாழ்ந்த லேக் என்னும் மாவட்டப்பகுதி தேவதைகள் வாழும் ஒரு கனவு உலகமாகவே என் மனக்கண் முன்பு பரந்து விரிந்து விசுவரூபமெடுப்பதை நான் உணர்ந்திருக்கிறேன். ஷேக்ஸ்பியர் தன்னுடைய நாடகத்தில் எகிப்தில் ஓடும் நைல் நதி பற்றிய காட்சிகளை விவரிக்கும் போதெல்லாம் இலண்டனைச் சுற்றி ஓடும் தேம்ஸ் நதியையே அவன் நைல் நதியாக மாற்றிக் காண்கிறான் என்று நான் உணர்ந்ததுண்டு. சோழ நாட்டையே கோசலமாக மாற்றிக்காணும் கம்பனோடு நான் ஷேக்ஸ்பியரை இணைத்து நோக்குவதுண்டு. ஷேக்ஸ்பியர் இவ்வாறு

வருணிப்பதையெல்லாம் தொடக்க நிலையில் தோன்றிய திறனாய்வாளர்கள் கிண்டல் செய்துகொண்டிருந்தனர்.

ஷேக்ஸ்பியரின் படைப்புக்களில் வரும் ரோம் நாட்டு வீரர்கள் இங்கிலாந்து நாட்டு வீரர்களைப் போன்று காட்சி தருகின்றனர்; மக்கள் மன்ற (Senate) உறுப்பினர்கள் முட்டாள்களைப் போன்று செயல்படுகின்றனர். அவர்கள் தங்கள் கௌரவத்தைக் (decorum) காப்பது கிடையாது என்றெல்லாம் தொடக்கநிலையில் தோன்றிய திறனாய்வாளர்கள் குறிப்பிட்டனர். இதற்கு நகைச்சுவை ததும்ப மறுப்பெழுதிய டாக்டர் சாமுவேல் ஜான்சனின் அங்கத உணர்வு என்னைப் பலமுறை வாய்விட்டுச் சிரிக்கவைத்ததுண்டு. ஷேக்ஸ்பியருக்கு முட்டாள்கள் தேவைப்படும்போது மக்கள் மன்றம் (Senate House)செல்வான். ஏனெனில் முட்டாள்கள் அங்குதான் அதிகமாகக் கிடைப்பார்கள். அவர்களை அப்படியே அவன் தன் நாடகங்களில் சித்திரித்து விடுகிறான். எனவே, மனித இயல்பை(General human nature) அப்படியே படைக்கும் கலைஞனாக ஷேக்ஸ்பியர் திகழ்கிறான் என்பார் சாமுவேல் ஜான்சன்.

காலரிட்ஜ், பைரன் ஆகியோர் கவிதைகளைப் படிக்கும்போது ஏதோ ஒரு கனவுலகில் சஞ்சரிப்பதுபோன்ற உணர்வு எனக்கு ஏற்படுவதுண்டு. அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் வாழ்ந்த டி.எஸ். எலியட் படைப்புக்கள் மீது எனக்கு அதிக ஆர்வம் உண்டு. டிஎஸ். எலியட்டின் 'பாழ்நிலம்', (Waste land) என்ற கவிதையை மீண்டும் மீண்டும் படித்துச் சுவைப்பது எனக்கு மிகவும் பிடிக்கும். இப்படைப்பில் அவன் குறிப்பிடும் இலண்டன்பாலம் (London Bridge) ஓர் இலக்கியக் குறியீடாகவும், ஒரு கதைப் பாத்திரமாகவும் என் மனக்கண்முன் நிழலாடுவதுண்டு.

டாக்டர் பட்ட ஆய்வுக்காக ஷெல்லியையும், பாரதியையும் ஒப்பிட்டு நீண்டகாலம் நான் ஆய்வு செய்தேன். இங்கிலாந்து நாடு தோற்றுவித்த மிகப் பெரிய புரட்சிக்கவிஞனாக ஷெல்லி

என் கண்முன் தட்டுப்பட்டான். கார்ல் மார்க்சால் பாராட்டப்பெற்ற இக்கவிஞன் உலகக் கவிஞர்களுள் என்மீது அதிகமான பாதிப்பை ஏற்படுத்தியவன் என்பேன். இவனது படைப்புகள் என் உள்ளத்தை அதிகமாகக் கவர்ந்துள்ளன. தன்னை ஷெல்லி தாசன் என்று அறிமுகப்படுத்திக் கொண்ட தமிழ் மகாகவி பாரதி ஆங்கில இலக்கியங்களின்மேல் வைத்திருந்த மதிப்பை நான் பல நிலைகளிலும் வியந்ததுண்டு. இந்திய நாட்டுப் பறையர்கள் படும் துன்பத்தையும், உயர்சாதியினர் அவர்களுக்குத் தருகின்ற தொல்லையினையும் கடந்த நூற்றாண்டில் கவிதையாகப் பாடியவன் ஷெல்லி.

விமானம் தரையிறங்கும்போது ஷேக்ஸ்பியர், கீட்ஸ், ஷெல்லி போன்ற கவிஞர்கள் பிறந்த இந்த மண்ணை மிதிக்கப்போகிறோம் என்ற மகிழ்ச்சி உள்ளத்தில் மீண்டும் மீண்டும் துள்ளிக்குதித்து விளையாடியது. பனி மூடியிருந்த இலண்டன் நகரத்தில் எங்கள் விமானம் இறங்கியது. பாதுகாப்புத் தொடர்பாக மேற்கொள்ள வேண்டிய பணிகளையெல்லாம் முடித்துக்கொண்டு விமானத் தளத்தின் வரவேற்பறையில் எனது நண்பருக்காகக் காத்திருந்தேன். ஜப்பானில் இருந்து புறப்பட்டு கொரியா வழியாக இலண்டனுக்கு வந்து என்னைச் சந்திப்பதற்குத் திட்டமிட்டிருந்த அந்த ஜப்பானிய நண்பர் நான் சென்று சேர்ந்த ஒரு மணி நேரத்திற்குள் அங்கு வந்து சேர்ந்தார். நீண்ட நெடுங்காலமாகத் தொடர்ந்து சென்னையில் சந்தித்துக்கொள்ளும் நாங்கள் அயல்நாட்டுத் தலைநகரமான இலண்டனில் முதல் முறையாகச் சந்தித்தது சற்று வித்தியாசமான அனுபவமாகவே இருந்தது. டாக்டர் ஷு ஹிகோசகா வந்து சேர்ந்ததும் மீண்டும் ஒரு மகிழ்ச்சியான செய்தி எங்களுக்காகக் காத்திருந்தது.

## 18. இலண்டனில் நாங்கள்

ஜப்பானிலுள்ள சமயப் பெரியோர்களுள் ஒருவராகத் திகழ்பவர் டாக்டர் ஜியுன் (Juin) என்பவர். பௌத்தம் தழுவிய மியோஸான் (Myohozan)என்ற சமயப்பிரிவினைத் தோற்று வித்தவராகவும் அதன் தலைவராகவும் அறிஞர் ஜியுன் திகழ்கின்றார். அதோடு உலக அமைதி, பண்பாடு ஆகியவற்றைப் பேணி வளர்க்கும் ஒரு சர்வதேச அமைப்பை International Cultural and Peace Promotional Foundation என்ற பெயரில் தோற்றுவித்து அதன் தலைவராக இருந்து அதனை அவர் நெறிப்படுத்தி வருகின்றார். பல ஆண்டுகளுக்கு முன்பு இந்த அமைப்பின் சார்பாக ஒரு பெரிய மாநாட்டினை நடத்திய இப்பெரியவர் அம்மாநாட்டில் பங்குகொள்ள ஹிகோசகா தம்பதியினரை அமெரிக்காவுக்கு அழைத்திருந்தார். இவரிடம் தெய்வீகத்தன்மை நிரம்பிய பல அற்புத ஆற்றல்கள் இருப்பதாக ஜப்பானிய மக்கள் நம்பி வருகின்றனர். இவரது தொண்டர்கள் உலக நாடெங்கிலும் உள்ளனர். சிறந்த சமயப் பெரியவராகக் கருதப்படும் டாக்டர் ஜியுன் அவர்களை இலண்டனிலுள்ள பி.பி.சி. தொலைக்காட்சி நிறுவனம் சிறப்புப் பேட்டி காண்பதற்காக அழைத்திருந்தது. டாக்டர் ஜியுன் அவர்கள் தம்மைச் சார்ந்துள்ள தொண்டர்களோடு இலண்டனுக்கு வந்திருப்பதாக டாக்டர் ஷு ஹிகோசகா என்னிடம் குறிப்பிட்டார்.

நானும் டாக்டர் ஷு ஹிகோசகாவும் யுனெஸ்கோ வல்லுநர்குழு கூட்டத்தில் கலந்துகொள்ள வார்சா செல்வதை

அறிந்து மிக்க மகிழ்ச்சியடைந்த டாக்டர் ஜியுன் அவர்கள் நான் இலண்டன் வந்து சேர்ந்ததும் தன்னோடு ஒருநாள் தங்கியிருக்குமாறு டாக்டர் ஷு ஹிகோசகா மூலம் வேண்டுகோள் விடுத்திருந்தார். டாக்டர் ஹிகோசகா இலண்டன் விமான நிலையத்தில் இதை என்னிடம் கூறியதும் நான் மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். இதனை எனது வாழ்வில் கிடைத்த நற்பேறுகளுள் ஒன்றாகவே நான் கருதி மகிழ்ச்சியடைந்தேன். இலண்டனிலுள்ள மிகப்பெரிய நட்சத்திர ஹோட்டல் ஒன்றில் டாக்டர் ஜியுனும் அவரது தொண்டர்களும் தங்கியிருந்தனர். மிகுந்த கலை வேலைப்பாடுகளோடு கூடிய பழமை வாய்ந்த Park Bernard என்ற அந்த ஓட்டல் இலண்டனில் மிகவும் புகழ் வாய்ந்தது. 19 ஆம் நூற்றாண்டில் மிகச் சிறப்பு பெற்ற கவிஞராக விளங்கிய சாமுவேல் டெய்லர் காலரிட்ஜ் போன்றவர்கள் இந்த ஓட்டல் இருந்த இடத்தில் அப்போதிருந்த ஒரு விடுதியில் தங்கியிருந்து ஆங்கில இலக்கியம் தொடர்பான சர்ச்சைகளில் ஈடுபட்டனர் என்று கேள்விப்பட்டேன். காலரிட்ஜ் தங்கியிருந்த அந்த இடத்தில் தங்குவதை மிகப்பெரிய பேறாகவே நான் கருதினேன். அந்த ஓட்டலில் ஜியுன் அவர்கள் எனக்கும், நண்பர் டாக்டர் ஷு ஹிகோசகாவிற்கும் தனித்தனியாக வசதியான அறைகளுக்கு ஏற்பாடு செய்திருந்தார்.

விமான நிலையத்திலிருந்து நீண்ட தூரத்திலிருந்த பார்க் பெர்னார்ட் ஓட்டலுக்கு நானும் நண்பருமாகச் சென்றோம். டாக்டர் ஜியுன் அவர்கள் எங்களை வரவேற்றார். கரியநிற அங்கியணிந்து, நீண்ட தாடியுடன் காணப்பட்ட அந்த ஜப்பானியரின் கண்களில் அமைதியும் அறிவும் ஒருங்கே ஒளிவிடுவதைக்கண்டேன். அவரைச் சுற்றிலும் கரிய அங்கி அணிந்த பல ஜப்பானிய இளந்துறவிகள் நின்றுகொண்டிருந்தனர். நாங்கள் அந்த ஓட்டலில் அமர்ந்திருந்து மிக விரிவாக இந்தியக் கலாச்சாரம், கலை, இலக்கியம், சமயங்கள், மொழிகள் ஆகியன பற்றிக் கலந்துரையாடினோம். எங்களது ஆராய்ச்சி முயற்சிகளை மனமார வாழ்த்திய டாக்டர் ஜியுன் அவர்கள் உலகச்

சமயங்களுக்கிடையில் சமயப் பொதுமை உணர்வு ஏற்படுத்துவதற்காகத் தான் பாடுபடுவதை விளக்கியுரைத்தார். சமயத் தத்துவங்களில் ஆழ்ந்த புலமை பெற்ற டாக்டர் ஜியுன் அவர்கள் சிறந்த ஓவியராகவும் கலை ரசிகராகவும் திகழ்ந்தது என்னை நெகிழ்ச்சியடையச் செய்தது. தமிழகப் பண்பாட்டுக் கலைச் சிறப்புக்கள் பற்றி நான் பேசியவற்றையெல்லாம் மிகக்கூர்மையாகக் கவனித்துக் கொண்டிருந்த அவர் இலங்கையில் அனைத்துச் சமயங்களையும் ஆய்வு செய்வதற்காக ஒரு பல்கலைக் கழகத்தைத் தோற்றுவிக்கும் முயற்சியில் தான் ஈடுபட்டிருப்பதாகக் குறிப்பிட்டார். அவரது திட்டங்களை நாங்கள் மனமுவந்து பாராட்டினோம். எனது வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு விரைவில் இந்தியாவுக்கு வந்து ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் பணிகளையெல்லாம் பார்வையிட அவர் இசைவு தந்தது நெஞ்சுக்கு நிறைவளித்தது.

டாக்டர் ஜியுன் அவர்களின் நட்பு நிறுவனத்திற்குப் பலநிலைகளில் துணைபுரியும் என்று நாங்கள் நம்பினோம். அவரைச் சந்தித்ததன் மூலம் எங்களது இலண்டன் பயணம் மிகவும் பயனுடையதாக அமைந்தது என்று நான் உணர்ந்தேன். அடுத்தநாள் காலையில் நாங்கள் பிரிட்டிஷ் ஏர்வேஸ் மூலமாக வார்சா செல்லத் திட்டமிட்டிருந்தோம். இலண்டனுக்கு நான் வருவதை அறிந்து பல நண்பர்களும் அமைப்புகளும் என்னைச் சந்திக்க விரும்புவதாகக் கடிதங்கள் அனுப்பியிருந்தனர். வார்சாவில் நடைபெறும் வல்லுநர்குழுக் கூட்டம் முடிந்து மீண்டும் இலண்டன் வந்து அவர்களைச் சந்திப்பதாகத் தொலை எழுது கருவி மூலம் அவர்களுக்குத் தெரிவித்தேன். எடின்பரோ பல்கலைக்கழகத்தின் மொழியியல் பேராசிரியராகப் பணிபுரியும் டாக்டர் ஆஷர் அவர்கள் என்னையும் ஜப்பானிய நண்பரையும் தன்னுடைய பல்கலைக்கழகத்திற்கு வருமாறு கடிதம் எழுதியிருந்தார். அவர் வாழும் ஸ்காட்லாந்து பகுதி இலண்டனிலிருந்து 400 மைல்களுக்கு அப்பால் இருப்பதால் அவரைச் சந்திப்பது கடினம் என்று நான் எண்ணினேன்.

எனினும், வார்சாவுக்குச் சென்று மீண்டும் இலண்டன் வரும்பொழுது டாக்டர் ஜான்மார் போன்ற நண்பர்களை அவசியம் சந்திக்கவேண்டுமென்று திட்டமிட்டிருந்தேன். இலண்டனிலுள்ள ஆசியா (Asia) என்ற அமைப்பின் சார்பில் திரு. கணேசன் அவர்கள் எங்களை ஒரு கருத்தரங்கிற்கு அழைத்திருந்தார். எனவே அன்றிரவு தொலைபேசியில் டாக்டர் கணேசன், டாக்டர் ஜான்மார் ஆகியோரோடு தொடர்புகொண்டு செப்டம்பர் 16 ஆம் நாள் அவர்களைச் சந்திப்பதாகக் கூறினேன். நான் இலண்டனுக்கு வந்திருப்பது இலண்டனில் வாழும் எனது நண்பர்களுக்கு மிக்க மகிழ்ச்சியைத் தந்தது. சந்திக்கமுடியாது என்று கருதியவர்களோடு அன்றிரவு நான் தொலைபேசியில் பேசினேன்.

அடுத்தநாள் காலை டாக்டர் ஜியுன் அவர்களிடமும், அவர்களுடைய தொண்டர்களிடமும் விடைபெற்று, நாங்கள் வார்சா நோக்கிய பயணத்திற்குத் தயாரானோம். இலண்டனை விட்டு எங்கள் விமானம் வார்சா நோக்கிப் பறந்தது. மிகுந்த வெப்பமுள்ள நாடான இந்தியாவிலிருந்து மிகக் குளிர்ந்த நாடான போலந்திற்குப் பயணம் செய்வது ஒரு மகிழ்ச்சியான அனுபவமாகவே அமைந்தது. வார்சாவில் இந்தியவியல் ஆய்வில் ஈடுபட்டுள்ள பல நண்பர்கள் எனக்கு உண்டு. அவர்களில் ஒரு சிலரைச் சந்திக்கவேண்டுமென்று நாங்கள் முடிவு செய்தோம். நாங்கள் வார்சா வந்ததும் டாக்டர் எலிசபெத்தாவின் கணவர் எங்களை விமான நிலையத்தில் வரவேற்றார்.

## 19. வார்சாவில் நாங்கள்

டாக்டர் எலிசபெத்தா தம்பதியினர் அவர்களோடு குறைந்தபட்சம் இரண்டு நாட்களாவது நாங்கள் தங்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். டாக்டர் எலிசபெத்தா தம்பதியினர் நண்பர் ஷு ஹிகோசகாவிற்கு மிகவும் நெருங்கிய நண்பர்கள். டாக்டர் எலிசபெத்தா அவர்கள் இந்தியாவிலுள்ள சாந்தி நிகேதன் பல்கலைக்கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றவர். வங்காள மொழி அறிஞரான இவர் போலந்திலுள்ள வார்சா பல்கலைக்கழகத்தில் வங்காளமொழிப் பேராசிரியராகத் திகழ்கின்றார். இராமாயணத்தைப் போலிஷ் மொழியில் மொழிபெயர்த்து வெளியிட்டுப் புகழ்பெற்ற இவர் சில காலங்களுக்கு முன்னர் வங்காள மொழியில் உள்ள நாடோடிக் கதைகள் பற்றிய அருமையான புத்தகத்தைப் போலிஷ் மொழியில் மொழிபெயர்த்திருந்தார். இவரது கணவர் போலந்து நாட்டின் தலைசிறந்த கலைஞராகத் திகழ்கின்றார். ஆழ்ந்த கருத்துக்களைக் குறியீடுகள் வாயிலாக உணர்த்தும் இவரது ஓவியங்களும் பதுமைகளும் இந்த நாட்டில் மிகவும் புகழ்பெற்றவை. நானும் நண்பர் ஹிகோசகாவும் எலிசபெத்தா தம்பதியினரோடு இரு நாட்கள் தங்குவதாக முடிவு செய்தோம். டாக்டர் எலிசபெத்தாவின் கணவரோடு, யுனெஸ்கோ அதிகாரிகளும் எங்களை வரவேற்க வார்சா விமான நிலையத்திற்கு வந்திருந்தனர். டாக்டர் எலிசபெத்தா அவர்களின் காரில் அவர்களின் இல்லம் நோக்கி நாங்கள் சென்றோம்.

போலந்து நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் அழகுத்தெய்வம் கொலுவீற்றிருப்பதை நாங்கள் காணமுடிந்தது. வளைகுடாப் பகுதியில் வறட்சியைக்காட்டி நின்ற இயற்கையன்னை தன் முழு வனப்பைப் போலந்து நாட்டில் வெளிப்படுத்திநிற்பதாக நான் நினைத்தேன். அந்த நாட்டின் எந்தப்பகுதியிலும் வறட்சியை நாங்கள் சந்திக்க முடியவில்லை. நோக்குமிடம் எங்கும் பச்சைப்பசேலெனக் கொடிகளும், வானளாவி உயர்ந்த பைன் போன்ற மரங்களும் நீக்கமற நிறைந்திருந்தன. விண்ணைத்தொடும் அளவிற்குப் பச்சைப்பசேலென வளர்ந்திருந்த மரங்களில் மாணிக்கப்பறவைகள் அமைதியாக அமர்ந்து கீதம் இசைத்தன. இந்த நாட்டில் இயற்கையன்னை அமைதியாக அறிதுயில் கொள்வது போன்ற எண்ணம் ஏற்பட்டது. எங்கு நோக்கினும் ஓர் அமைதி தவழ்வதைக் காணமுடிந்தது. தூங்கும் அழகு (Sleeping Beauty) என்று கூறும் சொற்றொடர் அந்த நாட்டிற்கே மிகவும் பொருந்தும் எனலாம். பார்க்கும் இடங்களிலெல்லாம் பச்சை நிறமாகக் காட்சியளித்த அந்த நாட்டில் வண்ண வண்ண மலர்கள் பூத்துக்குலுங்கிப் பார்ப்போரின் கண்களையும் உள்ளத்தையும் கவர்ந்து நின்றன. வண்ண வண்ண ரோஜாப்பூக்களும், இன்று புதிதாகப் பிறந்தோம் என்று கூறி நிற்கின்ற பன்னிறடேலியா மலர்களும் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்ந்தன. அடுத்தடுத்துக் காட்சி தந்த நீர் நிலைகளிலெல்லாம் வெள்ளைநிற அன்னப்பறவைகள் மிதந்துகொண்டே நடனம் பயின்றன. அமைதி தவழும் இந்த நாட்டு மக்களின் வாழ்க்கைமுறையிலும் ஒரு பேரமைதி நிலவுவதை எங்களால் கவனிக்க முடிந்தது. இந்நிலையில் இலண்டன் மாநகரத்துக்கு முற்றிலும் மாறுபட்ட, மன அமைதியைத் தரும் அருமையான சூழலை போலந்து நாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் நாங்கள் தரிசித்தோம்.

வானளாவ உயர்ந்த வார்சா நகரத்தின் வெள்ளைநிறக் கட்டிடங்கள், அந்த நாட்டு மக்களின் வெள்ளை உள்ளங்களின் பிரதிபலிப்பாகவே அமைந்தன. ஆண்களும் பெண்களும்

கண்ணுக்கு விருந்தளிக்கும் வகையில் பட்ட இடங்களிலெல்லாம் தட்டுப்பட்டு நின்றனர். போலந்து நாட்டு மக்களின் கலையிலும் கைவண்ணத்திலும் இசையிலும் சிற்பத்திலும்ஓவியத்திலும் அமைதி ததும்பும் அழகு வெளிப்பட்டு நின்றது. இயற்கையன்னை அந்த மக்களுக்கு எல்லாவற்றையும் தாராளமாகவே வழங்கியுள்ளாள். சாலைகளின் இருமருங்கும் பலவகையான கனிகள் கனிந்து கண்ணுக்கு விருந்தளிக்கும் காட்சியை அந்நாட்டில் எங்கும் காணலாம். இத்தகைய எல்லா வளங்களுக்கு மத்தியிலும் அந்த மக்களின் வாழ்க்கைத்தரம் ஜப்பானியர்களைப் போன்றோ, அமெரிக்கர்களைப் போன்றோ, பிற ஒருசில ஐரோப்பியர்களைப் போன்றோ அவ்வளவு வளமாக அமையவில்லை என்பது புதிராகவே அமைந்தது. வாழ்க்கை வசதிகள் பிற ஐரோப்பிய நாடுகளோடு ஒப்பிடும்போது, அவ்வளவு வளம் தருவதாகப் போலந்தில் அமையவில்லை என்று குறிப்பிடலாம்.

போலந்து நாட்டில் பொருளாதார நிரந்தரம் இன்மை (Economic Instability)இருப்பதை உணர முடிந்தது. அதிகமான பணவீக்கம் இந்நாட்டு மக்களின் வாழ்வினைப் பெருமளவிற்குப் பாதித்திருந்தது. பொருட்களை வாங்கும் சக்திகூட மக்களிடம் குறைவாக இருந்தது. எல்லா வசதியும் பெற்ற இந்த நாட்டில் இப்படிப்பட்ட சிக்கல் ஏன் தொடர்கிறது என்று நானும், நண்பர்களும் பலமுறை சிந்தித்தோம்.

அமைதியான வாழ்க்கையை விரும்புகின்ற அந்த நாட்டு மக்கள் பலம்வாய்ந்த பிற நாடுகளின் ஆதிக்கவெறிக்கு அவ்வப்போது பலியாகிக்கொண்டே இருந்தனர். போலந்தின் மீது ஜெர்மனி நடத்திய பல்வேறு தாக்குதல்களின்போது போலந்து நாட்டின் ஏராளமான கலைக்கருவூலங்கள் அழிந்து ஒழிந்தன. பின்னர் உருஷ்ய நாட்டின் ஆதிக்கத்திற்கு அடிமையாகி, போலந்து ஒரு கம்யூனிஸ்ட் நாடாகவே திகழ்ந்தது. சில ஆண்டுகளுக்கு முன்னர் தான் உருஷ்யாவின் பிடியிலிருந்து விடுபட்டு இம்மக்கள்

நிம்மதிப்பெருமூச்சினை விடத்தொடங்கினர். கம்யூனிஸ்ட் ஆட்சி ஒரு கெட்ட கனவாகவே இந்நாட்டு மக்களின் அடிமனத்தில் பதிந்துள்ளது. கம்யூனிஸ்ட் ஆட்சியை வரவேற்றோ, பாராட்டியோ பேசிய போலந்து நாட்டு மனிதர் ஒருவரைக்கூட நாங்கள் காணவில்லை. எப்படி கம்யூனிஸ்ட் அமைப்பை ஏற்றுக்கொண்டீர்கள் என்று கேட்டால், அது வலுக்கட்டாயமாக நாங்கள் தூங்கிக்கிடக்கும்போது எங்கள் மீது திணிக்கப்பட்டது என்று அவர்களில் பெரும்பாலோர் கூறுகின்றனர்.

இயேசுவின் தோழர்களான இம்மக்கள் கம்யூனிஸ்ட் ஆட்சியிலிருந்து விடுபட்ட போதிலும், அதை நினைத்து நினைத்து இன்றும் அஞ்சுகின்றனர். போலந்து நாட்டு மக்களின் அடிமனத்தில் இறைப்பற்று ஆழமாகப் பதிந்துகிடப்பதைக் காண முடிந்தது. இத்தகைய மனத்தைப் பெற்ற மக்களால், மதத்தைப் புறக்கணிக்கும் பொதுவுடைமைக் கோட்பாட்டை ஏற்றுக்கொள்ள முடியாது என்பது தெளிவே. இம்மக்களில் 98 விழுக்காட்டினர் கத்தோலிக்கக் கிறிஸ்தவத்தைச் சார்ந்தவர்கள். 1 விழுக்காட்டினர் மட்டுமே புராட்டஸ்டான்ட் பிரிவைச் சார்ந்தவர்கள். சிறுபான்மை இஸ்லாமியர்களும் இங்கு உள்ளனர். மத நிறுவனங்களை எதிர்த்த லுத்தரன் பிரிவினரான புராட்டஸ்டான்ட் பிரிவினரை இம்மக்கள் பொதுவாகச் சமயத்துரோகிகளாகவே கருதுகின்றனர். ஜனநாயக ஆட்சி மலர்ந்துள்ள போலந்து நாட்டின் மக்கள் எதிர்காலத்தை ஆர்வத்தோடு, புது நம்பிக்கையோடு எதிர்பார்க்கின்றனர். ஒளிமயமான எதிர்காலம் அவர்கள் வாழ்வில் தோன்றக்கூடிய சாத்தியக்கூறுகளும் அரும்பிக் கொண்டே வருகின்றன.

போலந்து நாட்டின் பழைய நகரம் (Old city) என்று அழைக்கப்படும் பகுதி எங்களை அதிகம் கவர்ந்தது. சுத்தமான வீதிகளும், மிகத்தொன்மையான மரபில் அமைந்த கட்டிடங்களும் இப்பகுதிக்குச் செல்வோரை வியக்க வைக்கின்றன. போலந்தின் பழங்கால நாகரிகத்தின் இருப்பிடமாக இப்பகுதி திகழ்கின்றது.

இந்நகரின் வீதிகள் அனைத்தும் கருங்கற்களால் அமைக்கப் பட்டவை. கருங்கற்களைச் செங்கற்கள் போன்று நீள்சதுர வடிவில் செதுக்கி இப்பகுதியின் வீதிகளை அமைத்துள்ளனர். இந்த நகரின் மூலை முடுக்குகளிலெல்லாம் இசைக்குழுவினர் இரவும் பகலும் நின்று கொண்டு அருமையான போலந்து நாட்டு மரபில் அமைந்த இசையை இசைத்துக் கொண்டேயிருப்பது அங்குச் செல்வோரின் காதுகளைக் குளிரவைக்கும். வார்சா நகரத்தின் இந்தப் பழமையான பகுதி முழுவதும் ஜெர்மனியர்களால் இடித்துத் தரைமட்டம் ஆக்கப்பட, அதை முன்னர் இருந்தபடியே எந்த மாற்றமும் இல்லாமல் உருஷ்ய அரசு புதுப்பித்துள்ளது.

வார்சாவின் எல்லாப் பகுதிகளிலும் உருஷ்ய நாட்டுக் கலைப்பண்பாட்டின் தாக்கத்தை நாம் காணமுடியும். உருஷ்ய நாட்டின் கலாச்சாரம், போலந்து மக்களின் கலாச்சாரத்தோடு இணைந்து சங்கமமாவதைப் பல இடங்களிலும் நாங்கள் காணமுடிந்தது. வார்சா நகரத்தின் பழைய அரண்மனைப்பகுதியில் கிரேக்க நாடக அரங்கை முன்மாதிரியாகக் கொண்டு அமைக்கப்பட்ட திறந்தவெளி நாடக அரங்கு பார்வையாளர்களின் கண்களையும் கருத்தினையும் ஒருங்கே கவர்ந்து நிற்கின்றது.

டாக்டர் எலிசபெத்தா குடும்பத்தினரோடு நாங்கள் தங்கிய இருநாட்களில் போலந்து மக்களின் வாழ்வியல் பற்றிய ஏராளமான செய்திகளை அறிந்து கொள்ள முடிந்தது. இந்த நாட்டு மக்களுக்கு இந்தியப் பண்பாட்டின் மீது, குறிப்பாகத் தமிழ்ப் பண்பாட்டின் மீது அதிக ஆர்வம் இருப்பதை நான் புரிந்துகொள்ள முடிந்தது. போலிஷ் மொழியில் டாக்டர் எலிசபெத்தாவால் எழுதப்பட்ட இராமாயண நூலும், வங்காள நாட்டுப்புறக்கதைகள் பற்றிய நூலும்10,000 பிரதிகளுக்குமேல் விரைவில் விற்பனையான செய்தி என்னை வியக்க வைத்தது.பொருளாதாரத்தில் நலிவு பெற்றிருந்த போதிலும் நூல்கள் வாங்கிப்படிக்கும் பழக்கம் இந்நாட்டு மக்களுக்கு அதிகமாக இருந்ததை உணர்ந்தேன்.

இந்தியாவிலிருந்து ஆலமரக்கன்று ஒன்றை எடுத்துச்சென்று 15 ஆண்டுகளாக டாக்டர் எலிசபெத்தாவின் கணவர் தனது வரவேற்பறையில் வைத்து அதனை வளர்த்து வருகிறார். கிளையும் விழுதும் பரப்பி வளரும் ஆலமரம் இந்தியாவின் குறியீடாக அவருக்குக் காட்சியளிக்கின்றது.

போலந்தின் மிகத் தொன்மையான பல்கலைக்கழகமாக வார்சா பல்கலைக்கழகம் திகழ்கின்றது. கீழ்த்திசை மொழி, இலக்கியப் பண்பாட்டு ஆய்விற்காக ஓர் உயர்மட்ட ஆய்வு நிறுவனம் (Oriental Research) இப் பல்கலைக்கழகத்தில் அமைக்கப்பட்டுள்ளது. இந்த ஆய்வு நிறுவனத்தில் சமஸ்கிருதம், வங்காளம், தமிழ் ஆகிய மொழிகளை ஆய்வதற்கும் கற்றுத் தருவதற்கும் அறிஞர்கள் உள்ளனர். தற்போது தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக்கழகத்தில் பணியாற்றும் டாக்டர் இராமசுந்தரம் அவர்கள் வார்சா பல்கலைக்கழகத்தின் தமிழ்ப் பேராசிரியராக இருந்து போலந்து மக்களிடையே தமிழ் உணர்வை மிகச்சிறப்பாக வளரவிட்டிருந்தார். நண்பர் டாக்டர் இராமசுந்தரம் அவர்களின் வகுப்புகளையும் ஆய்வுத்திறனையும் போலந்து நாட்டுத் தமிழ் அறிஞர்கள் அன்போடும் மரியாதையோடும் நினைவு கூர்கின்றனர். புகழ்பெற்ற தமிழ் எழுத்தாளர் திரு. இந்திரா பார்த்தசாரதி அவர்கள் இப்பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக இருந்து, டாக்டர் இராமசுந்தரம் விட்டுச் சென்ற பணியை மிகச்சிறப்பாகத் தொடர்ந்துள்ளார். அதன் பின்னர் நண்பர் டாக்டர் தி.சு. நடராசன் அவர்கள் இங்கு சிலகாலம் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியுள்ளார். தற்போது கேரளப் பல்கலைக்கழகத்தின் தமிழ்ப்பேராசிரியர் டாக்டர் க. சுப்பிரமணியம் அவர்கள் இங்கு உள்ளவர்களுக்குத் தமிழ் கற்றுத்தருகின்றார்.

வார்சாவில் நான் தங்கியிருந்த நாட்களில் பிறநாடுகளில், குறிப்பாக ஐரோப்பிய நாடுகளில், தமிழ் ஆய்வு மேற்கொள்ளுவதற்குரிய வாய்ப்புகள் பற்றிப் பிறநாட்டு

நண்பர்களோடு விரிவாகக் கலந்துரையாடும் வாய்ப்பு கிடைத்தது. தமிழ் மொழியைப் பற்றியோ, தமிழர்களைப் பற்றியோ போதுமான அளவுக்குப் பிறநாட்டு அறிஞர்களுக்கோ, பொதுமக்களுக்கோ தெரியவில்லை. தமிழர்கள் என்றால் இலங்கைத் தமிழர்களை மட்டுமே பரவலாகப் பிற நாட்டினருக்குத் தெரிந்திருந்தது. அதுவும் இலங்கையில் ஏற்பட்ட இனக்கலவரமே இலங்கைத் தமிழர்கள் பற்றிய செய்திகளை உலக நாடுகளின் மத்தியில் அறியச் செய்திருந்தது. டாக்டர் எலிசபெத்தா அவர்களின் வீட்டில் நாங்கள் தங்கியிருந்தபோது எங்களைப் பார்ப்பதற்காக வார்சா பல்கலைக்கழகத்தின் தத்துவத்துறையில் பணிபுரியும் டாக்டர் ஹெர்மன் என்னும் பேராசிரியர் வந்திருந்தார். நீண்ட நெடிய தோற்றம் கொண்ட போலந்து நாட்டு அறிஞரான டாக்டர் ஹெர்மனுக்குத் தமிழ்மொழியின் மீதும், தமிழ் இலக்கியங்களின் மீதும் அளவுகடந்த பற்று இருந்தது. வார்சா பல்கலைக்கழகத்தில் பணிபுரியும் தமிழ் அறிந்த போலந்து நாட்டு அறிஞர்களுள் டாக்டர் ஹெர்மன் மிகவும் குறிப்பிடத்தகுந்தவர். கத்தோலிக்கக் கிறிஸ்தவரான டாக்டர் ஹெர்மனுக்குச் சைவ சமயத்தின் இறைநெறி இலக்கியமான திருவாசகத்தின் மீது இருந்த ஆர்வம் என்னை வியக்கவைத்தது. சென்னைப்பல்கலைக்கழகத்திற்கு வந்து திருவாசகம் பற்றிய ஆராய்ச்சியில் அவர் சில ஆண்டுகளுக்கு முன்னர் ஈடுபட்டிருந்தது எனக்குத் தெரியும். தமிழ் நாட்டில் ஆராய்ச்சி செய்யும்போது ஓரிரு முறை ஆசியவியல் ஆய்வு நிறுவனத்துக்கு வந்து என்னைப் பார்த்து என்னுடன் அவர் கலந்துரையாடிச் சென்றுள்ளார்.

போலந்து நாட்டுத் தமிழ் அறிஞரான டாக்டா ஹெர்மனும், ஜப்பானிய நாட்டுத் தமிழ் அறிஞரான டாக்டர் ஹிகோசகாவும், போலந்து நாட்டு வங்காள மொழி அறிஞரான டாக்டர் எலிசபெத்தாவும், நானும் இணைந்து தமிழ் இலக்கியங்கள் பற்றி மிக நீண்டநேரம் உரையாடிக்கொண்டிருந்தோம். வார்சா பல்கலைக்கழகத்தில் தமிழ் ஆய்வுக்கு இன்னும் இடந்தரவேண்டும் என்று குறிப்பிட்ட டாக்டர் ஹெர்மன் பிற ஐரோப்பிய

மக்களைவிட போலந்து நாட்டு மக்களுக்குத் தமிழ்ப் பண்பாட்டிலும் தமிழ் மொழியிலும் இலக்கியத்திலும் ஆர்வம் அதிகம் என்று குறிப்பிட்டார். டாக்டர் ஹெர்மன் அவர்களோடு உரையாடிக்கொண்டிருக்கும்போது திருவாசகத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்து நெகிழ்ந்துபோன டாக்டர் ஜி.யு. போப் அவர்களின் நினைவு எனக்கு வந்தது. போலந்து நாட்டின் ஜி.யு. போப்பாகவே டாக்டர் ஹெர்மன் எனக்குக் காட்சியளித்தார்.

தமிழ் மொழியில் இல்லாத அறிவியல், அறவியல் சிந்தனைகள் பிற எந்த மொழியிலும் இருக்கமுடியாது என்பதை டாக்டர் ஹெர்மன் ஆணித்தரமாகக் குறிப்பிட்ட போது இந்த போலந்து நாட்டு அறிஞரின் தமிழ்ப் பற்றும் தமிழ் மொழியுணர்வும் என்னை வியக்கவைத்தன. தமிழனுக்கு இல்லாத மொழியுணர்வும் தமிழ் மொழிப் பற்றும் இந்த நாட்டு அறிஞர்களுக்கு இருப்பது என்னைப் பிரமிக்க வைத்தது.

தமிழ் இலக்கியத்தின் சில பகுதிகளை நகைச்சுவை உணர்வு ததும்ப நாங்கள் விவாதித்துக்கொண்டேயிருந்தோம். அதற்கு இணையான கருத்துக்கள் வங்காள மொழியிலும் போலிஷ் மொழியிலும் இருப்பதை டாக்டர் எலிசபெத்தாவும் டாக்டர் ஹெர்மனும் கூறிக்கொண்டே வந்தார்கள். டாக்டர் எலிச பெத்தாவும் டாக்டர் ஹெர்மனும் என்னையும் நண்பர் ஷூ ஹிகோசகாவையும் ஒத்த சமவயதினர். போலந்து நாட்டு மனிதர்களான எங்களுக்கு மட்டும் தலையில் நரை தோன்ற சமவயதினரான உங்கள் இருவருக்கும் அது அதிகம் தோன்றாததன் மர்மம் என்ன என்று டாக்டர் எலிசபெத்தா சிரித்துக்கொண்டே கேட்டார். ஜப்பானிய நண்பர் இதற்குப் பதில்கூற முடியாமல் தயங்கினார். உடனே புறநானூற்றில் இடம்பெறும் 'யாண்டு பலவாகியும்' என்று தொடங்கும் பிசிராந்தையாரின் பாடலைக் கூறி அதற்குரிய விளக்கத்தை ஆங்கிலத்தில் விரிவாக எடுத்து நான் பேசினேன். இது டாக்டர் எலிசபெத்தாவையும் டாக்டர் ஹெர்மனையும் மிகுந்த வியப்பில் ஆழ்த்தியது. 2000

ஆண்டுகளுக்கு முன்பு பழந்தமிழ்க்கவிஞர் பிசிராந்தையாரைப் பார்த்து ஏன் உங்களுக்கு வயதாகியும் நரை தோன்றவில்லை என்று கேட்டபோது, பண்பான மனைவி, அன்பான குழந்தைகள், நல்ல நண்பர்கள், நல்ல சுற்றம், நல்ல மன்னன் என்று தன்னுடைய வாழ்க்கைச் சூழலும் சமூகச்சூழலும் அமைந்ததால் தனக்கு நரை தோன்றவில்லை என்று பிசிராந்தையார் கூறியது இந்தப் போலந்து நாட்டு அறிஞர்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. தமிழில் இல்லாத சிந்தனைகள் வேறு எந்த மொழியிலும் இல்லை என்று நான் கூறியதை நீங்கள் நிருபித்துவிட்டீர்களே என்று டாக்டர் ஹெர்மன் நகைத்துக்கூறியது இன்னும் என் நெஞ்சத்திரைகளை விட்டு அகலவில்லை.

வார்சா பல்கலைக்கழகத்தின் சமஸ்கிருதப் பேராசிரியராகத் திகழ்பவர் டாக்டர் மேயர் அவர்கள். நீண்ட நெடிய தோற்றம் கொண்ட டாக்டர் மேயர் சமஸ்கிருதத்திலுள்ள மகாயான பௌத்த நூல்களில் நல்ல புலமை பெற்றவர். மகாயான நூல்களில் ஆராய்ச்சி செய்த இந்த அறிஞர் ஜப்பானில் பல காலம் தங்கி ஆய்வு செய்து ஜப்பானிய பௌத்தமான சென் பௌத்தத்திலும் நல்ல புலமைபெற்றிருந்தார். நாங்கள் வார்சா வந்திருப்பதை அறிந்த டாக்டர் மேயர் எங்களைக் காண்பதற்கு நேரம் குறித்து டாக்டர் எலிசபெத்தாவின் வீட்டிற்கு வருகை தந்திருந்தார். பௌத்தத்தில் அதிக ஈடுபாடு கொண்ட இந்தக் கத்தோலிக்கக் கிறிஸ்தவர் கோடை விடுமுறை ஆதலால் வார்சா பல்கலைக்கழகத்தில் எங்களுக்கு விரிவுரை செய்வதற்கு வாய்ப்பு நல்க முடியவில்லையே என்று வருந்தினார். டாக்டர் மேயர் அவர்களோடு எங்களுக்கு ஏற்பட்ட நட்பு ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் வளர்ச்சிக்கும் பலநிலைகளிலும் துணை செய்தது என்பதை நன்றியோடு நினைத்துப் பார்க்கிறேன்.

தமிழ் ஓலைச்சுவடிகளைத் தேடி, அவற்றின் பாதுகாப்பிற்குரிய வழி வகைகளை நாடி நாங்கள் வார்சா வந்திருப்பது அவரை வியக்கவைத்தது. எனது முயற்சிகளுக்கு

யுனெஸ்கோ நிறுவனம் துணைக்கரம் நீட்ட வந்ததை டாக்டர் மேயர் மிகவும் பாராட்டினார். ஜெர்மனியின் துணையோடு நேப்பாளத்திலுள்ள சுவடிகள் நிழற்படம் எடுக்கப்பட்டுப் பிரதி செய்யப்படுவது பற்றிய செய்தியை அவர் என்னிடம் கூறினார். இம்முயற்சியின் பயனாக ஒரு இலட்சத்துக்கும் மேற்பட்ட சுவடிகள் ஏற்கனவே பிரதி செய்யப்பட்டுவிட்டன என்று அவர் கூறியது என்னை வியப்பில் ஆழ்த்தியது. டாக்டர் வீஸ்லர் (Weezler) போன்ற ஜெர்மானிய அறிஞர்கள் இத்துறையில் ஈடுபட்டுப் பணிபுரிவது பற்றி விளக்கிய டாக்டர் மேயர் சுவடிப் பாதுகாப்புப் பணிகள் உலகில் எங்கெங்கெல்லாம் நடக்கின்றன என்பது பற்றிய பல அரிய செய்திகளை எனக்குக் கொடுத்துதவினார். அதோடு, இலண்டனிலுள்ள மிகப் பெரிய நிறுவனமான வெல்கம் ஆராய்ச்சி மையத்தில் தென்கிழக்கு ஆசியச் சுவடிகளின் காப்பாளராகத் திகழும் போலந்து நாட்டு அறிஞர் டாக்டர் டாமினிக் என்பவரையும் எனக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

வார்சா நகரின் முக்கியமான பகுதிகளுக்கு எல்லாம் எங்களைத் தமது காரில் டாக்டர் மேயர் அழைத்துச்சென்றார். உள்ளத்தைக் கவரும் வார்சா நகரத்தின் அழகையெல்லாம் நாங்கள் அள்ளிப்பருகினோம். வரலாற்றுச்சிறப்புமிக்க வார்சாவின் அரண்மனைகள், அருங்காட்சியகங்கள் ஆகிய அனைத்தையும் டாக்டர் மேயரோடு சென்று நாங்கள் பார்வையிட்டோம். எங்களை டாக்டர் மேயர் வார்சா பல்கலைக் கழகத்துக்கு அழைத்துச்சென்றார். அங்குள்ள கீழ்த்திசை ஆராய்ச்சி நிறுவனத்தின் பல அறிஞர்களை எங்களுக்கு அறிமுகம் செய்துவைத்தார். அழகான இயற்கைச் சூழல்களின் மத்தியில் அமைதியான சூழலில் வார்சாப் பல்கலைக்கழகம் அமைந்திருந்தது. இப்பல்கலைக்கழகம் ஒரு அமைதியான கலைக்கோயிலாகவே எனக்குக் காட்சியளித்தது. இங்குத் தமிழ்மொழி பயிற்றுவிக்கப்படுவதை எண்ணியபோது தமிழனான எனக்கு மிகுந்த மகிழ்ச்சியும் பெருமிதமும் ஏற்பட்டன. அங்குள்ள தமிழ் நூல்களையும் சமஸ்கிருத நூல்களையும் டாக்டர் மேயர்

எங்களுக்குக் காட்டி மகிழ்ந்தார். அங்கு தற்போது மலையாள மொழியும் பயிற்றுவிக்கப்படுவதை அறிந்து நான் மகிழ்ச்சி அடைந்தேன். கீழ்த்திசை ஆராய்ச்சி நிறுவனத்தின் பெரும் பகுதி இந்தியவியல் ஆராய்ச்சி தொடர்பான செயல்பாடுகளுக்கே அதிக முக்கியத்துவம் தருவதை உணர முடிந்தது. போதிய நிதிவசதி இன்மையால் இந்தியவியல் தொடர்பான ஆய்வுகளை மேலும் விரிவுபடுத்த முடியவில்லை என்று டாக்டர் மேயர் கூறினார். இந்திய அரசு, தமிழக அரசு போன்றவை உதவுவதற்கு முன் வந்தால் இந்தியவியல், குறிப்பாகத் தமிழியல், பற்றிய ஆய்வுகளை மிக விரிந்த அளவிற்கு மேற்கொள்ள முடியும் என்ற தமது நிறைவேறாத ஆசையை டாக்டர் மேயர் வெளிப்படுத்தினார்.

## 20. யுனெஸ்கோ அறிஞர்களுடன் நாங்கள்

அடுத்தநாள் நாங்கள் யுனெஸ்கோவின் வல்லுநர்குழுக் கூட்டத்திற்குச் செல்லத் தயாரானோம். வார்சாவிலிருந்து 50 கிலோமீட்டருக்கு அப்பாலுள்ள டாம் போலோனி (Dom Poloni)என்ற இயற்கை எழில்மிக்க ஊரில் அந்த வல்லுநர்குழுக் கூட்டத்திற்கு யுனெஸ்கோ ஏற்பாடு செய்திருந்தது. வார்சாவிலிருந்து கூட்டத்தின் அமைப்பாளர்கள் எங்களை அந்த அழகிய பகுதிக்கு அழைத்துச் சென்றனர். இந்த 50 கிலோமீட்டர் பயணமும் ஏதோ ஒரு கனவு உலகத்தில் சஞ்சரிப்பது போன்ற உணர்வை ஏற்படுத்தியது. இந்த ஊரிலுள்ள ஓர் அரண்மனை Fort Pulstak என்ற பெயரில் அமைந்துள்ளது. இந்த அரண்மனையை ஒரு பெரிய ஐந்து நட்சத்திர ஓட்டலாக மாற்றி இருந்தனர். இந்த ஓட்டலில் தான் நாங்கள் தங்குவதற்கு வசதி செய்து தரப்பட்டது. இங்குள்ள இரண்டு பிரமாண்டமான கூடங்களில் வல்லுநர்குழு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தனர். இந்த அரண்மனை வளாகம் எங்களை மிகவும் கவர்ந்தது. இங்கு நாங்கள் சென்று சேர்ந்ததும் கூட்டத்தின் அமைப்பாளர்களில் ஒருசிலர் எங்களை வரவேற்றனர். இந்த அமைப்பாளர்களில் பலர் பிரெஞ்ச் மொழி பேசுபவர்களாகவும், சிலர் போலிஷ் மொழி பேசுபவர்களாகவும் காட்சி தந்தனர்.

1992 ஆம் ஆண்டில் யுனெஸ்கோ நிறுவனத்தின் சார்பில் பாரிஸ் நகரில் அறிஞர்கள் பலர் கூடி உலகின் பல பகுதிகளிலும்

அழிந்துகொண்டிருக்கின்ற அறிவுக் கருவூலங்களைக் காப்பதற்குரிய முயற்சிகள் பற்றிச் சிந்தித்தனர். இதன்விளைவாகத் தோன்றியதே உலகின் நினைவுச்சின்னங்கள்(Memory of the World) என்னும் ஆய்வுத்திட்டம். இந்தத் திட்டத்தை உலகளாவிய நிலையில் யுனெஸ்கோ நிறுவனம் செயல்படுத்தத் திட்டமிட்டது. அந்தத் திட்டத்தின் முதற்படியாக இந்தச் சர்வதேச வல்லுநர் குழுக் கூட்டம் அமைந்தது.

கல்வித்துறையிலும் சரி, அறிவியலிலும் சரி இந்த 20 ஆம் நூற்றாண்டில் வியக்கத்தக்க முன்னேற்றத்தினை உலகம் கண்டுள்ளது. மானிடத்தின் மகத்துவம் இந்த 20 ஆம் நூற்றாண்டில் விண்ணளவுக்குக் கோலோச்சுகிறது. எனினும், இந்த அறிவியல் கண்டுபிடிப்புகள் பெரும்பாலும் அழிவுக்குத்தான் பயன்படுத்தப்படுகின்றன என்பது வருந்தத்தக்கது. புதுமையைக் கண்டுபிடிக்கும்போது, பழமையைப்புறக்கணிக்கும் இயல்பு உலகெங்கிலும் ஏற்பட்டுள்ளது. பழமை புறக்கணிக்கப்படும்போது ஆண்டாண்டு காலமாக மனிதகுலம் ஏற்படுத்தியுள்ள சாதனைகளும், கண்டுள்ள அனுபவ உண்மைகளும் சேர்த்தே புறக்கணிக்கப்படுகின்றன என்றுதான் கொள்ள வேண்டும். பழமை பற்றிய ஆய்வும், பழமை பற்றிய அறிவும் எதிர்காலத்தைச் சிறப்பாக அமைத்துக் கொள்ள மிகவும் துணைபுரியும் என்பதை நாம் மறந்தே விடுகின்றோம். மரபுச் செல்வங்களில் கால் ஊன்றி நின்று, பழமை கண்டுள்ள அனுபவ உண்மைகளின் உச்சியில் நின்றுகொண்டு தான் நாம் புதுமையைப் படைக்கின்றோம். இவ்வாறு புதுமையைப் படைக்கும் போது பழமையைப் புறக்கணித்து அழித்துவிடுவது மனித குலத்திற்கு மிகப்பெரிய இழப்பாகவே அமைந்துவிடும்.

மனிதனின் பழமையான மரபுச் செல்வங்களை உலகின் நினைவுச்சின்னங்கள் என்று குறிப்பிடலாம். இந்த நினைவுச் சின்னங்களை மனித சமுதாயம் தொன்று தொட்டுப் பல்வேறு

வடிவங்களில் பாதுகாத்து வந்துள்ளது. சொற்களால் வடிக்கப் பட்ட நினைவுச் சின்னங்கள் இலக்கியங்களாகப் பரிணமித்தன. கல்லில் எழுதிவைத்த நினைவு அலைகளும், எண்ணக் குவியல்களும் கல்வெட்டாகக் காட்சி தந்தன. மனிதனின் நினைவுகள், அனுபவங்கள் ஆகியன அவனது படைப்புகள் அனைத்திலும் பல்வேறு வடிவங்களில் வெளிப்பட்டு நின்றன. குகை ஓவியங்களில் ஆதி மனிதனின் அனுபவங்களும், இயற்கையோடு அவன் கொண்ட முரண்பாடுகளும், ஒத்துணர்வு களும் புலப்பட்டன. பழைய கட்டிடங்கள், கோயில்கள், சிற்பக் கருவூலங்கள், சித்திரங்கள் ஆகிய அனைத்திலும் மனித சமுதாயத்தின் நினைவு அலைகள் பல்வேறு நிலைகளில் நிழலாடின.

இவற்றைப் பாதுகாப்பதற்கு என்ன முயற்சிகள் இதுவரை மனிதகுலத்தால் எடுக்கப்பட்டுள்ளன என்பதை யுனெஸ்கோ நிறுவனம் மிக ஆழமாகவே சிந்தித்தது. இவற்றைப் பாதுகாக்க வேண்டுமா? அப்படியென்றால் எப்படிப்பாதுகாப்பது? எப்படி இவற்றை இன்றைய சூழலில் பயன்படுத்துவது? எந்த அளவிற்கு இவை பாதுகாக்கப்பட வேண்டும்? இவற்றால் எதிர்காலத்துக்கு என்ன பயன்? என்பன போன்ற சிந்தனைகள் உலக அறிஞர்களின் மத்தியில் ஏற்பட்டதன் விளைவாகவே மேற்கூறிய ஆய்வுத் திட்டம் பிறப்பெடுத்தது.

உலகின் நினைவு அலைகளை ஏந்தி நிற்கும் இந்த நினைவுச் சின்னங்கள் பலவகைகளில் அழிந்துகொண்டேயிருக்கின்றன. கால வெள்ளத்தை எதிர்த்துநிற்கும் ஆற்றலின்றி இவற்றுள் பல அழிந்தன. கடலின் கொந்தளிப்பு, சீறிவீசும் புயற்காற்று, மழையின் கோரத் தாண்டவம், எரிமலையின் குமுறல் ஆகியவற்றுக்கு இரையாகி பல அழிந்தன. நெருப்பின் சீற்றத்திற்கும், பெருக்கெடுத்து ஓடிய ஆறுகளின் வெள்ளப் பெருக்கத்திற்கும் ஈடுகொடுக்க முடியாமல் பல சிதைந்து போயின. போர்களினாலும், மனிதர்களின் வெறிச் செயல்களாலும் பல

ஒழிந்து மாண்டன. மனிதகுலத்தின் பொறுப்பின்மையாலும், அக்கறையின்மையாலும் பல அழிந்துபட்டன. கல்வியறிவு மனிதனிடத்தில் மங்கிப்போனபோது அறியாமை காரணமாகப்பல இறந்தொழிய வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. சில சமயங்களில் மனிதனின் மூட நம்பிக்கைகளுக்குக்கூட இரையாகிப்பல அழிந்ததுண்டு.

இத்தகைய அழிவிலிருந்து தற்போது உயிருடன் இருக்கின்ற நினைவுச் சின்னங்களையாவது காப்பாற்றியாக வேண்டும். காப்பாற்றுவது மட்டுமின்றி அவற்றை உலக மக்கள் அனைவரும் பயன்படுத்தும் வண்ணம் உலகப் பொதுச்சொத்தாக மாற்றவேண்டும் என்பன போன்ற சிந்தனைகள் சர்வதேச அறிஞர்களிடம் கால் கொண்டன. இச்சிந்தனைகள் மேற்கூறிய ஆய்வுத்திட்டம் பிறப்பெடுப்பதற்கு அடித்தளம் அமைத்துக்கொடுத்தன.

இத்திட்டத்தின் தொடக்கமாகச் சில முயற்சிகளை யுனெஸ்கோ நிறுவனம் செக்கோஸ்லேவேகியா போன்ற சில நாடுகளில் சோதனை முயற்சியாக அறிமுகப்படுத்தி வெற்றியும் கண்டது. இந்த வெற்றியின் தொடர்ச்சியாக இத்திட்டத்தை ஓர் உலகளாவிய திட்டமாக நடைமுறைப்படுத்துவதற்கு யுனெஸ்கோ நிறுவனம் எண்ணியது. இந்தத் திட்டத்திற்குரிய அறிவுரைகளை நல்கிச் சிறப்பிப்பதற்காக இரு வேறுபட்ட வல்லுநர் குழுக்களை யுனெஸ்கோ நிறுவனம் அமைத்தது. கிழக்கு ஐரோப்பாவிலும், நடு ஐரோப்பாவிலும் இத்திட்டத்தைச் செயல்படுத்துவதற்குரிய வழிவகைகளை ஆராய்வதற்காக ஒரு வல்லுநர்குழு அமைக்கப்பட்டது. இக்குழுவின் முதற் கூட்டத்தில் ஐரோப்பிய நாடுகளைச் சார்ந்த 15 உறுப்பினர்களும், 8 பார்வையாளர்களும் இடம்பெற்றிருந்தனர்.

மேற்கூறிய திட்டத்தை உலக அளவில், உலக நாடுகளோடு இணைந்து செயல்படுத்துவதற்காக (International co-operation)

சர்வதேச வல்லுநர்குழு ஒன்றை யுனெஸ்கோ நிறுவனம் அமைத்தது. இதுவே இரண்டாவது வல்லுநர் குழுவாயிற்று. உலகெங்கிலும் இருந்து 10 வல்லுநர்களை இக்குழுவின் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுத்திருந்தனர். இதில் ஆசிய நாடுகளின் சார்பில் நானும், ஜப்பான் நாட்டின் பார்லிமென்ட் நூலகத்தலைவர் டாக்டர் அகியோயாசு என்பவரும் தேர்ந்தெடுக்கப்பட்டோம். எகிப்து, இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற பிற நாடுகளுக்கும் இக்குழுவில் பிரதிநிதித்துவம் வழங்கப் பட்டது.

செப்டம்பர் மாதம் 12 ஆம் நாள் தொடங்கிய இக்கூட்டத்தில் யுனெஸ்கோ நிறுவனத்தின் பொது இயக்குநர் தொடக்க உரையாற்றினார். அவரது உரையில் உலகின் நினைவுச் சின்னங்களைக் காக்கவேண்டிய சமுதாயப் பொறுப்பு மிகச்சிறப்பாக வற்புறுத்தப்பட்டது. அதைத் தொடர்ந்து நடு ஐரோப்பா, கிழக்கு ஐரோப்பா ஆகிய பகுதிகளுக்கு என்று தனியாக அமைக்கப்பட்ட குழுவும், சர்வதேச வல்லுநர் குழுவும் தனித்தனியாக இத்திட்டம் குறித்து மூன்று நாட்கள் தொடர்ந்து விவாதித்தன. இந்த விவாதத்தின் விளைவாக இத்திட்டத்தைச் செயல்படுத்துவதற்குரிய வழிமுறைகளில் பல தெளிவுகள் பிறந்தன; பல சிக்கல்கள் புலப்பட்டன; சிக்கல்களுக்குத் தீர்வுகளும் காணப்பட்டன.

சர்வதேச வல்லுநர் குழுவின் முதல் கூட்டத்தில் உலகின் நினைவுச் சின்னங்கள் என்னும் உலகளாவிய ஆய்வுத்திட்டத்தைச் செயல்படுத்துவது தொடர்பான பல்வேறு கருத்துக்கள் யுனெஸ்கோவின் பொதுக்குழுவிற்குப் (General conference) பரிந்துரை செய்யப்பட்டன. முதல் நிலையில் அழிந்து கொண்டிருக்கும் ஆவணங்களைக் காப்பதே இத்திட்டத்தின் அடிப்படைக் குறிக்கோளாக இருந்தது. ஆவணங்களும் அரிய கையெழுத்துப்பிரதிகளும் சுவடிகளும் மட்டுந்தானா உலகின்

நினைவுச்சின்னங்கள் என்ற கேள்வி வல்லுநர்களால் எழுப்பப்பட்டது. உலகில் எழுத்துவடிவம் பெறாத மொழிகள் எவ்வளவோ உள்ளன. பல்வேறு இனக்குழுவினர் (Tribals) எழுத்து வடிவம் பெறாத ஆயிரக்கணக்கான மொழிகளைப் பேசுகின்றனர். இம்மக்களின் அனுபவங்கள், கண்டுபிடிப்புகள், கருத்துக்கள், நம்பிக்கைகள், சமயச் சடங்குகள், வாழ்வியல் கூறுகள், கலைக் கண்ணோட்டங்கள் ஆகிய அனைத்தும் வாய் மொழியாக, தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வந்துகொண்டிருக்கின்றன. இத்தகைய வாய்மொழி மரபுகள் மனித குலத்தின் நினைவுச்சின்னங்கள் அல்லவா? என்ற கேள்வியைப் பலரும் எழுப்பினர். வரிவடிவம் பெற்ற மொழிகளைப் பேசுகின்ற மக்கள் மத்தியிலும் வாய்மொழியாக ஏராளமான வழக்காறுகள் உள்ளன. இவற்றையும் உலகின் நினைவுச் சின்னங்கள் என்ற தலைப்பில் நிச்சயமாக உள்ளடக்க வேண்டும் என்ற கருத்து வலுப்பெறத் தொடங்கியது. ஏட்டில் எழுதும் வாய்ப்பைப் பெறாத ஒரே காரணத்தால் இவற்றைப் பாதுகாக்காமல் புறக்கணிக்க வேண்டுமா? என்ற கேள்வியைப் பல்வேறு நாடுகளைச் சார்ந்த அறிஞர்களும் எழுப்பினர். எனவே உலகின் நினைவுச் சின்னங்களாக வாய்மொழி வழக்காறுகளும் (Oral traditions) யுனெஸ்கோ வல்லுநர் குழுவால் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

நினைவுச் சின்னங்களைத் தேர்ந்தெடுப்பது (Selection Criteria), அவற்றைப் பதிவுசெய்வது (documentation), பிரதி எடுப்பது போன்றனபற்றியெல்லாம் விளக்கமாக விவாதங்கள் நடைபெற்றன. இந்த விவாதங்களின் முடிவுகள் அனைத்தும் யுனெஸ்கோவின் பொதுக்குழுவிற்குப் பரிந்துரை செய்யப் பட்டன. இதுவரை பழைய ஆவணங்கள் நிழற்படச்சுருள் மூலமாக் (Microfilm) பிரதி செய்யப்பட்டுவந்தன. தற்போது கணிப்பொறி (Computer) வாயிலாக அனைத்தையும் பிரதி செய்யும் நிலை

மெல்ல மெல்ல வளர்ச்சிபெற்று வருகின்றது. எனவே பழைய முறையைக் கைவிட்டு விட்டுப் புதுவழியை மட்டுமே பின்பற்றலாம் என்று சிலநாடுகளைச் சார்ந்த அறிஞர்கள் குறிப்பிட்டனர். இதுபற்றி மிக நீண்ட விவாதம் இந்தக் கூட்டத்தில் இடம்பெற்றது. கணிப்பொறி வாயிலாகப் பதிவு செய்யும் பல்வேறு முறைகளும் சோதனை முயற்சி என்ற நிலையிலே உள்ளன. மேலும் இந்த முறையில் பிரதி செய்வது மூல ஆவணத்தின் தன்மையைப் பாதிக்குமோ என்ற அச்சத்தையும் ஏற்படுத்தியுள்ளது. எனவே பழைய முறையைப் பின்பற்றுவோர் அதை நிறுத்த வேண்டிய தேவை இல்லை என்றும், புதுமுறையைப் பின்பற்றுவோர் அதைத் தடையின்றித் தொடரலாம் என்றும் அமெரிக்காவைச் சார்ந்த ஒரு வல்லுநர் ஆற்றலுடன் விவாதித்தார். இறுதியாக நிழற்படச்சுருள் மூலம் பிரதி செய்தல், கணிப்பொறி வாயிலாகப் பிரதி செய்தல் ஆகிய இரு முறைகளையும் அவ்வவ்நாடுகளின் தேவைக்கேற்பப் பின்பற்றலாம் என்று வல்லுநர்குழு பரிந்துரை செய்தது.

உலகின் நினைவுச் சின்னம் என்ற திட்டத்தைச் செயல்படுத்தும்போது, அந்தத் திட்டத்தின் ஒரு கூறாக இளைஞர்களுக்கு ஆவணங்களைப் படிப்பதிலும், பாதுகாத்துப் பதிப்பித்தலிலும் பயிற்சி தருவது (Training Programme) அமைய வேண்டும் என்றும் வல்லுநர் குழு பரிந்துரை செய்தது. இத்தகைய பயிற்சி தொடர்ந்து தரப்படவில்லையானால் இத்திட்டம் அடுத்த தலைமுறையினருக்குப் பயன்படாமல் போய்விடும். பழைய ஆவணங்களைப் படிப்போரின் எண்ணிக்கையும், அவற்றைப் பதிப்பிக்கும் ஆற்றலுள்ளவர்களின் எண்ணிக்கையும் குறைந்துகொண்டே வருகின்ற இந்தக் காலகட்டத்தில் இதுபோன்ற பயிற்சித் திட்டங்கள் மிகவும் இன்றியமையாதவை என்பதைப் பல நாட்டு அறிஞர்களும் எடுத்து விளக்கினர்.

இத்திட்டத்தை விரைவாகச் செயல்படுத்துவதற்கு முன்னர் மிகவும் அஞ்சத்தக்க நிலையில் உள்ள உலகின் ஆவணங்கள் பற்றிய ஒரு பட்டியல் தயாரிக்க வேண்டும் என்று அறிஞர்கள் கருத்துத் தெரிவித்தனர். இந்தப் பொறுப்பை யுனெஸ்கோ நிறுவனம் பல்வேறு நாடுகளின் துணையோடும், பல்வேறு நிறுவனங்களின் துணையோடும் மேற்கொள்ளலாம் என்று கருத்துத் தெரிவிக்கப்பட்டது. அஞ்சத்தக்க நிலையில் உள்ள ஆவணங்களைப் பிரதி செய்யும்போது அவற்றின் ஒரு பிரதியை யுனெஸ்கோ நிறுவனம் ஒரு பெரிய பொது ஆவணக் காப்பகத்தில் உலகின் அனைத்து நாடுகளுக்கும், உலகின் அனைத்து அறிஞர் களுக்கும் பயன்படும் வண்ணம் சேகரித்து வைக்கலாம் என்று கருத்துத் தெரிவிக்கப்பட்டது.

## 21. வல்லுநர் குழுவில் எனது உரை

சர்வதேச நிலையில் யுனெஸ்கோ நிறுவனத்தோடு சேர்ந்து செயல்படுவதற்குரிய பல்வேறு நாடுகளைச் சார்ந்த நான்கு நிறுவனங்களின் பிரதிநிதிகள் அவர்தம் நிறுவனங்களில் நடைபெறும் இத்தகைய முயற்சிகள் பற்றி விளக்கினர். இந்த நான்கு நிறுவனங்களோடு இணைந்து இத்திட்டத்தைச் சர்வதேச நிலையில் (International co-operation) யுனெஸ்கோ நிறுவனம் செயல்படுத்த உள்ளது. இந்த நான்கு நிறுவனங்களுள் இலண்டனைச் சார்ந்த இஸ்லாமிய ஆவணங்களின் விளக்கப்பட்டியல் தயாரிக்கும் ஒரு நிறுவனம் (Al Furquan-Islamic Heritage Foundation) இடம்பெற்றுள்ளது. இந்த நிறுவனத்தின் பிரதிநிதியான திரு. ஹாதி ஷரிபி (Hadi Sharifi) உலகெங்கிலும் காணப்படும் இஸ்லாமிய ஆவணங்களையும், இலக்கியங்களையும் இட, இன, மொழி வேற்றுமை பாராது அந்த நிறுவனம் ஆராய்ந்து பட்டியல் தயாரிப்பதைப் பற்றி விளக்கமாகப் பேசினார். இத்திட்டத்தின் கீழ் ஏற்கனவே சில தொகுதிகள் தயாரிக்கப்பட்டிருக்கின்றன என்று அவர் எடுத்துரைத்தார். இந்தத் திட்டம் முழுமையாக நிறைவேற்றப் படும்போது பல்வேறு உலக மொழிகளில் காணப்படுகின்ற இஸ்லாமிய ஆவணங்கள் பற்றிய முழுச் செய்திகளும் கிடைத்துவிடும் என்று அவர் விளக்கினார். அமெரிக்க நாட்டைச் சேர்ந்த திரு. ஹன்ஸ் ருடிமன் (Hans Rutimann) என்பவர் வாஷிங்டனில் உள்ள தமது அமைப்பில் (Commission on

Preservation and Access) மேற்கொள்ளப்படுகின்ற ஆவணக்காப்பு முயற்சி பற்றி விளக்கமாக எடுத்துரைத்தார். இத்திட்டத்திற்கு யுனெஸ்கோ நிறுவனம் நிதியுதவி செய்து வருவதையும் அவர் குறிப்பிட்டார். கெய்ரோவில் உள்ள அரசு சார்புடைய நிறுவனம் ஒன்றில் (Regional Information Technology and Software Engineering Centre ) கணிப்பொறி வாயிலாக எகிப்திய ஆவணங்கள் யுனெஸ்கோவின் துணையோடு பிரதிசெய்யப் படுவதை அந்த நிறுவனத்தின் பிரதிநிதியான திரு. ஃபாதிசாலே (Fathi Saleh) என்பவர் விளக்கினார்.

சர்வதேச நிலையில் இணைந்து செயல்படுவதற்குரிய இந்திய நிறுவனமாக ஆசியவியல் ஆய்வு நிறுவனம் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தது. ஆசியாவின் முழு நாடுகளைச் சார்ந்த பிரதிநிதிகளாக நானும், ஜப்பானிய அறிஞர் அகியோயாசுவும் திகழ்ந்ததால், ஆசிய நாட்டுச் சுவடிகள் பற்றி திரு. அகியோயாசு சுருக்கமாக எடுத்துரைத்தார். அதைத் தொடர்ந்து இந்திய நாட்டின் ஓலைச்சுவடிகளின் நிலை பற்றி நான் விரிவாக உரையாற்றினேன்.

1,500-க்கும் மேற்பட்ட மொழிகளைக்கொண்ட இந்திய நாடு பல்வேறு மொழிகளின், இனங்களின், பண்பாடுகளின் சங்கமமாகக் காணப்படுவது பல்வேறு சர்வதேச அறிஞர்களையும் வியப்பில் ஆழ்த்தியது. 1500-க்கும் மேற்பட்ட மொழிகள் வழங்கப்பட்டு வந்த போதிலும் 22 மொழிகள் மட்டுமே வரிவடிவங்களைப் பெற்றுள்ளன. வரி வடிவங்களைப் பெற்றுள்ள இம்மொழிகளிலும், வரி வடிவம் பெறாத பிற மொழிகளிலும் ஏராளமான, காலத்தை எதிர்த்து எதிர்நீச்சலிடும் தகுதி வாய்ந்த வாய்மொழி இலக்கியங்கள் உள்ளன. இவற்றையும் உலகின் நினைவுச்சின்னங்களின் ஒரு பகுதியாகக்கொள்ள வேண்டும் என்ற எனது வாதத்தை வல்லுநர் குழு உறுப்பினர்கள் ஏற்றுக்கொண்டனர். எழுத்து வடிவம்பெற்ற இந்திய மொழிகளில் உள்ள ஆபத்துக்கு இடமான ஓலைச்சுவடிகள் (Most Endangered manuscripts) குறைந்தபட்சம் 8,00,000 வரை

இருக்குமென்று நான் குறிப்பிட்டேன். இவற்றுள் ஏறத்தாழ நான்கு இலட்சம் ஓலைச்சுவடிகள் சமஸ்கிருத மொழியைச் சார்ந்தவை. சுவடிகளைக் காக்கும் முயற்சிகளைப் பொறுத்தவரையில் சமஸ்கிருதச் சுவடிகளைக் காப்பதில் பல இந்திய நிறுவனங்கள் ஆர்வம் காட்டுகின்றன. இம்முயற்சிகளுக்கு வெளிநாட்டு அறிஞர்களின் ஆதரவும் போதிய அளவிற்கு உள்ளன. ஆனால் சமஸ்கிருதம் தவிர்த்த பிறமொழி ஓலைச்சுவடிகள், குறிப்பாகத் திராவிட மொழிகளைச் சார்ந்த ஓலைச்சுவடிகள், கவனிப்பாரற்று, ஆதரவின்றி இந்திய நாட்டின் கிராமப்புறங்களில் இயற்கையின் கோரத்தாண்டவத்திற்கும், மக்களின் மூட நம்பிக்கைகளுக்கும், கறையானின் கொடிய வாய்க்கும் இடையில் சிக்கிக் காலந்தோறும் அழிந்துகொண்டிருப்பதை நான் விரிவாக விளக்கினேன்.

இந்தியவியல் என்றால் சமஸ்கிருதவியல் மட்டுந்தான் என்று தவறாகக் கருதப்பட்ட நிலை 19 ஆம் நூற்றாண்டின் இறுதிவரை நிலவி வந்தது. காலப்போக்கில் திராவிடவியல் பற்றி முழுமையான ஆய்வு இல்லையென்றால் இந்தியவியல் பற்றிய ஆய்வு முழுமைபெறாது என்பதைப் பல அறிஞர்களும் அனுபவபூர்வமாக உணரத் தொடங்கினர். எனவே, 20 ஆம் நூற்றாண்டில் அதுவரை புறக்கணிக்கப்பட்டிருந்த திராவிடவியல் ஆய்வு ஓரளவிற்குப் புத்துயிர் பெற்றது. இந்தியாவின் ஒரே செவ்வியல் மொழியாகச் சமஸ்கிருத மொழி மட்டும் கருதப்பட்ட நிலை மாறித் தமிழும் செவ்வியல் மொழியாக ஏற்றுக்கொள்ளப்பட வேண்டிய அவசியத்தை உலக அறிஞர்கள் ஒத்துக்கொள்ளத் தொடங்கினர். கிறிஸ்து பிறப்பதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே இலக்கிய, இலக்கண வளங்களைக் குறைவறப்பெற்று இன்றும் இளமை குன்றாமல் திகழும் இந்தக் கன்னித் தமிழ்மொழியின் முக்கியத்துவத்தைப் புரிந்து கொள்ளாமலோ, தமிழ் பற்றிய அறிவு இல்லாமலோ, இந்தியவியல்

பற்றிய ஆய்வு முழுமைபெறாது என்பதை நான் அழுத்தமாகக் குறிப்பிட்டேன். எனவே, இந்தியவியல் ஆய்வுக்கு அடித்தளமாக அமைகின்ற தென்னிந்திய ஆவணங்கள், குறிப்பாக, திராவிட மொழிகளின் ஓலைச்சுவடிகள் பாதுகாக்கப்பட வேண்டியவை என்று எடுத்துரைத்தேன். 100 ஆண்டுகளுக்கு முன்னர் மதுரையில் இருந்த ஓலைச்சுவடிகள் வெள்ளைக்காரன் ஒருவனின் குதிரைக்கு வெந்நீர் காய்ச்சப் பயன்பட்டதையும், மூடநம்பிக்கை மிக்க இந்நாட்டு மக்கள் பொங்கல் புதுநாளின் போது சுவடிகளைத் தீயிலிட்டுக் கொளுத்துவதையும், வைகை ஆற்றில் ஆடிப்பெருக்கின் போது புதுவெள்ளம் வரும்போது நீரிலிட்டு ஆற்றுத்தேவதையின் பசியை நிறைவு செய்வதையும் நான் விரிவாக எடுத்துப்பேசியது சர்வதேச அறிஞர்களை வியப்பில் ஆழ்த்தியது. போர்களினாலும், இயற்கையின் சீற்றத்தாலும் ஐரோப்பிய நாடுகளின் ஆவணங்கள் அழியும்போது எங்கள் நாட்டின் கலைக்கருவூலங்களில் பெரும்பாலானவை மண்மூடிப்போக வேண்டிய கண்மூடிப் பழக்கங்களாலும், மூட நம்பிக்கைகளாலும் அழிகின்றன என்று நான் எடுத்துரைத்தேன்.

இந்திய நாட்டின் தட்பவெப்ப நிலைகளைப் பொறுத்தவரையில் 300 ஆண்டுகளுக்கு மேல் இந்த ஓலைச் சுவடிகளால் வாழ முடியாது என்பதையும் 300 ஆண்டுகளுக்குள் இவை பிரதி செய்யப்படவில்லையென்றால் அடியோடு அழிந்துவிடும் என்பதையும், இவ்வாறே எங்கள் தமிழ்ச் சமுதாயம் அச்சு இயந்திரம் வருவதற்கு முன்னர் ஏராளமான தமிழ் ஓலைச் சுவடிகளை இழந்துவிட்டது என்பதையும் குறிப்பிட்டேன். அச்சு இயந்திரம் வந்த பின்பும் 53,000 ஓலைச்சுவடிகள் பாதுகாப்போர் இன்றி அழியும் நிலையில் உள்ளன. 300 ஆண்டுகளுக்கு மேல் வாழமுடியாத இச்சுவடிகளில் பெரும்பாலான சுவடிகள் 200 அல்லது 250 ஆண்டுகளை ஏற்கனவே கடந்துவிட்டன. இவற்றை விரைவில் காப்பாற்ற வேண்டும். இவற்றை அழியவிடுவது

தமிழ் மக்களுக்கு மட்டுமல்ல, உலகத்திற்கே அவமானம் என்று நான் குறிப்பிட்டேன்.

இத்துறையில் ஆசியவியல் ஆய்வு நிறுவனம் மேற்கொண்டு வரும் பணிகள் பற்றி நான் விரிவாக விளக்கியது சர்வதேச அறிஞர்களை மிகவும் கவர்ந்தது. எனது உரையினை அன்று நிகழ்த்தப்பட்ட உரைகளுள் மிகச்சிறப்பு வாய்ந்த உரையாக அனைவரும் பாராட்டினர். ஆபத்துக்கிடமான உலக ஆவணங்களின் வரிசையில் 53,000 தமிழ் ஓலைச்சுவடிகளும் இணைக்கப்படவேண்டுமென்று வல்லுநர் குழு பரிந்துரை செய்தது. இந்தக் குழுவின் கூட்டம் ஒருங்கே பிரெஞ்ச் மொழியிலும் ஆங்கிலத்திலும் நடந்தது. பிரெஞ்ச் மொழியில் நிகழ்த்தப்பட்ட உரைகள் அம்மொழி தெரியாதோருக்கு ஆங்கிலத்தில் உடனுக்குடன் மொழிபெயர்த்துத் தரப்பட்டன. ஆங்கிலத்தில் அமைந்த உரைகள் பிரெஞ்ச் மொழியில் மொழிபெயர்க்கப்பட்டன. கூட்டத்தின் இறுதிப் பகுதி பெரும்பாலும் பிரெஞ்ச் மொழியில் நடத்தப்பட்டது. இறுதிக் கூட்டத்தில் சர்வதேச வல்லுநர் குழுவும், ஐரோப்பாவிற்கு என்று அமைக்கப்பட்ட குழுவும் இணைந்து தம் பரிந்துரைகளைத் தெரிவித்தன. இக்குழுக்களின் தீர்மானங்கள் இறுதியாகப் பிரெஞ்ச் மொழியில் படிக்கப்பட்டன. "இந்திய நாட்டின் ஒரு பகுதியான தமிழ்நாட்டில் 53,000 த்திற்கும் மேற்பட்ட தமிழ் ஓலைச்சுவடிகள் பாதுகாப்போர் இன்றி அழிந்துகொண்டிருக்கின்றன. இவை பற்றிய போதுமான தகவல்கள் சர்வதேச அறிஞர்களை, குறிப்பாக ஐரோப்பிய சமுதாயத்தை வந்து எட்டவில்லை. இந்த ஓலைச்சுவடிகள் மனித குலத்தின் அறிவு வளர்ச்சியில் மிகக் குறிப்பிடத் தகுந்த இடத்தைப் பெறுகின்றன என்று இந்திய நாட்டின் பிரதிநிதி மிகச்சிறப்பாக விளக்கினார். அவற்றைப் பாதுகாக்கும் முயற்சியை யுனெஸ்கோ நிறுவனம் மேற்கொள்ள வேண்டுமென்று பரிந்துரைக்கப் படுகிறது" என்று பிரெஞ்ச்

மொழியில் சர்வதேச வல்லுநர்குழுவின் பரிந்துரை படிக்கப்பட்டபோது கரை காணாத மகிழ்ச்சியில் என் உள்ளம் துள்ளிக்குதித்தது. தமிழ்ச் சுவடிகளைக் காக்கவேண்டுமென்று குமரியில் உதித்த சிந்தனை சென்னையில் உருப்பெற்று, தில்லியில் செயல்வடிவம் பெற்று, வார்சாவில் சர்வதேச அறிஞர்களின் பரிந்துரையைப்பெற்று, ஐக்கிய நாடுகளின் அமைப்பான யுனெஸ்கோ நிறுவனத்தின் வாயிலாகச் செயல்பட இருப்பதை எண்ண எண்ண நெஞ்சில் பெருமிதம் ஏற்பட்டது. எனது ஜப்பானிய நண்பர் டாக்டர் ஷு ஹிகோசகா எங்கள் முயற்சியின் வெற்றியை எண்ணி எண்ணிப் பெருமிதம் அடைந்தார். எனது உரையினை நிழற்படம் செய்து மீண்டும் மீண்டும் கண்டும் கேட்டும் மகிழ்ந்து கொண்டேயிருந்தார். வார்சா பயணம் எங்களை அதிக மகிழ்ச்சி கொள்ளச் செய்தது. வல்லுநர் குழுக்கூட்டம் பற்றிய செய்திகளை நிறுவனத்திற்கும், வீட்டிற்கும் தொலை எழுது கருவி மூலமாக அனுப்பிவைத்தோம்.

அன்றிரவு போலந்து நாட்டு மரபுப்படி ஒரு பெரிய விருந்துக்கு யுனெஸ்கோ நிறுவனம் ஏற்பாடு செய்திருந்தது. குளிரால் நடுங்கும் போலந்து நாட்டின் இயற்கை எழில்மிக்க அரண்மனையின் பக்கத்தில் அமைதியாகப் பனியைப் போர்த்துக்கொண்டு அசைந்தாடிச்செல்லும் ஆற்றின் கரையில் சர்வதேச அறிஞர்களுக்கு இரவில் விருந்து ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஏராளமான பெரிய மரத்துண்டுகளைக் கொண்டு வந்து குளிர் தெரியாதவாறு நெருப்பேற்றினர். நெருப்பின் ஜீவாலை விண்ணைத் தொடும் அளவிற்குக் கொழுந்துவிட்டு எரிந்தது. இன்னிசைக் குழுவினர் ஆற்றோரத்தில் நின்றுகொண்டு போலந்துநாட்டு மரபுப் பின்னணியில் அமைந்த இசையை எழுப்பிக் காதுகளைக் குளிரவைத்தனர். போலந்து நாட்டு வகையில் அமைந்த மது வகைகளும், ஐரோப்பிய வகையில் அமைந்த மது வகைகளும் பரிமாறப்பட்டன. ஒரு

அமைதியான சூழலில் எங்கள் ஆய்வுப் பயணத்தின் வெற்றியைக் கொண்டாடும் வகையில் இந்த விருந்து நடைபெற்றது. உலகின் நினைவுச் சின்னங்களைப் பாதுகாக்கும் முயற்சியில் முழுவெற்றிபெற்றுவிட்டது போன்ற மகிழ்ச்சியில் சர்வதேச அறிஞர்கள் ஒருவரோடு ஒருவர் கை குலுக்கிக்கொண்டனர். அன்றிரவு நெடுநேரம் வரை ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் ஆய்வுப்பணிகளைப் பற்றி நானும், டாக்டர் ஷு ஹிகோசகாவும், ஜப்பானிய பிரதிநிதி டாக்டர் அகியோயாசுவும், ஒரு சில ஐரோப்பிய நாட்டு அறிஞர்களும் இணைந்து ·விரிவாகக் கலந்துரையாடினோம். நிறுவனத்தின் பணிகள் அறிஞர்கள் அனைவரின் பாராட்டுதலையும் பெற்றன. இந்த நிறுவனத்தோடு இணைந்து ஆய்வு முயற்சிகளை மேற்கொள்வதில் பலநாட்டு அறிஞர்களும் ஆர்வம் காட்டினர். மிகப்பெரிய பணியைத் திறம்படச் செய்து முடித்த மனநிறைவோடு அன்றிரவு ஆழ்ந்த துயில் கொண்டோம். அடுத்த நாள் காலை வார்சாவில் உள்ள தலைமை ஆவணக் காப்பகத்தைப் பார்வையிட்டுவிட்டு மறுநாள் இலண்டன் செல்வதாகத் திட்டமிட்டோம்.

## 22. மீண்டும் வார்சாவில்...

அடுத்த நாள் காலை நாங்கள் தங்கியிருந்த டாம்பொலோனி என்ற பகுதியை விட்டு 40 கிலோ மீட்டர் தொலைவிலுள்ள போலந்து நகரத்தின் தலைமை ஆவணக்காப்பகத்திற்குச் சென்றோம். இயற்கை எழில் மிகுந்த போலந்து நாட்டில் பயணம் செய்வது மனதிற்கு இதமாக இருந்தது. பசுமை மிக்க செடிகளையும் மரங்களையும் மலர்களையும் ஆப்பிள் தோட்டங்களையும் கடந்து வந்து எங்களைத் தீண்டிய அந்த நாட்டின் சுத்தமான காற்று புத்துணர்ச்சியை நல்கியது. சாலையின் இருமருங்கும் மஞ்சள்பூசிய முகங்களோடு சூரியகாந்தி மலர்களும், பன்னிற ஆடைபோர்த்து நின்றதுபோலக் காட்சிதந்த டேலியா மலர்களும் அடிக்கடித் தன்முகத்தைக் காட்டி மறையும் சூரியனோடு காதல்கவிதைகள் பேசி நின்றன. வார்சா நகரின் இந்தத் தலைமை ஆவணக் காப்பகத்திற்குள் நுழைந்த யுனெஸ்கோ வல்லுநர் குழுவினரான எங்களை ஆவணக் காப்பக இயக்குநர் வரவேற்றார். பொலிவுமிக்க அரண்மனைபோல் அமைந்திருந்த அருமையான சிற்ப வேலைப் பாடுகள் கொண்டஅந்த ஆவணக்காப்பகத்தின் தூய்மையும் அழகும் எங்கள் உள்ளங்களைக் கொள்ளை கொண்டன.

போலந்து நாட்டில் நான்கு ஆவணக் காப்பகங்கள் உள்ளன என்றும், அவற்றுள் வார்சா நகரிலுள்ள இந்த ஆவணக்காப்பகம் தலைமையானது என்றும் அதன் இயக்குநர் குறிப்பிட்டார். 1795 ஆம் ஆண்டில் போலந்து நாட்டு அரசர் ஒருவரால் நிறுவப்பட்ட இந்த ஆவணக் காப்பகம் போலந்து மக்களையே

பெருமிதம் கொள்ள வைக்கும் ஓர் அரிய கலையறிவு மையமாகத் திகழ்ந்தது. இந்த அரிய கலைக் கருவூலத்தை ஜெர்மன் நாட்டினர் தீ வைத்துத் தரைமட்டமாக்கிவிட்டனர். இதன் விளைவாக 95 விழுக்காட்டிற்கு மேல் இங்குள்ள கலைக் கருவூலங்களும், அரிய ஆவணங்களும் அழிந்துவிட்டன என்பதை உணர்ச்சி மிகுந்த குரலில் அதன் இயக்குநர் விளக்கினார். இதை விளக்கும்போது அவர் கண்களில் கண்ணீர்த் துளிகள் விழுவதை நாங்கள் கண்டோம். இந்த மனிதருக்குத் தாம் பணிபுரிகின்ற நிறுவனத்தின் மீதுள்ள உணர்வுகலந்த ஈடுபாடு என்னை வியக்க வைத்தது. அழிந்து போன அந்த ஆவணக் காப்பகத்தின் மீது தற்போதுள்ள கட்டிடம் பழைய அமைப்பினை ஒட்டி கட்டி எழுப்பப்பட்டுள்ளது என்று அவர் குறிப்பிட்டார். இந்த ஆவணக் காப்பகத்தின் பல்வேறு பகுதிகளையும் நாங்கள் கண்டு வியப்படைந்தோம். ஆவணங்களைப் பிரதி செய்வதற்கும் பாதுகாப்பதற்கும் அங்கு அமைக்கப்பட்ட ஆய்வுக்கூடங்களும் கருவிகளும் எங்களைக் கவர்ந்தன. இலத்தீன் மொழியில் எழுதப்பட்ட ஏராளமான அரிய ஆவணங்கள் அங்கு வைக்கப்பட்டிருந்தன. கத்தோலிக்கக் கிறிஸ்தவ மரபில் அமைந்த அங்குள்ள ஓவியங்கள் எங்கள் கண்களைக் கவர்ந்தன. பழைய ஆவணங்களை மிகப் பத்திரமாகப் பாதுகாத்து வைத்த முறை எங்களை வியப்படையச் செய்தது. சோவியத் நாட்டைச்சார்ந்த பல முக்கியமான ஆவணங்களையும், இலத்தீன் மொழியில் எழுதப்பட்டஅரிய அரசாணைகளையும், கிறிஸ்தவம் தொடர்பான ஆவணங்களையும், அரசாங்க முத்திரைகளையும் அதன் இயக்குநர் எங்களுக்குக் காட்டி விளக்கினார். ஒரு நல்ல ஆவணக் காப்பகம் எப்படி அமையவேண்டும் என்பதற்குப் போலந்து நாட்டின் ஆவணக் காப்பகம் ஒரு முன்மாதிரியாக இருந்தது. சுருங்கச் சொன்னால் அது ஒரு கலைக்கோயிலாகவே எனக்குத் தென்பட்டது என்பேன். நம் நாட்டின் ஆவணக் காப்பகங்களை இதனோடு ஒப்பிட்டு நோக்கியபோது நெஞ்சத்தில் ஏதோ ஒரு துயரச்சுமை அழுத்துவதை உணர முடிந்தது.

தமிழ்நாட்டின் மிகப்பெரிய ஓலைச்சுவடி நூலகமாகச் சென்னையில் அமைந்துள்ள கீழ்த்திசைச் சுவடி நூலகம் திகழ்கின்றது. இங்குச் சுவடிகள் பாதுகாக்கப்படுகின்ற முறையை எண்ணும்போதெல்லாம் என் உள்ளம் மௌனமாக இங்குள்ள ஓலைச்சுவடிகளை எண்ணி எண்ணி அழுவதுண்டு. அரசின் நெறிப்படுத்துதலின்மை, அலுவலர்களின் ஆர்வமின்மை, நமது அறிஞர்களின் கவனக்குறைவு ஆகியவற்றால் இந்த நாட்டின் அரிய அறிவுக்கருவூலமொன்று தமிழ்நாட்டின் தலைநகரில் அணு அணுவாகச் செத்து மடிந்து கொண்டிருக்கின்றது. இதைப் பாதுகாப்பதற்குரிய நிதி நமது அரசிடம் இல்லையா? இதைக் காக்கும் நிர்வாகத்திறமை நம்மிடம் இல்லையா? இவையனைத்தும் இந்த நாட்டில் இருந்தும் இந்நாட்டு மக்களின் அரிய கலைக்கருவூலம் ஒன்று நமது மக்களின் அல்லது அரசின் அக்கறையின்மையால் அழிந்து கொண்டிருக்கின்றது. தஞ்சையிலுள்ள சரஸ்வதி மகால் நூலகத்தின் சுவடிகளுக்கும் இதே நிலைதான் என்று கூறவேண்டும். மராட்டியமன்னர் சரபோஜியால் தோற்றுவிக்கப்பட்ட இந்தக்கலைக்கருவூலத்தின் சுவடிகளைவிட இங்குள்ள ஊழியர்களின் போராட்டத்தைத் தான் தமிழ்கூறும் நல்லுலகம் சிறப்பாகத் தெரிந்து வைத்திருக்கின்றது. நமது அரசும் மக்களும் மனம்வைத்தால் மேற்கூறிய நிறுவனங்களை வார்சாவிலுள்ள இந்த ஆவணக் காப்பகத்தின் தரத்துக்கு உயர்த்த முடியும் என்பதில் ஐயமில்லை.

வார்சாவின் பழைய நகரப் பகுதிகள் சிலவற்றையும், அரிய கலைக் கருவூலங்கள் பலவற்றையும், போர்களினால் பாதிக்கப்பட்டிருந்த சில பகுதிகளையும் பார்வையிட்டுவிட்டு மீண்டும் டாம்பொலோனியிலுள்ள எங்கள் இருப்பிடத்திற்குச் சென்றோம். அடுத்த நாள் காலை யுனெஸ்கோவின் தகவல் துறைப்பகுதியின் சிறப்பு அலுவலராகத் திகழும் நண்பர் திரு அபிட் அவர்களைச் சந்தித்து உரையாடினோம். யுனெஸ்கோவோடு இணைந்து நிறுவனம் செயல்படுத்த

இருக்கின்ற தமிழ் ஓலைச்சுவடி பற்றிய ஆய்வுத்திட்டம் தொடர்பாகச் சுருக்கமாக உரையாடிவிட்டு அவரிடமிருந்து விடை பெற்றுக்கொண்டோம். யுனெஸ்கோ நிறுவனத் திட்டத்தின் கீழ் பழந்தமிழ் ஓலைச் சுவடிகளைப் பாதுகாக்கும் பணி அமைவதற்கு முக்கிய காரணமாக அமைந்தவர் திரு. அபிட் என்பதை மிகுந்த நன்றியுணர்வுடன் குறிப்பிட விரும்புகிறேன். நண்பர் திரு. அபிட் அவர்கள் காட்டிய ஆர்வமே இந்தத் திட்டத்தில் ஆசியவியல் ஆய்வு நிறுவனம் பங்கு கொள்வதற்கு முக்கிய காரணமாக அமைந்தது. ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் சார்பிலும், தமிழ் அறிஞர்களின் சார்பிலும் திரு. அபிட் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டு விடைபெற்றோம். நண்பர் அபிட் அவர்கள் பிரான்ஸ் நாட்டுக்குச்சென்றதும் எங்களோடு தொடர்பு கொள்வதாகக் கூறினார். நானும், ஜப்பானிய நண்பர் டாக்டர் ஷு ஹிகோசகாவும் இலண்டன் நோக்கிய எங்கள் பயணத்தை மேற்கொள்வதற்காக வார்சா விமான நிலையத்திற்கு வந்தோம். வார்சாவிலிருந்து விமானம் புறப்பட்டதும் மிகப்பெரியஒரு பொறுப்பினைச் சிறப்பாக முடித்துக்கொண்டு மகிழ்ச்சியோடு திரும்பும் உணர்வு ஏற்பட்டது. நெஞ்சத்தின் சுமைகள் நீங்கி 45, 000 அடிகளுக்கு மேல் பறந்துகொண்டிருந்த விமானத்தோடு எங்கள் உள்ளங்களும் இணைந்து பறந்துகொண்டிருந்தன. இலண்டனில் செய்து முடிக்க வேண்டிய பணிகளையெல்லாம் சிந்தித்துக் கொண்டே நாங்கள் பயணித்தோம். அடுத்த நாள் பேராசிரியர் டாக்டர் ஜான்மார் அவர்களைச் சந்திக்கத் திட்டமிட்டோம். விமானம் மாலையில் இலண்டனில் தரையிறங்கியது. அன்றிரவு இலண்டனில் தங்கியிருந்து அடுத்த நாள் சந்திக்கவேண்டிய நண்பர்களையும், அமைப்புகளையும் தொலைபேசி வாயிலாகத் தொடர்புகொண்டு நேரங்களைக் குறித்துக்கொண்டோம்.

# 23. வெல்கம் ஆய்வு நிறுவனம்

இலண்டன் நகரம் எங்களுக்கு ஏதோ ஒரு பழக்கமான நகரத்தைப்போன்றே இப்போது காட்சியளித்தது. பல நாட்களாகத் தமிழில் பேசுவதற்கும், இந்திய முறையில் அமைந்த உணவுகளை உண்பதற்கும் வாய்ப்பில்லாமல் இருந்த எங்களுக்கு இலண்டன் வருகை மிகுந்த மகிழ்ச்சியைத் தந்தது. அங்கு ஏராளமான இந்தியர்களையும் தமிழர்களையும் நாங்கள் சந்திக்க முடிந்தது. ஆங்கிலேயரான டாக்டர் ஜான்மார் தென்னிந்திய முறையிலமைந்த உணவைத் தயாரித்து எங்களுக்கு விருந்தளிப்பதாகக் கூறி வரவேற்றார். இந்த ஆங்கிலேயரின் விருந்தோம்பும் பண்பு எங்களை மெய்சிலிர்க்க வைத்தது.

இந்து சமயக் கலைக்களஞ்சியத்தினை இலங்கையில் தயாரித்துக்கொண்டிருக்கும் டாக்டர் வேலன் அவர்கள் தொலைபேசியில் தொடர்பு கொண்டு என்னோடு தமிழில் பேசியபோது பல நாட்களாக என் தாய்மொழியில் பேசாமல் இருந்ததால் ஏற்பட்ட என் தமிழ்ப் பசி மெல்லத் தணிந்ததுபோன்ற உணர்வு ஏற்பட்டது. நண்பர் திரு. கணேசன் அவர்களும், ஏராளமான இலங்கைத் தமிழர்களும் எங்களோடு தொடர்பு கொண்டு எங்களுக்கு வாழ்த்துக் கூறிக்கொண்டேயிருந்தனர். தமிழ் அறிஞர் திரு. சிவபாதசுந்தரம் அவர்களைத் தொடர்புகொண்டு நலம் விசாரித்தேன். சென்னையை விட்டுச்சில ஆண்டுகளுக்கு முன் புறப்பட்டுச் சென்று தற்போது இலண்டனில் தங்கியிருந்த இந்தக்

தமிழறிஞர் தம் எழுத்துப்பணியை இங்கிலாந்து நாட்டின் தலைநகரில் தொடர்ந்து கொண்டிருந்தார். 81 வயதாகிவிட்டதால் களைப்பு அதிகமாகிவிட்டது என்றும், தமிழ் இலக்கியப்பணியில் அதிகமாக ஈடுபட முடியவில்லை என்றும் அவர் கூறியபோது சுறுசுறுப்பான திரு. சிவபாதசுந்தரம் அவர்களுக்கு ஏற்பட்டுள்ள சோர்வு என்னை வருத்தங்கொள்ளச் செய்தது. திரு. சிவபாத சுந்தரம் அவர்களும் திரு. சிட்டி அவர்களும் இணைந்து ஆற்றியுள்ள தமிழ்த்தொண்டினை டாக்டர் ஷு ஹிகோசகா அவர்களுக்கு விளக்கினேன். தற்காலத் தமிழிலக்கியத்திற்கு இந்த இரட்டையர்களின் பங்களிப்பு தமிழிலக்கிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க சாதனையாக விளங்குவதைக் கேட்டு ஜப்பானிய நண்பரும் வியப்படைந்தார். ஆசியா என்ற அமைப்பின் துணைத் தலைவரான திரு. கணேசன் இலண்டனில் எங்களுக்கு எல்லா வசதிகளையும் செய்துகொடுத்திருந்தார். இலங்கைத் தமிழரான ஓட்டுநரோடு கார் ஒன்றினையும் அனுப்பி வைத்திருந்தார். தேவன் என்னும் பெயர் கொண்ட அந்த ஓட்டுநர் இலண்டனில் நாங்கள் போகவேண்டிய எல்லா இடங்களையும் தெளிவாகத் தெரிந்து வைத்திருந்தார். எனவே இலண்டனில் எங்கள் நிகழ்ச்சிகள் மிகச் சிறப்பாக அமைந்தன. அடுத்த நாள் மாலையில் இலண்டனில் வாழ்கின்ற தமிழர்களின் அமைப்பு ஒன்றில் நாங்கள் உரையாற்றுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

காலையில் எங்களை அழைத்துச் செல்வதற்கு இலங்கையைச் சார்ந்த வழக்கறிஞரும் தமிழ் அறிஞருமான ஸ்ரீ ஸ்கந்தராஜா என்பவர் வந்திருந்தார். முதல் முதலாக இலண்டனிலுள்ள வெல்கம் மருத்துவ ஆராய்ச்சி நிறுவனத்துக்குச் செல்ல வேண்டுமென்று நாங்கள் திட்டமிட்டிருந்தோம்.

மருத்துவத்துறையில் உலகப்புகழ் பெற்றவர் திரு. ஹென்றி வெல்கம் என்பவர். இன்றைக்கு நாம் பயன்படுத்தும் தரம் வாய்ந்த மருத்துக்களில் பெரும்பாலானவை அவரது

நிறுவனங்களில் தயாரிக்கப்படுபவை. அவரது மருந்து தயாரிப்பு ஆலைகளிலிருந்து வரும் வருவாயின் ஒருபகுதி, அவரது பிற சொத்துக்களிலிருந்து வரும் வருவாய் ஆகியவற்றைக் கொண்டு வெல்கம் அறக்கட்டளை என்ற அமைப்பு இலண்டனில் செயல்பட்டு வருகின்றது. மருத்துவ ஆராய்ச்சி தொடர்பாக ஏராளமான நிறுவனங்களுக்கு இந்த அறக்கட்டளை தாராளமாக நிதியுதவி நல்கி ஆதரித்து வருகின்றது. இந்த அறக்கட்டளையின் சார்பாக மருத்துவ வரலாற்றை ஆராய்வதற்குப் பெரிய ஆராய்ச்சி நிறுவனமொன்று Wellcome Institute for the History of Medicine என்ற பெயரில் இலண்டனில் நிறுவப்பட்டுள்ளது.

திரு. ஹென்றி வெல்கம் அவர்கள் உயிரோடு வாழ்ந்த காலத்தில் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் கிடைக்கும் மருத்துவம் தொடர்பான சுவடிகளையும், ஏனைய சுவடிகளையும் சேர்ப்பதில் அதிக ஆர்வம் காட்டினார். மிகப்பிரமாண்டமாக நிறுவப்பட்டுள்ள அவரது மருத்துவ ஆராய்ச்சி நிறுவனத்தில் தென்கிழக்கு ஆசியநாடுகளைச் சார்ந்த ஏராளமான ஓலைச்சுவடிகள் மிகச் சிறப்பாகப் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளதை அமெரிக்கா விலுள்ள சிக்காகோ பல்கலைக்கழகத்தின் பேராசிரியர் டாக்டர் ஜேம்ஸ்நை பல மாதங்களுக்கு முன்னர் எனக்கு எடுத்துரைத்திருந்தார். இந்த நிறுவனத்தில் 6,000 த்திற்கும் மேற்பட்ட சமஸ்கிருத ஓலைச்சுவடிகளும், தமிழ் ஓலைச் சுவடிகளும் இருப்பதை அறிந்தேன். 1954 ஆம் ஆண்டு இலண்டனுக்குச் சென்ற சமஸ்கிருத அறிஞர்கள் டாக்டர் வி. இராகவன், டாக்டர் குஞ்சுண்ணி ராஜா ஆகியோரின் துணையால் சமஸ்கிருத ஓலைச் சுவடிகளுக்குப் பட்டியல் தயாரித்து வைக்கப்பட்டிருந்தது.

நண்பர் டாக்டர் ஹிகோசகாவும் நானும் இந்த ஆராய்ச்சி நிறுவனத்துக்குச் சென்றபோது, தென்கிழக்கு ஆசிய நாடுகளின் ஆவணக் காப்பாளராக இருந்த சமஸ்கிருத அறிஞரான டாக்டர்

டாமினிக் எங்களை அன்புடன் வரவேற்றார். ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் வெளியீடுகளை ஏற்கனவே கற்று மகிழ்ந்த இந்த அறிஞர் இந்நிறுவனத்தின் பணிகளை மனந்திறந்து பாராட்டினார். வெல்கம் நிறுவனத்தில் ஏராளமான சிங்கள மொழியில் அமைந்த ஓலைச்சுவடிகள் இருப்பதையும் நான் கண்டுகொள்ள முடிந்தது. இந்தச் சுவடிகளுக்குப் பட்டியல் தயாரிக்கும் பணி நடந்துகொண்டிருப்பதை நாங்கள் பார்வையிட்டோம். மிகப்பெரிய நூலகத்தையும், ஆவணக் காப்பகத்தையும் கொண்டுள்ள இந்த நிறுவனத்தில் தமிழ்ச் சுவடிகளைக் கண்டபோது நாங்கள் மிக்க மகிழ்ச்சி அடைந்தோம். யுனெஸ்கோ நிறுவனத்தோடு ஆசியவியல் ஆய்வு நிறுவனம் இணைந்து தமிழ் மொழியிலுள்ள ஓலைச்சுவடிகளின் பாதுகாப்பிற்கு எடுக்கப்போகும் முயற்சிகளை இந்நிறுவனத்தின் அறிஞர்கள் மனந்திறந்து பாராட்டினர். வெல்கம் நிறுவனத்தோடு ஆசியவியல் ஆய்வு நிறுவனம் இணைந்து ஓலைச்சுவடிகளின் பாதுகாப்பில், குறிப்பாக மருத்துவம் தொடர்பான தமிழ் ஓலைச்சுவடிகளைப் பிரதி செய்யும் பணியில், செயல்படுவதற்குரிய சாத்தியக்கூறுகள் பற்றி நாங்கள் விரிவாகக் கலந்துரையாடினோம். சுவடிப் பாதுகாப்பில் ஆசியவியல் ஆய்வு நிறுவன அறிஞர்களுக்குப் பயிற்சி தருவது, தமிழ் ஓலைச்சுவடிகளைப் பிரதி செய்வது போன்ற பணிகளிலெல்லாம் ஆசியவியல் ஆய்வு நிறுவனமும், வெல்கம் நிறுவனமும் இணைந்து பணியாற்றுவதற்குரிய வழி வகைகள் ஆகியன பற்றி விவாதித்தோம். சுவடியியல் தொடர்பான கருத்தரங்குகள், பயிலரங்குகள் ஆகியவற்றை இவ்விரு நிறுவனங்களும் இணைந்து நடத்துவது பற்றியும் விரிவாகக் கலந்துரையாடினோம். எங்களது விருப்பத்தை நிறைவேற்ற வெல்கம் நிறுவனத்தின் அலுவலர்கள் இசைவு தந்தனர். ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் குறிப்பிட்ட சில ஆய்வுப் பணிகளுக்கு நிதியுதவி நல்கவும் அவர்கள் இசைவு

தெரிவித்தனர். நண்பர் டாக்டர் டாமினிக் மற்றும் பிற அலுவலர்களிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு பேராசிரியர் டாக்டர் ஜான்மார் அவர்களைச் சந்திப்பதற்கு இங்கிலாந்து நாட்டிலுள்ள சர்ரே என்னும் பகுதிக்கு காரில் எங்களது பயணத்தைத் தொடங்கினோம்.

## 24. டாக்டர் ஜான்மாருடன்

இலண்டனிலிருந்து 50 கிலோ மீட்டருக்கு அப்பால் டாக்டர் ஜான்மார் அவர்கள் வாழ்கின்ற இயற்கை எழில் சூழ்ந்த சர்ரே பகுதி அமைந்துள்ளது. இங்கிலாந்து நாட்டிலுள்ள மிகச்சிறந்த இந்தியவியல் அறிஞர்களுள் டாக்டர் ஜான்மார் அவர்கள் குறிப்பிடத் தகுந்தவர். இலண்டனிலுள்ள கீழ்த்திசை ஆப்பிரிக்கப் பண்பாட்டு ஆராய்ச்சி மையத்தில்(School of Oriental and African Studies) தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிந்து மிக அண்மையில் அவர் ஓய்வு பெற்றிருந்தார். கர்நாடக இசையில் சிறந்த மேதையாகத் திகழும் டாக்டர் ஜான்மார் அவர்கள் தமிழில் சரளமாகப் பேசும் ஆற்றல் பெற்றவர். இந்த இங்கிலாந்து நாட்டு அறிஞர் தமிழுக்கு ஆற்றியுள்ள பணி மிகப்பல. ஏராளமான வெளிநாட்டு அறிஞர்களுக்குத் தமிழ் உணர்வை ஊட்டி வளர்த்த எழுச்சிமிக்க இந்தத் தமிழ் அறிஞர் சங்க இலக்கியத்தில் ஆழ்ந்த புலமை பெற்றுள்ளார். எட்டுத்தொகை பற்றிய அவரது ஆராய்ச்சி சங்க இலக்கிய ஆய்வு வரலாற்றில் குறிப்பிடத்தகுந்த மிகப்பெரிய சாதனையாகும்.

வெறும் பிஎச். டி. பட்ட ஆய்வுக் கட்டுரையாக மட்டுமே இருந்த இந்த ஆய்வும் அச்சிட்டு நூலாக வெளிவராமல் பலகாலங்கள் முடங்கிக் கிடந்தது. தமிழ் பற்றி எழுதுகின்ற வெளிநாட்டு அறிஞர்கள் எல்லாம் இந்த நூலைப் பற்றிக் குறிப்பிடத் தவறுவதே கிடையாது. இந்தியா பற்றி The Wonder that was India என்ற மிகப் புகழ் பெற்ற நூலை

எழுதிய டாக்டர் ஏ. எல். பாஷம் (A.L. Basham) அவர்கள் டாக்டர் ஜான்மார் அவர்களின் சங்கப் பாடல்களின் ஆங்கில மொழிபெயர்ப்பை ஆங்காங்கே மேற்கோள் காட்டிச் சிறப்பித்திருந்தது என்னைப் பலமுறை வியப்பில் ஆழ்த்தியது. டாக்டர் ஜான்மார் அவர்களின் ஆய்வேட்டைப் படிக்க வேண்டுமென்று நான் பலமுறை துடித்ததுண்டு. எனினும், எனது நீண்டகாலக் கனவு நிறைவேறாமல் இருந்தது.

பாரதி, ஷெல்லி ஆகிய இரு கவிஞர்களை மையமாகக் கொண்டு ஐரோப்பிய, இந்திய வீறுணர்ச்சி கவிதைகளுக்கு (Romantic Poetry) இடையில் காணப்படும் குடும்ப ஒற்றுமையை ஆய்ந்து எனது டாக்டர் பட்ட ஆய்வினை 1979 ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழகத்திற்குச் சமர்ப்பித்தேன். இந்த ஆய்வேட்டின் மதிப்பீட்டாளர்களுள் ஒருவராக டாக்டர் ஜான்மார் அவர்களைச் சென்னைப் பல்கலைக்கழகம் நியமனம் செய்தது. ஆங்கிலக் கவிஞன் ஷெல்லி பற்றிய எனது ஆய்வுரையினை இங்கிலாந்து நாட்டைச் சார்ந்த ஓர் ஆங்கிலேயர் மதிப்பீடு செய்வதே பொருத்தம் என்று நானும் கருதினேன். எனது ஆய்வுரையைப் படித்து மிகவும் பாராட்டிய டாக்டர் ஜான்மார் அது நூலாக வெளியிடப்பட வேண்டும் என்று ஆசைப்பட்டார். அவரது ஆசையும் நீண்ட நாட்கள் நிறைவேறாமலே இருந்தது.

ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தைத் தொடங்கியவுடன், அதன் முதல் வெளியீடாக டாக்டர் ஜான்மார் அவர்களின் எட்டுத்தொகை பற்றிய ஆராய்ச்சியை வெளிக் கொண்டுவர நான் விரும்பினேன். இதற்கு டாக்டர் ஜான்மார் அவர்களும் இசைவு தந்தார்கள். எனவே இந்நூலினை The Eight Anthologies என்ற பெயரில் நிறுவனத்தின் முதல் வெளியீடாக 1983 ஆம் ஆண்டில் வெளியிட்டோம். இதன் வெளியீட்டு விழா சென்னையில் நடந்தபோது டாக்டர் ஜான்மார் அவர்களால் வர முடியவில்லை. தமிழக நிதி அமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் இதை வெளியிட, பிரிட்டிஷ்

ஹைகமிஷன் அதிகாரியான திரு. ஆலன் மெய்லி அவர்கள் இந்நூலின் முதல் படியினைப் பெற்றுக்கொண்டார்.

எனது டாக்டர் பட்ட ஆய்வுரையை நான் இலண்டன் செல்வதற்குச் சில மாதங்களுக்கு முன்பு The Harp and the Veena என்ற தலைப்பில் நூலாக வெளியிட்டிருந்தேன். ஷெல்லிக்குக் குறியீடாக ஹார்ப் என்னும் இசைக்கருவியையும், தமிழ்க்கவிஞன் பாரதியின் குறியீடாக வீணையையும் கொண்டு இந்நூலுக்கு மேற்கூறியவாறு பெயர் சூட்டியிருந்தேன். ஷெல்லி கவிஞர்களை ஹார்ப் (Harp) என்னும் ஒரு வகை நரம்புக் கருவியோடு ஒப்பிடுவான். பாரதி தன்னை "நல்லதோர் வீணை" என்று வருணிப்பான். இந்நூலுக்கு நான் சூட்டிய பெயர் மிகப் பொருத்தமாக உள்ளது என்று நான் கருதினேன். எனவே இந்நூலின் வெளியீடு டாக்டர் ஜான்மார் அவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சி தரும் என்று எண்ணினேன். இந்த நூலையும் எடுத்துக் கொண்டு நானும், நண்பர் டாக்டர் ஷு ஹிகோசகாவும் சர்ரே நோக்கிச் சென்றோம். எழில் மிகுந்த இங்கிலாந்து நாட்டின் நாட்டுப்புறக் காட்சிகள் எங்கள் உள்ளங்களை மகிழ்வித்தன. அருமையான இயற்கைச்சூழலின் மத்தியில் டாக்டர் ஜான்மார் அவர்களின் பங்களா இருந்தது. எங்களை டாக்டர் ஜான்மார் அவர்களும், அவரது மனைவியும் அன்புடன் வரவேற்றனர்.

இங்கிலாந்து நாட்டில் தமிழ்க் கல்விக்குரிய வாய்ப்புகள் குறைந்துகொண்டே வருவது பற்றி டாக்டர் ஜான்மார் மிகவும் வருத்தப்பட்டுக்கொண்டேயிருந்தார். இந்நாட்டின் சிறந்த தமிழ் அறிஞர்களுள் டாக்டர் ஜான்மார், டாக்டர் ஆஷர் ஆகியோர் குறிப்பிடத்தகுந்தவர். டாக்டர் ஜான்மார் ஓய்வு பெற்றதால் அந்த இடம் காலியாகவே இருந்தது. அமெரிக்க நாட்டில் உள்ள ஓர் அறிஞரைத் தமிழ்க் கல்விக்காக அங்கு நியமிக்க முயன்றபோதிலும், அவர் பணியில் சேரச் சற்று தயக்கம் காட்டுவதாக நான் அறிந்துகொண்டேன். மிகவும் புகழ்பெற்ற கீழ்த்திசை ஆப்பிரிக்கக் கல்வி ஆராய்ச்சி நிறுவனத்தில் தமிழ்

ஆய்விற்குரிய இடம் காலியாக இருந்ததால், தமிழ் ஆய்வின் எதிர்காலம் இங்கிலாந்து நாட்டில் இருண்டு விடுமோ என்று அந்த பிறநாட்டுத் தமிழ் அறிஞர் அதிகமாக வேதனைப்பட்டுக் கொண்டேயிருந்தார். அவரது மனைவி தமிழ் ஆராய்ச்சி தொடர்பான எங்களது சுவையான விவாதங்களில் கலந்துகொண்டார். டாக்டர் ஜான்மார் கர்நாடக இசை பற்றிய ஆய்விலேயே இப்பொழுது தனது காலத்தைக் கழித்து வருகிறார். ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் முயற்சிகளையும் சாதனைகளையும் அவர் வியந்து பாராட்டினார். தமிழ்ச் சுவடிகளின் பாதுகாப்பில் நிறுவனம் எடுத்துள்ள முயற்சிகளை அவர் மனமார வாழ்த்தினார்.

இலண்டனிலுள்ள இந்தியா ஹவுஸ் நூலகத்தின் நூல்கள், சுவடிகள் பற்றிய விரிவான அட்டவணையை டாக்டர் ஜான்மார் அவர்கள் தயாரித்து வைத்திருந்தார். அதை வெளியிடுவதற்கு யாருமே முன்வரவில்லை என்று வருந்தினார். இதனை வெளியிடுவதற்குரிய முயற்சிகளை ஆசியவியல் ஆய்வு நிறுவனம் மேற்கொள்ளலாம் என்று அவர் கருத்துத் தெரிவித்தார். டாக்டர் ஜான்மார் அவர்கள் எங்களோடு இலண்டனுக்கு வருவதாகவும், கீழ்த்திசை ஆப்பிரிக்க ஆராய்ச்சி நிறுவனத்தில் மாலை நடைபெறும் கூட்டத்திற்கு எங்களை அழைத்துச் செல்வதாகவும் குறிப்பிட்டார். நாங்களும் இசைவு தந்தோம். எங்களது கார்கள் இலண்டனை நோக்கி மீண்டும் விரைந்தன.

அன்று நான்கு மணியளவில் இலண்டனின் பெயர்பெற்ற கல்வி நிறுவனமான கீழ்த்திசை ஆப்பிரிக்கப் பண்பாட்டு ஆய்வு மையத்திற்கு டாக்டர் ஜான்மாரோடு நானும், ஜப்பானிய நண்பரும் வந்து சேர்ந்தோம். அந்நிறுவனத்தின் இயக்குநர், ஆய்வு அலுவலர்கள், கீழ்த்திசை ஆய்வில் ஆர்வம் காட்டும் பல அறிஞர்கள் ஆகியோரை டாக்டர் ஜான்மார் அவர்கள் எங்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார்கள். இந்த நிறுவனத்தில் சிங்கள மொழிப் பேராசிரியராகப் பணியாற்றிய அறிஞர் ஒருவரின்

பிரிவு உபசார விழா அங்கு நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில் பங்குகொள்ளுமாறு டாக்டர் ஜான்மார் வற்புறுத்தியபோது நாங்கள் இசைவு தெரிவித்தோம். விடைபெற்றுச் செல்லும் சிங்கள அறிஞர் இந்த நிறுவனத்தில் சிங்கள ஆய்வுக்கு எதிர்காலத்தில் இடம் இல்லாமல் போய்விடுமோ என்று தான் அஞ்சுவதாகத் தெரிவித்தார். கீழ்த்திசை ஆய்வில் பிரிட்டன் காட்டும் ஆர்வம் குறைந்துகொண்டே வருவதற்கு அவர் வருத்தம் தெரிவித்தார். பக்கத்தில் இருந்த டாக்டர் ஜான்மார் அவர்கள் தமிழ் ஆய்வின் எதிர்காலமும் இங்கு இப்படித்தான் இருக்கும் என்று தான் அஞ்சுவதாக என்னிடம் குறிப்பிட்டார். இந்த விழா கீழ்த்திசை மொழி ஆய்வில் பிரிட்டிஷ் அரசுக்கு ஆர்வம் குறைந்து வருவதையும், இதுபோன்றவற்றிற்கு நிதியுதவி செய்வதற்கு அது தயங்குவதையும், காலப்போக்கில் இத்தகைய ஆய்வுத் துறைகள் அழிந்து போவதற்குரிய நிலை ஏற்படலாம் என்பதையும் எங்களுக்குத் தெரிவித்தன. பிரிட்டனில் ஏராளமான இந்தியத் தமிழர்களும், இலங்கைத் தமிழர்களும் வாழ்கின்றனர். பிரிட்டிஷ் அரசு நிதியுதவி செய்யத் தயங்கும் நிலையில், வசதிபடைத்த நிலையிலுள்ள தமிழர்களாவது தமிழ் ஆய்வு இங்குத் தொடர்வதற்குத் துணைக்கரம் நீட்டுவார்கள் என்று நான் குறிப்பிட்டதை டாக்டர் ஜான்மார் அவர்கள் மிகுந்த சந்தேகத்துடன் ஒத்துக்கொள்வது போன்று தலையசைத்தார். தமிழர்கள் பல உயர்நிலைகளில் அந்த நாட்டில் பதவி வகிக்கின்றனர். ஏராளமான இலங்கைத் தமிழர்கள் உயர் அதிகாரிகளாகவும் வழக்கறிஞர்களாகவும் பணி புரிகின்றனர். இவர்களுடைய தமிழ் உணர்வு எப்படியிருக்கிறது என்பதை மாலையில் நடக்கும் கூட்டத்தில் பார்த்துவிடலாம் என்று ஜப்பானிய நண்பரிடம் கூறிவிட்டு டாக்டர் ஜான்மார் அவர்களிடமிருந்து விடைபெற்றுக் கொண்டோம்.

## 26. தமிழ் மண்ணில் நான்

அடுத்த நாள் நாங்கள் இருவரும் பிரிய வேண்டும். காலைப்பொழுதில் இலண்டன் நகரின் சில பகுதிகளைப் பார்த்துவிட்டு நான் எனது இந்தியப் பயணத்தைத் தொடர இலண்டன் விமான நிலையத்தை நோக்கிப் புறப்பட்டேன். அன்று மாலை நண்பர் அங்கிருந்து ஜப்பான் செல்ல வேண்டும்.

திட்டமிட்ட பணிகளை வெற்றிகரமாக முடித்துவிட்டுத் தாயகம் நோக்கி விமானத்தில் பறப்பது நெஞ்சுக்கு அதிக மகிழ்ச்சி தந்தது. இரவு மூன்று மணியளவில் விமானம் துபாய் நகரத்திற்கு வந்திறங்கியபோது இன்னும் சில மணிநேரத்தில் தமிழகத்தின் மண்ணை மிதிக்கப்போகிறோம் என்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. காலை ஏழு மணியளவில் பிரிட்டிஷ் ஏர்லைன்ஸ் விமானம் சென்னையில் தரையிறங்கியது. ஆசியவியல் ஆய்வு நிறுவன அலுவலர்களும், நிர்வாக அலுவலர்களும், மூத்த அறிஞர்களான டாக்டர் சண்முகம் பிள்ளை போன்றோர்களும் விமான நிலையத்தில் குழுமியிருந்து மலர் மாலைகள் சூட்டி வரவேற்றபோது செயற்கரிய செயலைச் செய்து முடித்து விட்டோம் என்று பெருமிதம் கொண்டேன். இந்நிறுவனத்தின் கன்னடமொழிப் பேராசிரியர் டாக்டர் கோபால கிருஷ்ணா, சுவடியியல் துறைத் தலைவர் டாக்டர் ஆ. தசரதன், சுவடியியல் துறைப்பேராசிரியர் டாக்டர் பூ. சுப்பிரமணியம், நிறுவனத்தின் ஆய்வு அலுவலர்கள், நிறுவனத்தின் நிர்வாக அலுவலர்கள்

உதவத் தயாராக இருப்பதாகக் கூட்டத்தின் பல அங்கத்தினர்களும் உணர்ச்சிபொங்க உறுதிமொழி பூண்டனர்.

பண்பாட்டுத் தனித்தன்மையை இழந்துவிட்டதால், ஈழத் தமிழர்களாகிய நாங்கள் நாட்டை இழந்து அகதிகளாக ஆங்காங்கே வாழவேண்டிய நிலை ஏற்பட்டது. இது எங்கள் தாய்த் தமிழகத்துக்கு ஏற்படாமல் பார்த்துக்கொள்ளுங்கள் என்று உணர்ச்சி பொங்கக் கண்களில் கண்ணீர் மல்கச் சில இலங்கைத் தமிழர்கள் கூறியது எங்களை நெகிழ்ச்சியடையச் செய்தது. நாட்டை இழந்து, வீட்டை இழந்து, குடும்பத்தினரைக் காலனின் கையில் ஒப்படைத்துவிட்டு, திக்கற்ற மனிதர்களாக இலண்டனில் நாங்கள் வாழும் நிலை தாய்த் தமிழக மக்களுக்கு எக்காலத்திலும் ஏற்பட்டுவிடக்கூடாது என்று மீண்டும் மீண்டும் கூறினர். டாக்டர் வேலன், திரு. கணேசன், திரு. ஸ்ரீ ஸ்கந்தராஜா போன்றோர்கள் தமிழ்ப் பண்பாடு, பிரிட்டனில் தலை நிமிர்ந்து நிற்பதற்குச் செய்யும் முயற்சிகள் அனைத்தும் எங்களை வியக்கவைத்தன. பரதநாட்டியம், தமிழக நாட்டுப்புறக்கலைகள் போன்ற ஏராளமான நிகழ்ச்சிகளை அங்கு அடிக்கடி நிகழ்த்துகின்றனர். தமிழர்கள் பல்வேறு அமைப்புகளை அமைத்துக்கொண்டு வாழ்வது நெஞ்சுக்கு நிறைவு தந்தது. கடல் கடந்து அந்நிய நாடுகளில் வாழும் தமிழர்கள் தாயகத்தை ஏக்கப் பெருமூச்சோடு பார்க்கின்றனர். தாயகத்திலிருந்து வருவோரை நேசக்கரம் நீட்டிப் பாசத்தோடு அழைக்கின்றனர். தாய்மொழி மீது உணர்ச்சி பூர்வமான பற்றினை வைக்கின்றனர். நீண்டநேரம் அங்குள்ள தமிழர்களோடு உறவாடிக்கொண்டிருந்தது நெஞ்சுக்கு மகிழ்ச்சி தந்தது. பலநாட்களாகத் தமிழில் பேசாத வருத்தம் தீரும் மட்டும் அவர்களோடு தமிழில் பேசிப்பேசி மகிழ்ந்தேன்; தமிழ்நாட்டு மரபுப்படி அமைந்த உணவு வகைகளை அருந்தினோம். அன்றிரவு முழுவதும் நீண்டநேரம் தூங்காது தொடரவேண்டிய ஆய்வுப்பணி பற்றி நானும், நண்பரும் பேசிக்கொண்டிருந்தோம்.

## 25. இலண்டன்வாழ் தமிழர்கள்

மாலை ஏழு மணிக்குக் கூட்டம் நடக்க இருக்கின்ற தமிழ் இல்லத்தை (Thamil House)நோக்கி எங்கள் கார் விரைந்தது. தமிழ் மக்கள் ஒன்றாக இணைந்து அந்தக் கட்டிடத்தைப் பிரிட்டனில் கட்டி எழுப்பியிருந்தார்கள். ஏழு மணிக்கு ஏராளமான தமிழர்கள் அங்குக் கூடி எங்களை உற்சாகத்துடன் வரவேற்றனர். அக்கூட்டத்தில் பெரும்பாலானோர் யாழ்ப்பாணத் தமிழர்களாக இருந்தனர். சில போராளி அமைப்புக்களைச் சேர்ந்த தமிழர்களும் அங்கு வந்திருந்தனர். வழக்கறிஞரும், தமிழ் அறிஞருமாகத் திகழும் திரு ஸ்ரீ ஸ்கந்தராஜா கூட்டத்தில் வரவேற்புரை நிகழ்த்தினார். இந்துக் கலைக் களஞ்சியத்தை இலங்கையில் தயாரித்து வரும் டாக்டர் வேலன் அவர்கள் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் பணிகளையும், வார்சா நோக்கிய எங்களது பயண நிகழ்ச்சிகளையும் குறித்து நான் விரிவுரையாற்றினேன். விரிவுரை முடிந்ததும் கலந்துரையாடல் நடைபெற்றது. தமிழர்கள் தங்கள் பண்பாட்டின் தனித்தன்மையை (Cultural identity) இழந்து வருவது தமிழ் இனத்திற்குப் பெரும் கேட்டினை ஏற்படுத்தியுள்ளது. எனவே தமிழ்ப்பண்பாட்டைக் காப்பதற்கும், அதற்குப் புத்துயிர் நல்குவதற்கும், அதனை உலக அரங்குக்கு எடுத்துச்செல்வதற்கும் ஆசியவியல் ஆய்வு நிறுவனம் மேற்கொள்ளும் அனைத்து முயற்சிகளிலும் தோள் கொடுத்து

ஆகியோரை விமான நிலையத்தில் என் குடும்பத்தினரோடும், உறவினர்களோடும் கண்டபோது நெஞ்சம் பேருவகை கொண்டது. கடல் கடந்து பல நாடுகளையும் கடந்து போலந்து நாட்டின் தலைநகரில் யுனெஸ்கோ வல்லுநர்குழுவினர் மத்தியில் தமிழ் ஓலைச்சுவடிகளைக் காப்பதற்குரிய வழிவகைகளை விவாதித்து, தமிழ் மொழியின் பெருமையை எடுத்தியம்பி மீண்ட செயல் ஒரு கனவு போன்றே இருந்தது. சிக்காகோ நகரில் நடந்த உலக சமய மாநாட்டில் கலந்துகொண்டு இந்து சமயத்தின் பெருமையைப் பலரும் வியக்கச் சொற்பொழிவாற்றித் தாயகம் திரும்பிய விவேகானந்தரின் பயணத்திற்கு என்னுடைய பயணம் எந்தவிதத்திலும் குறைந்ததல்ல என்று நண்பர்கள் சிலர் குறிப்பிட்டபோது நெஞ்சம் உண்மையிலே பெருமிதம் கொண்டது. எனது பயணம் பற்றிய நீண்ட கட்டுரை யொன்றினைத் தினமணி நாளிதழ் வெளியிட்டுச் சிறப்பித்தது.

சென்னை வந்து சேர்ந்ததும் ஓலைச்சுவடிகளின் பாதுகாப்புத்தொடர்பாக மேற்கொள்ள வேண்டிய முயற்சிகள் பற்றி விரிவாகச் சிந்திக்கத் தொடங்கினேன். யுனெஸ்கோ வல்லுநர் குழுக்கூட்டம் அழிந்துகொண்டிருக்கும் அரிய அறிவுக் கருவூலங்களைக் காப்பது தொடர்பாகப் பல்வேறு புதிய வெளிச்சங்களை எனக்கு நல்கியது. இந்த வெளிச்சத்தின் ஒளியில் நிறுவனத்தின் சுவடியியல் துறையின் செயல்பாடுகளை அமைக்கத் திட்டமிட்டேன். தமிழ் ஓலைச்சுவடிகளின் நிலை பற்றி விளக்கமாக நாங்கள் அறிந்திருந்தபோதிலும், பிற இந்திய மொழிகளிலுள்ள ஓலைச்சுவடிகளின் நிலை என்ன என்பது பற்றிய தெளிவு எங்களுக்கு ஏற்படவில்லை. இது தொடர்பாக இந்திராகாந்தி தேசியக்கலை மையம் போன்ற பல நிறுவனங்களை நான் தொடர்பு கொண்டபோதிலும் நான் எதிர்பார்த்த தகவல்கள் கிடைக்கவில்லை. இந்திராகாந்தி தேசியக் கலைமையத்தின் சுவடிப் பகுதியின் ஆலோசகராகத்திகழும் டாக்டர் சத்காரியா

முகோபாத்தியாயா பல நிலைகளிலும் இது தொடர்பாக எனக்கு நெறிப்படுத்துதல்கள் நல்கினார்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் பௌத்த சமயத்தின் தற்கால நிலை குறித்து எங்களுக்கு இதுபோன்ற ஐயம் ஒன்று ஏற்பட்டது. தமிழ், மலையாளம் போன்ற மொழிகளிலுள்ள தற்கால இலக்கியங்களில் பௌத்தச் சிந்தனைகளின் தாக்கம் ஆழமாக வேர்விட்டு இருப்பதைக் கண்ட நாங்கள் பிற இந்திய இலக்கியங்களிலும் பௌத்தம் ஆதிக்கம் செலுத்தியுள்ளதா என்பதைக் காண விழைந்தோம். இதன் விளைவாக 1991 இல் தற்கால இந்திய இலக்கியங்களில் பௌத்த சிந்தனைகளின் தாக்கம் என்ற தலைப்பில் ஒரு பெரிய தேசியக்கருத்தரங்கினை நடத்தினோம். அதில் 23 இந்திய மொழிகளில் உள்ள வல்லுநர்களை அழைத்து அம்மொழிகளின தற்கால இலக்கியங்களில் பௌத்தம் ஏற்படுத்தியுள்ள தாக்கம் பற்றிக்கட்டுரைகள் படிக்கக்கூறினோம். Buddhist Themes in Modern Indian Literature என்ற தலைப்பில் இக்கட்டுரைகளைத் தனி நூலாக வெளியிட்டோம். இந்தக் கருத்தரங்கு எங்களுக்குப் பௌத்தம் தொடர்பாகப் பல புதிய வெளிச்சங்களை நல்கியது. வரி வடிவங்களைத் தாங்கியுள்ள இந்திய நாட்டின் 22 மொழிகளிலும் பௌத்தம் சார்ந்த அல்லது பௌத்தம் தழுவிய இலக்கியங்கள் இருப்பதைக் கண்டு நாங்கள் வியந்தோம்.

மேற்கூறியது போன்ற ஒரு தேசியக் கருத்தரங்கினை நடத்தும்போது பிற இந்திய மொழிகளிலுள்ள ஓலைச்சுவடிகளின் நிலையை நன்றாக அறியமுடியும் என்று நான் கருதினேன். நிறுவனத்தின் பல்வேறு துறைத்தலைவர்களை அவசரமாக அழைத்து இது பற்றி உரையாடினேன். அவர்களும் இத்திட்டத்தினை வரவேற்றனர். ஓலைச்சுவடிகள் பற்றிய தேசியக் கருத்தரங்கு நடத்துவது பற்றி ஜப்பானிய நண்பரோடு தொலைபேசியில் தொடர்பு கொண்டபோது அவரும்

மகிழ்ச்சியுற்றார். இதற்குரிய நிதியுதவியினை இலண்டனிலுள்ள வெல்கம் அறக்கட்டளையிலிருந்து பெறுவதற்கு நான் மேற்கொண்ட முயற்சிகளும் வெற்றியளித்தன.

பல்வேறு இந்திய மொழிகளைச் சார்ந்த சுவடியியல் அறிஞர்களோடு தொடர்பு கொண்டேன். பதினைந்திற்கும் மேற்பட்ட இந்திய மொழிகளில் ஓலைச்சுவடிகள் இருப்பது பற்றி அறிய முடிந்தது. மேலும் கிரந்தம், தேவநாகரி போன்ற வரிவடிவங்களில் இந்திய மொழிகளின் ஓலைச்சுவடிகள் இருப்பதைத் தெரிந்துகொள்ள முடிந்தது. தேசியக் கருத்தரங்கு நடத்தும் திட்டத்தை ஓலைச்சுவடிகளின் ஆய்வில் ஈடுபட்டுள்ள இந்திய நாட்டு அறிஞர்கள் அனைவரும் பாராட்டிக் கடிதம் எழுதினர். 1994 ஆம் ஆண்டு மே மாதம் நடத்துவதற்குத் திட்டமிட்டுள்ள இக்கருத்தரங்கு அழிவு நிலையிலுள்ள இந்திய ஓலைச்சுவடிகள் எவ்வளவு என்பதை ஓரளவிற்குத் தெரிவிக்கும் என்று எண்ணுகிறேன். இது தமிழ் ஓலைச்சுவடிகள் மட்டுமின்றி, இந்தியத் திருநாட்டின் பிறமொழிகளிலுள்ள ஓலைச்சுவடிகளையும் காக்க வேண்டும் என்ற எங்கள் முயற்சிக்குப் பல நிலைகளிலும் துணைபுரியும் என்பது உறுதி. இக்கருத்தரங்கமும், இதைத் தொடர்ந்து மேற்கொள்ளும் முயற்சிகளும் இந்நிறுவனத்தின் சுவடியியல் ஆய்வுப்புலம் இந்திய நாட்டு அறிவு வளர்ச்சியிலும், அறிவுச் செல்வங்களைக் காக்கும் முயற்சியிலும் ஆற்றியுள்ள அல்லது ஆற்றப்போகும் பங்களிப்பின் நிலையை நிர்ணயம் செய்யும் அளவுகோலாக அமையும். இப்பணிகளின் மூலம் ஓரளவிற்கு அழிவு நிலையில் இருக்கும் இந்நாட்டு அறிவுக் கருவூலங்களைப் பாதுகாக்க முடியும் என்ற அசைக்கமுடியாத நம்பிக்கை என்றும் எனக்கு உண்டு. இப்பணியைச் செயல்படுத்த மேற்கொண்டுள்ள பயணத்தை நான் நினைக்கும்போதெல்லாம்

இம் முயற்சியில் என்னுடன் இணைந்து பணியாற்றும் இந்நிறுவனத்தின் அலுவலர்களும், பணியாளர்களும் என் கண்முன் நிற்கின்றனர்.

இந்த மண்ணில் எத்தனையோ பல்கலைக்கழகங்கள் முளைத்து வளர்ந்துள்ளன. எத்தனையோ ஆய்வுநிறுவனங்களும் அரும்பி மலர்ந்துள்ளன. தமிழால் வாழ்ந்த எத்தனையோ பேராசிரியர்களை இந்தத் தமிழ்மண்ணும் கண்டுள்ளது. தமிழ் விலைகூறும் வணிகர்களான எத்தனையோ நூல் வெளியீட்டாளர்களும் இங்குத் தோன்றி மறைந்து விட்டனர். தமிழை மூலதனமாக வைத்து அரசியல் வாணிபம் செய்த எத்தனையோ அரசியல்வாதிகளையும் இந்தநாடு சந்தித்துள்ளது. இப்படித் தமிழால் வாழ்வும் வளமும் பெற்ற எந்த ஒரு தனிமனிதனும் அல்லது அமைப்பும் அழிந்துகொண்டிருக்கும் தமிழிலக்கியக் கருவூலங்களைக் காக்கும் முயற்சிகளைத் திட்டமிட்டு மேற்கொள்ளவில்லையே. இத்தகைய பெருமுயற்சியில் அல்லும் பகலும் பாராது உழைக்கும் இந்த நிறுவனத்தின் அலுவலர்களை இந்தத் தமிழுலகம் என்றும் மறவாது போற்றும். தமிழ்நாட்டின் ஒரு மூலையில் ஏற்றிவைக்கப்பட்ட இந்தச் சிந்தனை விளக்கு வார்சா வரையில் ஒளிவீசக். காரணமாக இருந்தவர்கள் எங்கள் நிறுவன ஆய்வாளர்களே. எனது கரங்களுக்கு வலுவூட்டும் அவர்களால் எனது எண்ணங்களெல்லாம் செயல்வடிவம் பெறுவதை நான் உளமார உணர்கிறேன். ஆம் என் முயற்சி ஒரு தனி மனிதனின் முயற்சியல்ல; இது ஒரு கூட்டு முயற்சி. ஒத்த சிந்தனையுள்ள பலரோடு இணைந்து நான் மேற்கொள்ளும் பயணம் இது என்பதை நினைக்க நினைக்க நெஞ்சம் மகிழ்கிறது.

# இணைப்பு

## A tentative list of the Tamil Palm-leaf Manuscripts available in various places

| S.No. | Address | Manuscripts |
|---|---|---|
| 1. | Government Oriental Manuscripts Library, Madras-600 005. | 15,000 |
| 2. | Institute of Asian Studies, Madras-600 041. | 1,400 |
| 3. | International Institute of Tamil Studies, Madras-600 113. | 460 |
| 4. | National Library, Calcutta. | 355 |
| 5. | Saraswathy Mahal Library, Tanjavur. | 2,300 |
| 6. | Cāntaliṅka aṭikaḷār, Tamil College ,Pērūr, Coimbatore District . | 350 |
| 7. | College of Indian Medicine, Pāḷaiyamkōṭṭai. | 300 |
| 8. | Siddha Medical Research Centre, Madras-600 029. | 1,000 |
| 9. | Directorate of Indian Medicine and Homeopathy, Madras-600 108. | 900 |
| 10. | Dr. U.V.S. Library, Madras-600 091. | 3,200 |
| 11. | Tamil University, Tañcāvūr | 5,000 |
| 12. | Kerala University Oriental Manuscripts Library | 3,300 |
| 13. | St. Xaviers College, Pāḷaiyamkōṭṭai. | 75 |

| | | |
|---|---|---|
| 14. | Adyar Library, Madras-600 020. | 1,500 |
| 15. | Cittāmūr Mutt, Cittāmūr. | 190 |
| 16. | Toṇṭaimaṇṭala Ātiṉam, Kāñcīpuram. | 93 |
| 17. | Kuntar Kuntar Kalvi Nilaiyam, Poṉṉūrmalai, Vaṇakkampāṭi. | 100 |
| 18. | Kaumāra Mutt, Ciravaṇapuram. | 100 |
| 19. | Mayilam Mutt | 100 |
| 20. | Pōrūr Mutt, Tiruppōrūr. | 50 |
| 21. | French Institute of Indology, Pondicherry. | 1,200 |
| 22. | Government Museum, Erode. | 113 |
| 23. | Venkateswara Oriental Research Institute Library, Tiruppathy. | 1,200 |
| 24. | Andhra University, Waltair. | 200 |
| 25. | Osmania University, Hyderabad. | 250 |
| 26. | Kalaimakaḷ Kalvi Nilaiyam, Erode, Periyār Dist. | 180 |
| 27. | Calicut University, Kerala. | 200 |
| 28. | Tuṟaiyūr Vīracaiva Mutt, Tuṟaiyūr. | 300 |
| 29. | Kāñci Kāma Kōṭi Pīṭam, Kanchipuram. | 400 |
| 30. | Annamalai University, Chidambaram. | 300 |
| 31. | Tarumapura Ātiṉam, Tarumapuram. | 300 |

| | | |
|---|---|---|
| 32. | Tiruvāvaṭuturai Mutt, Tañcāvūr District. | 1,265 |
| 33. | Madurai Kamaraj University, Madurai-625 021. | 300 |
| 34. | Madurai Tamil Sangam, Madurai - 625 001. | 420 |
| 35. | East India Collection of Tamil Manuscripts. Mysore, Karnataka. | 63 |
| 36. | India Office Library, London. | 34 |
| 37. | Wellcome Medical Research Institute, London. | 2 |
| 38. | British Museum, London. | 99 |
| 39. | The Library of the Royal Asiatic Society, London. | 37 |
| 40. | The Library of the Edinburgh University, Edinburgh. | 6 |
| 41. | National Library of Scotland, Edinburgh | 4 |
| 42. | Huntanian Library of Glascow University | 10 |
| 43. | John Rylands Library, Manchester. | 11 |
| 44. | The Library of Cambridge University | 20 |
| 45. | Trinity College Dublin, Ireland. | 1 |
| 46. | Bodleian University, Oxford. | 16 |
| 47. | Austria | 16 |
| 48. | Czech | 9 |
| 49. | Federal Republic of Germany | 3 |
| 50. | Finland | 2 |

| | | |
|---|---|---|
| 51. | Denmark | 16 |
| 52. | German Democratic Republic | 14 |
| 53. | Italy | 26 |
| 54. | Norway | 9 |
| 55. | Portugal | 17 |
| 56. | Scotland | 11 |
| 57. | Sweden | 29 |
| 58. | USSR | 4 |
| 59. | Belgium | 4 |
| 60. | England | 59 |
| 61. | France | 63 |
| 62. | Netherland | 6 |
| 63. | Poland | 1 |
| 64 | Republic of Ireland | 15 |
| 65. | Spain | 2 |
| 66. | Switzerland | 5 |
| 67. | Vatican City | 2 |
| 68. | Private Collections | 10,000 (app) |
| | Total | 53,020 |




யுனெஸ்கோ வல்லுநர்குழு கூட்டத்தில் நூலாசிரியருடன்
ஜப்பானியத் தமிழறிஞர் டாக்டர் ஷு ஹிகோசகா அவர்கள்